# எனக்கு என்னதான் வந்து விட்டது?

எனக்கு எப்பொழுதும் ஒரே சோர்வு. எதற்கெடுத்தாலும் எரிச்சலும் சிடுசிடுப்புமாய் இருந்தேன். அக்கம்பக்கத்தவர்கள் கூட என்னிடமிருந்து ஒதுங்கியே இருந்தார்கள்!

எங்கள் டாக்டர் என் சோர்வைப் போக்க வழி சொன்னார். சரியான போஷாக்கின்மைதான் சக்திக் குறைவுக்கு காரணம் என்றார். ஹார்லிக்ஸ் அருந்தும்படி சொன்னார்.






ஹார்லிக்ஸ் விரைவிலேயே எனக்கு சக்தியளித்தது! அதோடு என் பழைய தெம்பும் தலைதூக்கியது. ஹார்லிக்ஸ் என் வாழ்க்கையை மீண்டும் மகிழ்ச்சிகரமாக்கியது!

குறைந்த போஷாக்கின் காரணமாக சோர்வு ஏற்பட்டால் ஹார்லிக்ஸ் பருகும்படி டாக்டர்கள் சிபாரிசு செய்கிறார்கள். ஆடைச்சத்து நிறைந்த பால், கோதுமை மாவு, மால்ட் பார்லி இவற்றின் போஷாக்குச் சத்துக்களை நிறையகொண்ட ஹார்லிக்ஸ் விரைவிலேயே புதிய சக்தியை அளிக்கிறது. ஹார்லிக்ஸ் பருகுவதற்கு சுவையானது...பலனளிப்பதில் நிகரற்றது. அது உங்களுக்கும் நிச்சயமாகப் பலனளிக்கும்.




**ஹார்லிக்ஸ்**

*அதிக சக்தி யளிக்கிறது!*

# கல்கி


## பொருளடக்கம்

**பிலவங்க, சித்திரை 17 - ஏப்ரல் 30**





## நினைவுத்திரையில்...



வனமாலி குமார் ஆறரை அடி உயரம்; அதற்குத் தகுந்த பருமன். கதர் ஜிப்பா கதர் சால்வை தோல்பை - இவைகளெல்லாம் கண்ணியமான மனிதர் என்று சொல்வதற்கு வேண்டிய தற்காலச் சாதனங்கள் அல்லவா?

ரயிலில் வனமாலியின் எதிரில் உட்கார்ந்திருந்த கறுத்த மனிதர் வைத்த விழி மாறாமல் வனமாலியையே பார்த்துக் கொண்டிருந்தார். பிறர் தம்மை அப்படி உற்றுப் பார்ப்பதை எண்ணி வனமாலி எப்போதுமே கவலைப் பட்டது கிடையாது. இப்படிப் பல மனிதர்களின் கண் பார்வை பட்டுப் பட்டுத் தான் உலகில் பல சாதாரண மனிதர்களெல்லாம் பிரபல மனிதர்களாகி விட்டார்கள் என்பது அவருடைய திடமான அபிப்பிராயம்.

- கி. ரா. கோபாலன்

சந்திப்பு என்ற சிறுகதையில் ஒரு பகுதி
கல்கி, ஏப்ரல் 4, 1948

## பிரபல திருமணம்



மணமகள் : மீரா B. A. - மணமகன் : ராம்சந்த் B. E.

ரிடையர்டு அக்கவுண்டெண்ட் ஜெனரல் ஸ்ரீ வி. டி. ஸ்ரீநிவாசன் அவர்களின் குமாரத்தி சௌ. மீரா B. A. க்கும் ரிடையர்டு இன்கம் டாக்ஸ் ஆபீஸர் ஸ்ரீ சி. ஆர். கிருஷ்ணராவ் அவர்களின் குமாரர் சிரஞ்சீவி ராம்சந்த் B. E. க்கும், சென்னையில் 22-3-67ல் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. அதையொட்டி பெங்களூரில் 26-3-67 அன்று நடைபெற்ற வரவேற்புக்கு நகரப் பிரமுகர்களும், நண்பர்களும், உறவினர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சிறப்பித்தனர். வரவேற்பின் போது ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது.


ராஷ்டிரபதி பதவி
மந்திரி சபை
கட்சி
PK

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 ☐ இதழ் 39



# ராஷ்டிரபதித் தேர்தல்

**கா**ங்கிரஸ் கட்சிக்குள்ளேயே ராஷ்டிரபதி பதவிக்கான அபேட்சகர் குறித்து மாறுபாடுகள் நிலவியதால், எதிர்க் கட்சிகள் ஸுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதி ஸ்ரீ சுப்பாராவ் அவர்களை வேட்பாளராக அறிவித்தது. காங்கிரஸின் சார்பில் எந்த அபேட்சகரின் பெயரும் வெளியிடப்படாத சமயம் அது. அத்தருணத்தில் ஸ்ரீ சுப்பாராவ் அவர்களையே காங்கிரஸும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று எதிர்க் கட்சிகள் விரும்பின. ஏனெனில், ஸ்ரீ சுப்பாராவ் அத்தகைய சிறப்பான தகுதிகள் பொருந்தியவர். அரசியல் சாஸனத்தின் காப்பாளராக விளங்குவதே ராஷ்டிரபதியின் தலையாய கடமை என்பதை நோக்குமிடத்து, சட்ட நிபுணரான ஸ்ரீ சுப்பாராவ் அவர்களைவிட அப்பதவிக்குத் தகுதி பெற்றவர் யாருமில்லை என்பதில் ஆட்சேபணைக்கிடமில்லை. சாதாரணமாக ராஜ்யங்களின் பிரதம நீதிபதியே அவசியம் ஏற்படும்போது கவர்னரின் பொறுப்பை ஏற்பதைப் பார்க்கும்போது, தேசத்தின் பிரதம நீதிபதிப் பதவியும், ராஷ்டிரபதிப் பதவியும் ஒரே போன்ற அந்தஸ்துப் பெற்றவை என்பதும், பிரதம நீதிபதியாயிருந்தவர் ராஷ்டிரபதியாவதில் ஒரு விசேஷப் பொருத்தம் உள்ளதென்பதும் புலனாகும். எல்லாவற்றுக்கும் மேலாக ஸ்ரீ சுப்பாராவ் அவர்கள் எந்த அரசியல் கட்சியுடனும் எக்காலத்திலும் தொடர்பு கொள்ளாதவர். எனவே, நடுநிலைமைக்கு மூர்த்தியான ராஷ்டிரபதி பதவிக்கு அவர் பெற்றுள்ள தனியான தகுதியை அனைவரும் ஒப்ப வேண்டியதாகும்.

அனைவரும் ஒப்ப வேண்டிய இவ் விஷயத்தைத்தான் காங்கிரஸ் ஒப்ப மறுத்தது. ராஷ்டிரபதித் தேர்வைக் கொண்டு கட்சியின் பலத்தைக் கணிக்க வேண்டும் என்றும், இந்தியாவின் 'மதச் சார்பின்மை'யைப் பிரகடனம் செய்ய இத்தேர்வை ஒரு வாய்ப்பாக்கிக் கொள்ள வேண்டும் என்றும் அது கருதியது. அதாவது ராஷ்டிரபதித் தேர்வுக்கு நேரடியாகச் சம்பந்தமில்லாத விஷயங்களை முக்கியமாகக் கருதி, அந்தத் தொடர்பற்ற இனங்களின் அடிப்படையில் ஒரு முடிவுக்கு வந்தது. இதில் கட்சிக்குள்ளேயே இருந்த மாறுபாடுகளும் ஒருவாறு பூசி மெழுகப் பெற்று உபராஷ்டிரபதி டாக்டர் ஜாகிர் ஹுஸைன் அவர்கள் தற்போது காங்கிரஸ் வேட்பாளராக நிறுத்தப்பட்டிருக்கிறார்.

பொதுத் தேர்தல்கள் தந்த முடிவுக்குப் பிறகு அறிவு விளக்கம் பெற்று, எதிர்க்கட்சிகள் விரும்பியபடி ஏகோபித்த தேர்வுக்குக் காங்கிரஸ் இணங்கியிருந்தால் எவ்வளவோ கௌரவமாயிருந்திருக்கும். ஜனநாயகத்தைப் பலப்படுத்தவும் ஐக்கிய முடிவு உதவியிருக்கும். ஆனால் இது நடக்கவில்லை. பிரதமரின் உறுதிப்பாட்டின் மீது காங்கிரஸ் இம்முடிவுக்கு வந்திருப்பினும் சரி, அல்லது மற்றவர்களுடைய தவறான சிந்தனையின் மீது தங்கள் வேட்பாளரை நிறுத்த நினைத்திருந்தாலும் சரி மொத்தத்தில் இது ஒரு துர்ப்பாக்கிய முடிவாகும்.

கட்சி ரீதியில் முடிவுகள் எடுக்கப்பட்டுவிட்டன. இனி, ராஷ்டிரபதியைத் தேர்ந்தெடுக்கும் தகுதி பெற்றுள்ள சட்டசபையாளர் மீதும், பார்லிமென்ட் அங்கத்தினர் மீதுமே பெரும் பொறுப்புச் சார்ந்துள்ளது. அவர்கள் கட்சிக் கட்டுப்பாட்டின் கீழ் இயங்கும் வெறும் கருவியாயிருக்கப் போகிறார்களா? அல்லது தேச முக்கியத்துவம் வாய்ந்த மகத்தான ஒரு விஷயத்தில் சுதந்திரமாகச் சீர்தூக்கிப் பார்த்து முடிவெடுக்கப் போகிறார்களா?

சட்ட சபையாளரின் மனத்தைக் குழப்பும் வகையில் ஸ்ரீ சுப்பாராவ் அவர்களின் போட்டி குறித்துக் கண்டனங்கள் எழுந்துள்ளன. ராஷ்டிரபதிப் பதவி என்பது ஏதோ சர்க்கார் பார்த்

துக் கொடுக்கும் உத்தியோகம் போலக் கருதிச் சிலர், 'பிரதம நீதிபதி சர்க்கார் அதிகாரி ஆகலாமா?' என்கிறார்கள். இது தேசத்தின் பிரதிநிதிகள் அனைவரும் தேர்ந்தெடுத்து நியமிக்கும் ஒரு ஸ்தானம் என்பதையும், சர்க்காரின் நிருவாகத்தால் தரப்படும் உத்தியோகத்துக்கும் இதற்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள மாறுபாடு உண்டு என்பதையும் புரிந்து கொள்ளாமலே — அல்லது புரிந்து கொண்டதாகக் காட்டிக் கொள்ளாமலே — கண்டனக் குரலை எழுப்பியிருக்கிறார்கள். ராஷ்டிரபதிப் பதவிக்குப் போட்டியிடும் உரிமை மற்ற இந்தியக் குடிமக்களுக்கு உள்ளது போலவே நீதிபதிகளுக்கும் உண்டு. இதை அரசியல் சாஸனம் தடை செய்யவில்லை. நீதிபதிகள் கவர்னர்களாகவும், முதன் மந்திரிகளாகவும் ஆவதைப் பார்க்கிறோம். முன்பு ஒரே சமயத்தில் தில்லி அமைச்சரவையில் முன்னாள் நீதிபதி ஒருவரும், அவரால் குற்றம் விசாரிக்கப்பட்டுத் தம் பதவியை ராஜிநாமா செய்த ஒருவருமே சக மந்திரிகளாகப் பணியாற்றிய விந்தையை நாம் பார்த்திருக்கிறோம். ஒரு முன்னாள் நீதிபதி கட்சிச் சார்பு கொண்டு மந்திரி பதவி ஏற்கத் தடையில்லாத போது, பிரதம நீதிபதி தமது பதவியைத் துறந்துவிட்டு, கட்சிச் சார்பற்ற ராஷ்டிரபதிப் பதவிக்கு நிற்பது எப்படி முறையின்மை ஆகும்? இந்திய ராஷ்டிரபதியைவிட அதிக அதிகாரம் பெற்ற பதவி அமெரிக்க ஜனாதிபதியுடையது. அப்படியிருக்க, அங்கேயே 1916ல் சார்லஸ் ஈவான் ஹியூஸ் என்ற அமெரிக்க ஸுப்ரீம் கோர்ட் நீதிபதி ஜனாதிபதிப் பதவிக்குப் போட்டியிட்டிருக்கிறார். இதே போல் அமெரிக்காவின் இருபத்தேழாவது ஜனாதிபதியாக இருந்த டபிள்யூ. ஹெச். டாஃப்ட் உயர்நீதி மன்றத்தின் நீதிபதிப் பதவியை ஏற்றுக் கொண்டதும் உண்டு. ஜனநாயக மரபுகளில் அமெரிக்காவைவிட நாம் முன்னேறிவிட்டதாக நினைப்பது பேதைமை.

பிரதமரோ, உதவிப் பிரதமரோ பிரேரித்ததால் அபேட்சகருக்குத் தனி அந்தஸ்து எதுவும் ஏற்பட்டு விடாது. ராஷ்டிரபதிப் பதவிக்கு ஒருவரைப் பிரேரிக்க இந்தியப் பிரஜை எவருக்குமே உள்ள அளவுக்குத்தான் பிரதமருக்கும் உரிமை உண்டு. பிரதமரின் விசுவாசத்தை அபேட்சகர் பெற்றிருப்பாரா என்று யோசித்து, அவ்வாறு விசுவாசம் பெற்றவரையே தேர்வு செய்ய வேண்டும் என்றெண்ணுவதும் பொருந்தாது. பிரதமர் என்பவர் அவரது கட்சி, மக்கள் சபையின் நம்பிக்கையைப் பெற்றுள்ளவரையில்தான் பதவியிலிருக்க முடியும். மக்கள் சபை நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மூலம் சர்க்காரை — பிரதமரை — அகற்றிவிட ஏதுவுண்டு. ஆனால் ராஷ்டிரபதி நாட்டின் தலைவராக ஐந்தாண்டுகள் பதவி வகிப்பவர். எனவே, ராஷ்டிரபதி பிரதமருக்கு 'அடங்கினவராக'த்தான் இருக்க வேண்டும் என்று எண்ணுவது சாஸனக் கருத்துக்கு ஒவ்வாதது. மந்திரி சபையில் இல்லாத காங்கிரஸ்காரர்களைக் கொண்டே அபேட்சகரைப் பிரேரிக்கச் செய்து, பிரதமரும் உதவிப் பிரதமரும் ஒதுங்கியிருந்திருந்தால் கண்ணியமாக இருந்திருக்கும். ஆனால் ராஷ்டிரபதி என்பவர் மந்திரி சபையின் ரப்பர் ஸ்டாம்பாகவே ஜீவனற்றுப் பணி புரிய வேண்டும் என்ற ஆசை அடக்கவொண்ணாமல் பலமாக இருந்திருக்கிறது; இதை 'அடங்கிய' கட்சிக்காரர்களுக்கு வெளிப்படுத்த வேண்டும் என்றும் விரும்பியிருக்கிறார்கள். இதனால்தான் பிரேரணையில் மந்திரி சபை அங்கத்தினர்களும் பங்கு கொண்டிருக்கின்றனர்.

முன்பு உபராஷ்டிரபதியாக இருந்ததால் ஒருவர் ராஷ்டிரபதியாவதற்குத் தனித் தகுதி படைத்திருக்கிறார் என்று நினைப்பது சரியல்ல. இது சாதாரண சர்க்கார் உத்தியோகங்களைப் போல் ராஷ்டிரபதி பதவியையும் 'பிரமோஷன்' அடிப்படையில் அமைப்பதாகவே ஆகும். ராஷ்டிரபதியாவதற்குப் பூர்வாங்கமே உபராஷ்டிரபதிப் பதவி என்று நினைப்பது உப ராஷ்டிரபதிப் பதவியின் பெருமையைக் குறைப்பதாகவும் ஆகும்.

ராஷ்டிரபதித் தேர்தலுக்குக் கட்சிக் கொரடாவைப் பிரயோகித்து அங்கத்தினர்களைக் கட்டுப்படுத்துவது தகாது என்கிறார் ராஜாஜி. கொரடாப் போடுவது, கட்சிகளுக்கு அப்பாற்பட்டுத் தேசம் முழுவதற்கும் பிரதிநிதியாக, தேசத்தின் முதற்பதவியைப் பெறும் ஒருவரைத் தேர்ந்தெடுக்க அரசியல் சாஸனம் விதித்துள்ள காரியக்கிரமத்தை அவமதித்து, ராஷ்டிரபதித் தேர்வைச் சதிக் கூட்டத்தின் முடிவாக்குவதற்கொப்பாகும் என்கிறார். ஆள்கிற கட்சி தன்னுடைய மசோதா எதையேனும் சட்டமாக்குவதற்குக் கொரடாப் பிரயோகம் செய்தால் அதை ஒப்புக் கொள்ள இடமுண்டு. ஆயின், ராஷ்டிரபதித் தேர்வில் இதே கட்டுப்பாட்டை விதிப்பது குற்றமாகும் என்கிறார். இச்சமயத்தில் எந்தக் கட்சியைச் சேர்ந்தவராயினும் சட்டசபையாளர் ஒவ்வொருவரும் தேசம் சம்பந்தப்பட்ட ஒரு விஷயத்தில் நீதிபதி போல் தகுதிகளைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டுமேயன்றி, கட்சி சம்பந்தப்பட்ட ஒரு விஷயத்தில் அங்கத்தினர் நடப்பது போல் நடந்து கொள்வதற்கில்லை என்பதை ராஜாஜி சுட்டிக்காட்டியுள்ளார். நீதிபதிகளின் மீது அதிகாரிகள் ஏதேனும் கட்டுப்பாடுகள் விதித்தால் அதை நீதிபதிகள் எப்படிப் புறக்கணித்துச் சுதந்திரமாக முடிவெடுப்பார்களோ, அப்படியே இன்று சட்டசபையாளர்கள் நடந்து கொள்ள வேண்டும். மனச்சாட்சியையும், அந்தரான்ம சுத்தத்தையும் முக்கியமாகக் கருத வேண்டும். இத்தேர்தலில் சட்டசபையிலும் பார்லிமென்டிலும் உள்ள அங்கத்தினர் ஒவ்வொருவருடைய வாக்குக்கும் உள்ள மதிப்பு அவர் எத்தனை மக்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கிறார் என்பதைப் பொறுத்து நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதாவது அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட மக்கட் தொகைக்கே பிரதிநிதியாகக் கருதப்படுகிறாரேயன்றி, எந்தக் கட்சியின் பிரதிநிதியாகவும் அல்ல. இந்த உண்மையை உள்ளத்தில் இருத்தி, சுதந்திரம் வாய்ந்த வாக்காளர்களாக அவர்கள் வாக்களிக்க வேண்டும்; கட்சிகள் கொரடாப் பிரயோகம் செய்தாலும் அதைப் புறக்கணிக்க வேண்டும் என்கிறார் ராஜாஜி.

# என்ன சேதி?

அவமானம்!
ஒரு நல்ல காரியம்
ஜெர்மனியின் சிருஷ்டிகர்த்தா
தேசிய சர்க்காரும் சோஷலிஸமும்
ஹிந்தி வெறி
சர்வதேச சுற்றுலா ஆண்டு
காஞ்சியில் சங்கர ஜயந்தி

ராணுவத்தினருக்கும் போலீஸாருக்கும் தேசத்திலேயே தனியானதொரு பொறுப்பு உண்டு. இவர்களின் கடமை உணர்ச்சியையும் கட்டுப்பாட்டையும் ஒட்டித்தான் சமுதாயத்தின் ஒழுங்குப்பாடு அமையும். எனவே டில்லி போலீஸார் வேலை நிறுத்தம் செய்தது வன்மையான கண்டனத்துக்குரியது. அவர்களின் குறைபாடுகளில் எவ்வளவோ நியாயம் இருக்கலாம். எனினும், அதை வெளிக்காட்டும் வழி இதல்ல.

தீவிர இடதுசாரிக் கட்சிகள் இதற்குச் சூத்திரதாரிகளாக இருந்ததும், போலீஸாரின் வேலை நிறுத்தத்துக்கு ஆதரவாகத் டில்லியில் பொது வேலை நிறுத்தத்துக்குத் திட்டம் தீட்டியதும் அவமானகரமாகும். நல்லவேளையாகப் போலீஸார் வேலைக்குத் திரும்பியதனாலும், டில்லியில் பொது வேலை நிறுத்தம் பிசுபிசுத்ததாலும் தேசத்தின் கௌரவம் பறி போகாமல் காக்கப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு மாவட்டத்திலும் சர்க்கார் உத்தேசித்துள்ள கொள்முதல் இலக்கை அடைந்தபின், அம்மாவட்டத்தின் தாலுக்காக்களிடையே உணவுப் போக்குவரத்தைத் தடுப்பதில்லை என்று தமிழக அரசு முடிவெடுத்துள்ளது. கோவை மாவட்டத்தில் உணவுப் பண்டப் போக்குவரத்துக் கட்டுப்பாடுகளை நீக்க உத்தரவு பிறப்பித்திருக்கின்றனர். மதுரையிலும் விரைவில் இக் கட்டுப்பாடு நீக்கப்படுமெனத் தெரிகிறது. இந்த நல்ல காரியத்துக்காக அரசாங்கத்தைப் பாராட்டுகிறோம்.

உணவுப் போக்குவரத்துக் கட்டுப்பாட்டை நீக்கி இரண்டு மாதங்களுக்குப் பின்னும் விலை குறையாவிடில் மீண்டும் கட்டுப்பாடு அமுலாக்கப்படும் என்று மந்திரி கூறியிருக்கிறாராம். இரண்டு மாதக் கெடு எந்த அடிப்படையில் தீர்மானிக்கப்பட்டது என்று தெரியவில்லை. சர்க்காரின் இலக்கு பூர்த்தியானவுடன் கட்டுப்பாட்டை நீக்கும் யோசனை சரி; அதற்கு மேல் ஷரத்து எதுவும் போடாமலிருப்பதே உசிதம்.

இரண்டாவது உலக மகாயுத்தத்தினால் சொல்லொணாத சீர்குலைவுக்கு ஆளான மேற்கு ஜெர்மனியை மீண்டும் ஒரு தேசமாகத் தலைதூக்கச் செய்த அடினார் அவர்கள் மறைந்து விட்டார். பதினான்காண்டுகள் பிரதமராக இருந்து, சுதந்திரத் தொழிலுக்கு ஊக்கம் தந்து, மேற்கு ஜெர்மனியை வல்லரசுகளுக்குச் சமதையான நிலைக்குக் கொண்டு வந்தவர் அவர். ஸ்டாலினின் கம்யூனிஸப் பிடிக்குள் மேற்கு ஜெர்மனி அகப்பட்டு விடாமல் காத்த ராஜதந்திர சாதனையைப் புரிந்தவர் அடினார். மேற்கு ஜெர்மனியின் வரலாற்றில் அவர் பெயர் என்றும் மங்காது பொலியும். மக்களுக்கு உற்சாகமும் ஊக்கமும் ஊட்டி உழைக்கச் செய்து தேசத்தில் வளம் தழைக்கச் செய்த அவர் எந்நாட்டு ஆட்சியாளருக்கும் ஓர் உதாரண புருஷராவார்.

சுதேசியத்தைக் கடந்த அபூர்வத் தலைவர் அவர். ஐரோப்பிய நாடுகளின் பொருளாதார ஐக்கியத்தை அவர் முக்கியமாகக் கருதியதால், போதிய அளவு சுதேசப் பற்று இல்லாதவர் என்றும்கூட ஜெர்மானியரால் தவறாகக் கருதப்பட்டவர். அண்டை நாடுகளின் கூட்டுப் பொருளாதார அமைப்பை வலியுறுத்தியதாலும் அவர் நமக்கு ஒரு வழி காட்டியாவார்.

தொழிலதிபரின் பேச்சு என்றால் அது சுயநலப் பேச்சுதான் என்று கருதாத எவருமே ஸ்ரீ ஜே. ஆர். டி. டாட்டா சமீபத்



தில் முற்போக்குக் குழு ஆண்டு விழாவில் கூறியுள்ள உண்மைகளை மனதார வரவேற்பார்கள்.

'சோஷலிஸம் ஏதோ ஒரு சூழலுக்குப் பொருத்தமாயிருந்தது. அதையே இந்தியாவில் இன்று அமுல் செய்ய முயன்றார்கள். இதன் விளைவாகப் பொருளாதாரச் சீர்குலைவு ஏற்பட்டு விட்டது. இதைத் தடுக்க வேண்டுமாயின் சோஷலிஸத்தைக் கைவிட வேண்டியிருக்கும். எந்த ஒரு கட்சியும் சோஷலிஸத்தைக் கைவிடுவதாகச் சொன்னால் மக்களின் ஆதரவை இழக்க நேருமோ என்று பயப்படுவது சகஜம். ஆனபடியால் எல்லாக் கட்சிகளும் சேர்ந்த கூட்டுச் சர்க்காரை அமைத்துக் கொண்டால் தைரியமாக சோஷலிஸத்தைக் கைவிடலாம். ஏனெனில், அப்போது எல்லாக் கட்சிகளுமே சோஷலிஸத்தைக் கைவிடுவதன் பொறுப்பு சமமாகச் சாரும்' என்று ஸ்ரீ டாட்டா கூறியிருக்கிறார்.

கட்சிச் சார்பே இல்லாத தேசிய சர்க்கார் அமையுமாயின் அதைப் பெரிதும் வரவேற்கிறார் ஸ்ரீ டாட்டா. பொருளாதாரப் பிரச்னைகளைத் தீர்க்கச் சேவையில் ஆர்வம் கொண்ட அரசியல்வாதிகள் போதாது; விஷய ஞானமுள்ளவர்கள் அமைந்த தேசியசர்க்காரே இதைச் செய்ய முடியும் என்கிறார் அவர்.

**ஹி**ந்தி பேசாத ராஜ்யங்கள் விரும்புகிற வரையில் ஆங்கிலத்தைக் காலவரம்பின்றித் துணை ஆட்சி மொழியாக நீடிப்பதற்கான மசோதா தயாராகி வருகிறது. இச்சந்தர்ப்பத்தில் ஹிந்தி வெறியர்களின் மனப்போக்கை மத்திய சர்க்காரின் கல்வித்துறையில் ராஜாங்க மந்திரியாக இருக்கும் பகவத் ஜா ஆசாத் அவர்களே பிரதிபலித்திருப்பது நமக்கெல்லாம் ஓர் எச்சரிக்கையாகும். ஆங்கிலத்தை ஒழித்துக் கட்டிவிட்டு அதனிடத்தில் ஹிந்தியை அமர்த்துவதற்கு எப்பாடும் பட வேண்டும் என்று அவர் பேசியிருக்கிறார். ஆங்கிலம் நீடிப்பதற்கு மத்திய சர்க்கார் சட்டம் கொண்டு வரப் போவதை நன்கறிந்த ஓர் அமைச்சரே இவ்விதம் பேசியிருப்பதிலிருந்து, அரசியல் காரணங்களுக்காகத்தான் ஆங்கில நீடிப்பை ஹிந்தியர்கள் ஓரளவு ஒப்புக் கொள்கிறார்கள் என்பதும், இதில் அந்தரங்க சுத்தம் இல்லை என்பதும் தெளிவு. மத்திய சர்க்காரின் கல்வித் திட்டமே ஆங்கிலம் — தாய்மொழி — வேறோர் இந்திய மொழி இவற்றை மாணவர்க்குப் புகட்டவேண்டும் என்பதுதான். இதைச் செயல்படுத்த வேண்டிய கல்வித் துறை ராஜாங்க மந்திரி 'ஆங்கிலத்துடன் போர் தொடுக்கவேண்டும்' என்று பேசியிருப்பது விபரீதமாகும். இச்சமயத்தில் தமிழகமும் ஹிந்தி பேசாத மற்ற ராஜ்யங்களும் 'டில்லியின் உத்தேச மொழி மசோதாவினால் நாம் விரும்பியதில் ஓரளவாவது பூர்த்தியாயிற்றே' என்று திருப்தி அடைந்து மெத்தனமாக இருந்துவிடக் கூடாது. இவ்விஷயத்தில் தமிழக அரசிடம் நாம் பரிபூரணமான நம்பிக்கையை வைத்திருக்கிறோம். ஹிந்தி ஆதிக்கத்துக்கு அது ஒருகாலும் இடம் தந்து நம்மை இரண்டாந்தரப் பிரஜையாக்க அநுமதிக்காதெனத் திண்ணமாக எதிர்பார்க்கிறோம்.

**பா**ரதத்தில் சுற்றுலாவுக்கு வரும் அயல் நாட்டவரின் எண்ணிக்கையைப் பெருக்கி அந்நியச் செலாவணி சம்பாதிக்கத் திட்டமிடும் பாரத சர்க்கார் கவனிக்க வேண்டிய செய்தி ஒன்று ஜெர்மனியிலிருந்து வந்துள்ளது:

''சுற்றுலா கிளம்பும் ஜெர்மானிய மக்கள் மேலும் மேலும் சிக்கனத்தைக் கடைப்பிடித்து வருகிறார்கள் என்று பிராங்க்பர்ட்டிலுள்ள ஒரு பிரயாண 'ஏஜன்ஸி' அலுவலகம் தெரிவிக்கிறது. 1966ல் ஹோட்டல்களில் அறை எடுப்போரின் எண்ணிக்கை குறையவேயில்லை. ஆனால் எல்லா வசதிகளுடன் கூடிய மிகப் பெரிய ஹோட்டல்களில் தங்குவோரின் எண்ணிக்கை கணிசமாகக் குறைந்து போயிற்று. நல்ல சுத்தமான படுக்கையும் எளிய தூய காலை உணவும் குறைந்த கட்டணத்துக்குக் தரும் ஹோட்டல்களில் நெருக்கடி மிகுந்திருக்கிறது.''

அயல் நாட்டிலிருந்து வரும் யாத்திரிகர்கள் அனைவரும் பெரும் தனவந்தர்கள் என்ற எண்ணம் எவ்வளவு தவறு என்பதை இது சுட்டிக்காட்டுகிறது. பெரும்பாலும் நடுத்தர வர்க்கத்தினரே சிறுகச் சிறுகச் சேமித்துச் சில ஆண்டுகளுக்குப்பின் அச்சேமிப்பைச் சுற்றுலாவுக்குச் செலவிடுகின்றனர். இவர்களில் ஏராளமானவர்களை நம் நாட்டுக்கு ஈர்க்கும் போதுதான் சிறு துளி பெருவெள்ளமென அந்நியச் செலாவணி கிடைக்க வாய்ப்புண்டு. இவர்கள் சுகபோக வாழ்க்கை நடத்தச் சுற்றுலா கிளம்புவதில்லை. ஓபிராய், ஹில்டன், அசோகா போன்ற ஹோட்டல்கள் இவர்களை இங்கு கவர்ந்திழுக்காது. குறைந்த பட்சம் தேவையான வசதிகளுடன் எளிய ஆனால் சுத்தமான ஹோட்டல்களே தேவை. சர்வதேச சுற்றுலா ஆண்டில் இதனை நினைவு கூர்தல் நலம்.

**உ**லக நெறியான அத்வைத வேதாந்தம் வாழவும், பாரதப் பண்பாகிய சநாதன தர்மம் உறுதிப்படவும் அளப்பரிய பணிபுரிந்த ஆதிசங்கரரின் ஜயந்திநாள் வைகாசி சுக்கில பஞ்சமியன்று நிகழ்கிறது. நாடெங்கும் கொண்டாடப்படும் இவ்விழாவுக்குக் காஞ்சிபுரத்தில் தனியான முக்கியத்துவம் உண்டு. ஆசாரியர்கள் சர்வக்ஞபீடமும் காமகோடி பீடமும் ஸ்தாபித்த ஸ்தலமல்லவா? அவர் உலக வாழ்வைத் துறந்து சிவ வடிவாக எழுந்தருளியிருப்பதும் அங்குள்ள ஸ்ரீ காமாட்சி ஆலயத்தில்தானே? இப்பிம்பத்துக்கு மே மாதம் பத்தாந் தேதியிலிருந்து இருபத்துநான்காம் தேதிவரை லக்ஷார்ச்சனை நடைபெறுகிறது. ஆசாரியப் பெருந்தகையை அர்ச்சித்து அருள் பெற விரும்பும் அன்பர்கள் தங்களது கோத்திரம் — நட்சத்திரம்— பெயருடன், **காரியதரிசி, ஸ்ரீ சங்கர பக்த ஜன சபை, 108, ராஜவீதி, காஞ்சிபுரம்** என்ற விலாசத்துக்கு ஆறு ரூபாய் அனுப்பி வைக்க வேணும்.




இந்தியா தானும் அணுகுண்டை உற்பத்தி செய்வதன் மூலம் தற்காப்பு பெற முடியும் என்று எண்ணினால் அது வெறும் பிரமையே. இன்றைய சூழ்நிலையில் இந்தியா இவ்வாறு நினைப்பதைவிட உலகுக்குத் துர்ப்பாக்கியம் எதுவுமில்லை. ஒருவர் செய்கிற தவற்றையே மற்றவர்களும் பெருக்குவதால் தவற்றைச் சரி செய்ய முடியாது. இவ்விஷயத்தில் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்களின் ஆன்மசக்தி ஆட்சியாளரின் மீது பாய்ந்து, அவர்கள் 'அணு ஆயுதம் தயாரிப்பதில்லை' என்ற பழைய முடிவை மாற்றாதிருப்பார்கள் என நம்புகிறேன். மற்ற விஷயங்களில் இந்திய சர்க்கார் எது செய்தாலும் செய்யாவிட்டாலும், அணு ஆயுதப் பரவலைத் தடுக்கும் ஒப்பந்தத்தில் கையொழுத்திட்டு, உலக நன்மைக்கு உதவும் என நம்புகிறேன். பிரான்ஸின் வழியை நாம் 'காப்பி' அடிக்க வேண்டாம்; சர்வநாசத்தின் சாத்தியக்கூறுகளைப் பலப்படுத்த வேண்டாம்.

அணு ஆயுதப் பரவலை எதிர்ப்பதில் இந்தியா நெகிழ்ந்து கொடுத்தாலோ அல்லது தானே அணுகுண்டைச் செய்ய முற்பட்டாலோ, அல்லது செய்வதாக அச்சுறுத்தினாலோ ஒரு பயங்கரமான ஆயுதப்போட்டி உண்டாகிவிடும் என்பதை யாரும் எளிதில் காணலாம். இந்தப் போட்டியினால் வேறெந்த விளைவும் ஏற்படுவதற்கு முன்பாக நம் நாடு பொருளாதாரத்தில் அடிநாசமடைவது நிச்சயம்.

அணு ஆயுதங்களைக் காட்டி எதிராளியைப் பயமுறுத்தி நிறுத்தி வைக்கக்கூடுமே ஒழிய, தற்காப்புக்கு அவற்றைப் பிரயோகிக்க முடியாது. பரஸ்பர பயமுறுத்தலால் இரு தரப்பினரும் அணுகுண்டு உற்பத்தியில் போட்டியிட வேண்டியதாகும். இந்தப் போட்டி நாசகரமானது; முடிவேயில்லாதது. அமெரிக்காவும் ருஷ்யாவும் போட்டியிடலாம்; இந்தியாவால் போட்டியிட முடியுமா ?

ஃஃஃ

ராஷ்டிரபதி ஸ்தானத்தில், ஆளும் கட்சி முடுக்கும்படியே இயங்கும் ஒருவர் அமர வேண்டும் என்ற காங்கிரஸின் முயற்சிக்குத் தி. மு. க. சட்டசபையாளர்கள் ஆதரவு தரக்கூடும் என்பது நினைக்கவும் ஒண்ணாத விஷயம். அவர்களும் மற்ற எதிர்க்கட்சிகளின் வழியிலேயே செல்வார்கள் என்றும், முன்னாள் இந்தியப் பிரதம நீதிபதிக்கே வாக்களிப்பார்கள் என்றும் நம்புகிறேன்.

ஃஃஃ

காமராஜும், அண்ணாதுரையும், நானும் மதுவிலக்குக் கொள்கையில் பூரணமாக ஒத்துப் போகிறோம் என்று ஸ்ரீ எஸ். கே. பாட்டீல் கூறியிருக்கிறார். அவர் சொல்வது சரி. தேக சுகத்தைப் பாதிக்கும் வீண் செலவின் வெள்ள மதகைத் திறந்து ஏழை மக்களைத் துன்புறுத்தி, அதன் மூலம் மாசு படிந்த வருமானத்தை அரசாங்கம் பெறுவதை நாங்கள் மூவரும் விரும்பவில்லை. இன்று ஏழை மக்கள் வாங்க முடியாதபடி பண்டங்களின் விலைகள் உயர்ந்திருக்கின்றன. நிர்ப்பந்தத்தில் இதைக் கட்டுப்படுத்த முடியாது. சர்க்காரின் கொள்கை அடியோடு மாறினால்தான் விலைகள் இறங்கும்.

ராஜ்யங்களின் வருமானத்தை உயர்த்த வேண்டுமாயின் மத்திய சர்க்காரின் செலவுகளைச் சிக்கனப்படுத்தி, ராஜ்யங்களுக்கு அதிக நிதி விநியோகிப்பதே வழி; ஏழைகளை நாசப்படுத்துவதல்ல வழி. இவ்விஷயத்தில் காமராஜும் அண்ணாதுரையும் நானும் பூரணமாக இணக்கம் பெற்றிருப்பது விந்தையோ அகஸ்மாத்தான ஒன்றோ அல்ல.

## காமகோடியின் கருணைமொழி



ஓர் ஐஸ்கட்டி இருக்கிறது. மரத்தூள் எல்லாம் போட்டுப் பத்திரமாகத் தனியாக வைத்திருக்கிறோம். ஒரு குளத்தின் கிட்டே போய் நின்றுகொண்டு இந்த ஐஸ் கட்டி குளத்தின் ஜலந்தானே என்று நினைத்து அதைத் தண்ணீருக்குள் போட்டால், அது நீராகவே ஆகிவிடும். அப்புறம் ஐஸ்கட்டி ஏது ?

அப்படிப் பகவான் யார், அவருடைய உண்மையான ஸ்வரூபம் என்ன என்பதைத் தெரிந்துகொண்டு விட்டவன் அந்த க்ஷணத்திலேயே அவனாக ஆகிவிடுகிறான். அப்புறம் 'நான், நான்' என்று சொல்லிக் கொண்டு வெளியில் இருக்கும்படியான வஸ்து இன்னொன்று இல்லாமலே போகிறது.

இதற்குத் திருஷ்டாந்தம் சொல்கிறபோது, 'காவேரி, கோதாவரி, கங்கை என்று நதிகள் இருக்கின்றன. சமுத்திரத்திலே போய்க் கலந்துவிட்டால் அப்புறம் எல்லாம் சமுத்திரம் தான். காவேரி, கோதாவரி, கங்கை என்று ஒன்றும் தனியாகக் கிடையாது' என்று சொல்லுவார்கள்.







## செய்திப் படங்கள்

1. ராஷ்டிரபதி டாக்டர் ராதா கிருஷ்ண விடமிருந்து ஸ்ரீமதி எம். எல். வஸந்த குமாரி 'பத்ம பூஷண்' பட்டத்தைப் பெறுகிறார்.

2. இந்தியாவில் பஞ்சம் தாக்கப்பட்ட பகுதிகளுக்காக 18.75 கோடி ரூபாய்க்கு உணவுப் பொருள்கள் அனுப்பும் உடன் படிக்கையில் அமெரிக்க ஜனாதிபதி ஜான்சன் கையெழுத்திடுகிறார்.

3. 4. வெஸ்லியன் சர்வகலாசாலையில் நமது கர்நாடக இசையைப் போதித்து வரும் வித்வான்களான ஸ்ரீ டி. விசுவநாதன் (குழல்) ஸ்ரீ கே. வி. நாராயணசாமி (வாய்ப் பாட்டு) ஸ்ரீ வி. வி. சுப்பிரமணியம் (வயலின்) பாலக்காடு ஸ்ரீ ரகு (மிருதங்கம்) ஆகியோர் அமெரிக்காவின் பல இடங்களில் இசை விருந்தளித்து நம்முடைய கலைக்குப் பெரும் புகழும் தேடித் தருகிறார்கள்.



# உணவுப் பயிரின் உணவு



ஆனை ஸ்ரீ. குஞ்சிதபாதம்

மேலே: ஸிந்திரி உரத் தொழிற்சாலையின் ஒரு தோற்றம்.

அமரர் நேரு தம் ஜீவ யாத்திரையின் இறுதிச் சடங்குக்குப் பின்னர் எஞ்சிய அஸ்தித் தூள்களையும் சாம்பரையும் வான ஊர்தியினின்றும் கழனிகளில் எருவாகத் தூவ வேண்டும் என்று மரண சாஸனம் எழுதியிருந்தார். இறந்தும் நாட்டு மக்களுக்குப் பணியாற்ற வேண்டுமென்னும் அன்னாரின் தேசபக்திதான் மறத்தற்கரியதாமோ? ரிக் வேதத்திலிருந்து இவ்வாறு எலும்புத் தூள்களையும் சாம்பரையும் எருவிடுதல் மரபு என்பதற்கு ஆதாரம் காண்பிக்கப்பட்டுள்ளது. சரித்திரப் பிரசித்தி பெற்ற ஸெனபோன், பயிர்களுக்குப் பசுந் தாள் உரமிடுதல் வேண்டுமென்று கிரீஸ்நாட்டு வேளாளரை வற்புறுத்தியிருந்தார். கொடிய வனவிலங்குகள் எளிய பிராணிகளைக் கொன்று தின்று உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்றன; சாக பட்சணிகளான ஜந்துக்கள் புல்பூண்டுகளை, செடி கொடிகளை உண்டு ஜீவிக்கின்றன; தாவர வர்க்கம் எவற்றை உட்கொண்டு வளரும்? விவசாயம் தோன்றிய காலத்திலேயே, ஒரே பூமியில் ஒரே வகைத் தானியத்தைப் பயிரிட்டுக் கொண்டிருந்தால் எரு விடாமல் பலனளிப்பதில்லை அந்தப் பூமி என்பதை அநுபவத்திலேயே அறிந்து கொண்டிருந்தனர் வேளாண்குடி மக்கள். பிராணிகள், தாவர வர்க்கம் இவற்றின் கழிவுப் பொருள்களையே சமீப காலம் வரையில் எருவாக இட்டுக் கொண்டிருக்க முடிந்தது. இன்று மக்கட் தொகையும் பெருகி விட்டது. விஞ்ஞானமும் வளர்ச்சி யடைந்துள்ளது. ஆகவே, இன்றைய தேவைக்கு ஏற்றபடி உணவைப் பெருக்க உணவுப் பயிருக்கு உணவு அளிக்கும் அவசியமும் சாத்தியக் கூறுகளும் உண்டாகியிருக்கின்றன.

நைட்ரஜன், பாஸ்பரஸ், பொட்டாஷியம் இந்த மூன்று மூலகங்களும் பயிர் வளர்ச்சிக்கும் நல்ல பலன் தருவதற்கும் இன்றியமையாதவை என்று விஞ்ஞானம் நிரூபணம் செய்திருக்கிறது. எந்த எந்த நிலத்தில் எந்த எந்த அளவில் உரமிட வேண்டும் என்று விஞ்ஞானிகள் இந்த மூன்று மூலகங்களையும் அம்மானை ஆடிக் கொண்டிருக்கிறார்கள்! தண்ணீரிலிருந்தும் காற்றிலிருந்தும், ஜல வாயு, பிராண வாயு, கரியமில வாயு இவை எந்த விஞ்ஞானியுடைய உதவியுமின்றிப் பயிர்களுக்குக் கிடைத்து விடுகின்றன. இன்னும் பயிர்களுக்கு வேண்டிய மூலப் பொருள்களைச் சுண்ணாம்பு, மக்னீஷியம், கந்தகம், மாங்கனீஸ், வெண்காரம், செம்பு, துத்தநாகம், இரும்பு, மாலிப்டனம், குளோரின் என்று அடுக்கிக் கொண்டே போகலாம்; இவைகளுக்குச் சொற்ப அளவுத் தனிமங்கள் (Micro Elements) என்று விஞ்ஞான பரிபாஷை. ஏனெனில், இவை குறைந்த அளவில் பயிர்களுக்குக் கிடைப்



திருவிதாங்கூர் உர, ரஸாயனத் தொழிற்சாலை.

பதே போதும். அதிக அளவில் தேவைப்படும் நைட்ரஜன், பாஸ்பரஸ், பொட்டாசியம் இவற்றை அதிக அளவுத் தனிமங்கள் (Macro Elements) என்று அழைப்பதும் பொருந்தும். தண்ணீரில் கரையத் தக்கதான உரம் ஒன்றையேதான் பயிர் உட்கொள்ள முடியும்; தண்ணீரில் கரையாத எதுவும் உரமாக லாயக்கு உள்ளது அல்ல.

1804ல் ஜெர்மனியில் பாரன் ஜஸ்டஸ் வான் லீபெக் கால்நடைகளின் எலும்புத் தூள்களைக் கந்தக அமிலத்திலே கரைத்தால் பயிர்கள் சுலபமாகக் கிரகிக்கக்கூடிய பாஸ்பரஸ் உரம் கிடைக்கும் என்று கண்டுபிடித்தார். 1842ல் இங்கிலாந்திலேயே ஹெர்ட்போர்ட் என்னுமிடத்தில் ஸர் ஜான் பி. லாயஸ் இயற்கை அளிக்கும் செல்வமான பாஸ்பரஸ் பாறையின் தூளை அவ்விதமே அமிலத்தில் கரைத்தால் சிறந்த உரப் பொருள் கிடைக்கிறது என்பதை அறிந்து, சூபர்பாஸ்பேட் தொழிற்சாலையை நிறுவினார். தற்கால ரசாயன உரத்தின் வரலாற்றை எழுதத் தொடங்குங்கால் ரசாயன உரத்தின் தந்தை என்று லீ பெக்கைச் சொல்வதா அல்லது லாஸ்லாக்கு இந்தப் பெருமை அளிப்பதா என்பதில் கருத்து வேற்றுமை ஏற்படலாம். எந்தரோ மகானுபாவுலு! நம்மைப் பொறுத்த வரையில் மனித வர்க்கத்துக்கு நன்மை செய்பவர்கள் எல்லாரும் போற்றுதற்கு உரியவர்களே. அங்கக ரசாயன சாஸ்திரத்தின் (Organic chemistry) பிதாவாகக் கருதப்படும் பிரீடரிக் வேலர் 1828ல் யூரியாவைச் செயற்கை முறையில் தொகுத்து அமைத்தும் அது பல காலம் வரையில் உரமாகப் பயன்படுத்தப்படவில்லை. காரணம் மலிவாக அப்போது செய்யும் முறை ஏற்படவில்லை என்பதுதான். கிப்பரெல்லிக் ஆஸிட் ஜி.ஏ. என்ற பயிர்ப் பாதுகாப்புக்குச் சிறந்த பதார்த்தத்தை 1926லேயே ஒரு ஜப்பானிய விஞ்ஞானி கண்டுபிடித்தார். இன்னும் அதன் விலை ஒரு கிராம் 75 ரூபாய். அதை எந்த விவசாயி என்ன செய்வது? ரஷ்யாவில் அதே மாதிரியான மருந்தை இன்னும் குறைந்த விலையில் செய்ய முடியுமா என்று பரிசோதனை செய்து கொண்டிருக்கிறார்களாம். குறைந்த விலையில் நிறைந்த பலனைத் தரும் விவரங்களையே விவசாயிகள் எதிர்பார்க்கிறார்கள். நிற்க.

மழை பெய்த பின் பயிர்களும், செடி கொடிகளும் எவ்வளவு நேர்த்தியாக விளங்குகின்றன பாருங்கள்! என்னவோ தெம்பு ஊட்டும் புது டானிக் பருகியது போல அல்லவா குதூகலிக்கின்றன! மழையில் அப்படி என்ன தாவர வர்க்கத்துக்குப் போஷாக்கு அளிக்கும் பொருள் இருக்கிறது? வானம் இடித்துக் குமுறுகிறது; பளீர் பளீர் என்று மின்னல் கொடிகள் துள்ளியோடுகின்றன; சோவென்று மழை கொட்டுகிறது. வான மண்டலத்திலே ஒரு மாபெரும் புரட்சி ஏற்படுகிறது. காற்றிலே 78 சத



நெய்வேலியிலுள்ள 'யூரியா' உரத் தொழிற்சாலையின் ஒரு பகுதி.

விகிதம் நைட்ரஜனும், 21 சதவிகிதம் பிராண வாயுவும் .04 சதவிகிதம் கரியமில வாயுவும் சமயோசிதம் போல நீராவியும் இருக்கின்றன. மற்றும் சொற்ப அளவில் ஆர்கான், ஹீலியம், கிரிப்டான், னியான் முதலிய வாயுக்கள் இருப்பதாகவும் கண்டு பிடிக்கப் பட்டிருக்கின்றன. நைட்ரஜன், மிகவும் மந்தமான சுபாவம் உடையது. தண்ணீரில் இலேசாகக் கரையாது. ஆனாலும் பயிர் வளர்ச்சிக்கு அத்தியாவசியமானது. நைட்ரஜன் ஒவ்வொரு ஜீவ அணுவிலும் பொதிந்துள்ளது. அது புரத சத்தின் அம்சம். செடிக்குப் பசுமையூட்டுவது. நைட்ரஜன் இன்றேல் வளர்ச்சி தடைப்பட்டு இலைகள் வெளுத்துப் போகும். மழை பெய்யும்போது அபரிமிதமான மின்சார வெப்பத்திலே நைட்ரஜனும், பிராண வாயுவும் ஜலவாயுவும் இணைந்து நைட்ரிக் அமிலமாகித் தரையில் விழுந்து பயிர்களுக்கு ஊட்டம் தருகின்றன. பணக்காரன் அசடாக இருந்தாலும் அவனுடைய சக பாடிகளால் அவனுக்குப் பெருமை வந்து விடுவது போலத்தான்! பிரதி வருடத்திலும் மழை நீரால் பூமிக்குக் கிடைக்கும் நைட்ரஜன் அளவு பத்துக் கோடி டன் என்று பர்னஸ் (1922) என்ற விஞ்ஞானி கணக்குப் போட்டுச் சொல்லி யிருக்கிறார். மேலும் கணக்குப் போட்டால் ஏக்கர் ஒன்றுக்குக் கிடைப்பது எட்டுப் பவுண்டு நைட்ரஜன்தான்! பூ! சமதர்மம் என்பது இப்படித்தானா?

இயற்கையை ஊன்றிக் கவனித்த புரொபஸர் கிரிஸ்டியன் பெர்க்லண்ட், எஞ்சினியர் ஸாமுவேல் எய்ட் இருவரும் மின்சார ஆர்க் மூலம் நைட்ரஜனைத் தண்ணீரில் கரையச் செய்வதில் வெற்றி கண்டு நார்வேயில் ஆங்கர் லாக்கன் என்னுமிடத்தில் 1903-ல் செயற்கை உரத்தொழிற்சாலை நிறுவினர். நார்வேயில் நீர்வீழ்ச்சிகள் ஏராளம். மின்சாரம் மலிவு. ஆர்க் முறைக்கு மின்சாரத் தேவை அதிகம். மற்ற நாடுகளில் வியாபார ரீதியில் உரம் தயாரிக்கச் சாத்தியமில்லாத முறை இது. சுண்ணாம்புக் கல்லையும், நிலக்கரியையும் 1100 டிகிரி நிலைக்கு உஷ்ணப்படுத்தினால் கிடைப்பது கார்பைட்; எரியும் நிலக்கரியினூடே அதிக அழுத்தத்தில் காற்றைச் செலுத்தினால் பிராணவாயு எரிந்து மிச்சமாக வருவது நைட்ரஜன்; இந்த நைட்ரஜனையும், கார்பைடையும் ஆயிரம் டிகிரியில் உஷ்ணப்படுத்தினால் கால்ஷியம் ஸைனமைட் உரமாகிறது. டாக்டர் அடால்ப் பிராங்கும், டாக்டர் நிகோடம் காரோவும் ஜெர்மனியில் 1905ல் மாக்டிபர்க் என்ற பிரசித்தி பெற்ற இடத்துக்குச் சமீபத்தில் ஸைனமைட் உரத் தொழிற்சாலை நிறுவினார்கள். காற்றைக் குளிரச் செய்து திரவமாக்கி மெல்ல மெல்லச் சூடேற்றி, நைட்ரஜனைப் பிரித்தெடுக்கும் லிண்டேயின் முறையில் பிராண வாயுவும் வீணாகாமல் கிடைக்கிறது. ஜெர்மனியில் 1908ல் புரொபஸர் பிரிட்ஸ் ஹேபர் என்பவரும் டாக்டர் கார்ல் பாஷ் என்பவரும் நைட்ரஜனையும், ஜல வாயுவையும் இணைத்து அம்மோனியா வாயு தயாரித்தனர். வில்ஹெல்ம் ஆஸ்வால்ட் அம்மோனியாவையும், காற்றையும் பிளாட்டினம் செயலூக்கி மூலம் செலுத்திச் சூடாக்கி நைட்ரிக் அமிலம் செய்தார். நம்மைச் சூழ்ந்துள்ள காற்றில் குறைவற்றுக் கிடைக்கும் நைட்ரஜனிலிருந்து ஏராளமாக உரம் செய்ய வழி பிறந்து விட்டது.

அரிசிச் சாதத்தை அடிப்படையாக அமைத்துக்கொண்டு எத்தனை விதங்கள்தாம் சித்திரான்னங்கள் தயாரிக்கிறோம்? புளியஞ் சாதம், எள்ளுஞ் சாதம், தேங்காய்ச் சாதம், மாங்காய்ச் சாதம், எலுமிச்சம் பழச் சாதம், தக்காளிச் சாதம், தயிருஞ்சாதம் இன்னோரன்ன பிற. அப்படியாகத்தானே இந்த அம்மோனியாவிலும் நைட்ரிக் அமிலத்திலுள்ள நைட்ரஜனை அடிப்படையாகக் கொண்டு, ஏனைய நைட்ரஜன் ரக உரங்களைத் தயாரிக்கின்றனர். வளைவு கோடுகளுக்கிடையே அகப்பட்டுச் சிக்கும் எண்கள் நைட்ரஜன் சதவிகிதத்தைக் குறிக்கும். அம்மோனியாவுடன் முறையே ஸல்பியூரிக் ஆஸிட், நைட்ரிக் ஆஸிட், ஹைட்ரோ குளோரிக் ஆஸிட், பாஸ்பரிக் ஆஸிட் கலப்பதனால் கிடைப்பவை இவை:

அம்மோனியம் ஸல்பேட் (21)
அம்மோனியம் நைட்ரேட் (32)
அம்மோனியம் குளோரைட் (26)
அம்மோனியம் பாஸ்பேட் (11)

சுண்ணாம்புக் கல்லுடனும் உப்புடனும் பொட்டாஷியம் குளோரைட் உடனும், பாஸ்பரஸ் பாறையுடனும் நைட்ரிக் அமிலம் கலந்து உற்பத்தியாகிறவை முறையே:

கால்ஷியம் நைட்ரேட் (16)
ஸோடியம் நைட்ரேட் (16)
பொட்டாஷியம் நைட்ரேட் (13)
நைட்ரிக் பாஸ்பேட் (19)

மேலே கண்ட ரஸாயன உரங்களின் ஜாதியில் ஸைனமைட் உரத்தையும், யூரியாவையும் சேர்ப்பதில்லை. பூர்வ ஜன்மத்தில் தாவரங்களாக இருந்த நிலக்கரியினின்றும் தயாரிக்கப்படும் ஸைனமைட்டுக்கும் யூரியாவுக்கும் தனி அந்தஸ்துக் கொடுத்திருக்கிறார்கள் விஞ்ஞானிகள். அமெரிக்க விவசாய விஞ்ஞான சங்கம் இவற்றுக்குச் செயற்கை அங்கக் கலவை (Synthetic organic compound) என்று நாமகரணம் செய்திருக்கிறார்கள். நைட்ரிக் அமிலமும், கரியமில வாயுவும் அதிக உஷ்ணத்திலும் அழுத்தத்திலும் ஒன்று சேர்வதனால் கிடைப்பது யூரியா. இவற்றிலிருந்து கிடைக்கக்கூடிய நைட்ரஜன் அளவு:

ஸைனமைட் (22); யூரியா (46).

தயாரிப்பு சாதனங்களும் மூலப் பொருள்களும் கிடைக்கும் விலையையும், தயாரிப்புச் செலவுகளையும் பொறுத்து வெவ்வேறு உரத்துக்கு வெவ்வேறு விலை அமையும். அம்மோனியம் ஸல்பேட்டும், குளோரைட்டும், அமிலத் தன்மை உள்ளவை. நைட்ரேட் உரங்கள் மிகவும் சுலபமாகக் கரையும் தன்மையுடையன. உரங்களின் மதிப்பைக் கணக்கிடும்போது அவற்றிலிருந்து கிடைக்கக் கூடிய நைட்ரஜன் அளவையே பிரதானமாகக் கவனிக்க வேண்டும். எல்லா நிலங்களுக்கும் எல்லாத் தானியங்களுக்கும் எல்லா உரங்களும் ஏற்றவையன்று.

நைட்ரஜன் உரத்தை மட்டும் தனியாக உபயோகிப்பதால் பலன் நன்றாக இராது. நைட்ரஜன் பயிரைத் தழையச் செய்யும். தழைச்சத்து என்று அனுபவமுள்ள விவசாயிகள் அதற்கு அருமையாகப் பெயர் சூட்டியிருக்கிறார்கள். தானியச் சத்து என்னும் பாஸ்பரஸம், சாம்பல் சத்து என்னும் பொட்டாஷியமும் நைட்ரஜனும் இணைந்து பயிரை வளர்த்துப் பலன் தர வல்லவை. ஒவ்வொரு ஜீவ அணுவிலும் பாஸ்பரஸ் இருக்கிறது. தானியத்தில் அதிகமாக இருக்கிறது. பூமியில் உள்ள பாஸ்பரஸ் பயிர்கள் உறிஞ்சக்கூடிய நிலையில் இல்லை; பொட்டாஷியமும் இவ்வண்ணமே இருக்கிறது. ஆகவே நீரில் கரையும் பொட்டாஷியமும் பாஸ்பரஸம் உள்ள உரங்கள் வேண்டும். சிநோஷ்ண ஸ்திதியையும், நோயையும் எதிர்த்து நிற்கும் சக்தியை பொட்டாஷியம் பயிருக்குத் தரும். சர்வதேச அரிசி ஆராய்ச்சிக் கழகம் (பிலிப்பைன்ஸ், லாஸ் பானோஸ்) நெற்பயிர் உரம் பற்றி நிகழ்த்திய கருத்தரங்கில் நைட்ரஜனைப் போல பாஸ்பரஸம், பொட்டாஷியமும் மிகவும் முக்கியமான பயிர் உணவுகள் என்பதைப் பல ஜப்பானிய விஞ்ஞானிகள் வலியுறுத்தியிருக்கிறார்கள்.

எலும்புத் தூள்களிலிருந்தும், எரு ஆலைக் கழிவுப் பொருள்களிலிருந்தும் பாஸ்பரஸ் உரம் தயாரிக்கக் கூடும். ஆனாலும் இக்காலத்தில் கனிஜப் பொருளான பாஸ்பேட் பாறைத் தூள்களிலிருந்து உரம் தயாரிக்கும் முறையே அபிவிருத்தி யடைந்திருக்கிறது. பாஸ்பரஸ் பாறைத் தூள்களுள் கந்தக அமிலத்தைக் கலப்பதால் 16 சதவிகிதம் பாஸ்பாரிக் அமிலம் உள்ள உரம் கிடைக்கும். இதுவே சூபர் பாஸ்பேட்.

அமெரிக்காவிலும் ஜெர்மனியிலும் ஜப்பானிலும்தான் புதிய உரங்கள் கண்டுபிடிக்கக் கூடிய விஞ்ஞானிகள் இருக்கிறார்கள் என்று எண்ணற்க. சந்தர்ப்பமும் சூழ்நிலையும் தக்கவாறு அமைந்தால் அற்புதமான உரங்களை நம்முடைய தமிழ்த் திரு நாட்டிலும் கண்டுபிடிக்கக் கூடிய மேதாவிகளான விஞ்ஞானிகள் இருக்கிறார்கள். நெய்வேலி உர உற்பத்திசாலையின் தலைவர் ஸ்ரீ டி. ஆர். விசுவநாதன் பாறைப் பாஸ்பேட், நைட்ரிக் அமிலம், யூரியா இவற்றைக் கொண்டு ஒரு புதிய நைட்ரோபாஸ்பேட் உரத்தைக் கண்டுபிடித்து இந்தியாவிலும் அமெரிக்காவிலும், மேற்கு ஜெர்மனியிலும் ஜப்பானிலும் பேடன்ட் உரிமைக்கு ஏற்பாடு செய்துள்ளார்.

கந்தகம் பற்றுக்குறையுள்ள காலம் இது. கந்தக அமிலம் விலை ஏறிக் கொண்டேயிருக்கிறது. பாஸ்பேட் உரம் இல்லாமல் உணவு தானியங்கள் அதிகம் விளைய மாட்டா. இந்தச் சமயத்தில் கந்தக அமிலமே தேவையில்லாமல் குறைந்த விலையில் கிடைக்கும்படி ஸ்ரீ டி. ஆர். விசுவநாதன் அவர்கள் நைட்ரோ பாஸ்பேட் உரம் ஒன்றைக் கண்டுபிடித்திருப்பதானது ஒரு மகத்தான சாதனை என்றே பாராட்ட வேண்டும். இந்த நைட்ரோ பாஸ்பேட்டில் 20 சதவிகிதம் நைட்ரஜனும் தண்ணீரில் கரையக் கூடிய 10 சதவிகித பாஸ்பரஸம் இருக்கின்றன. பெரிய அளவில் இந்த உரத்தைத் தயாரிக்க நெய்வேலியில் திட்டமிட்டிருக்கிறார்கள். மலிவான விலையிலும் கிடைக்கும் என்பதை அறிய விவசாயிகளுக்கு மகிழ்ச்சி உண்டாகும்.

இங்கிலாந்திலே முற்காலங்களில் (அதாவது காஸ் அடுப்பும், மின்சார குக்கிங் ரேஞ்சும் வரும் முன்னதாக) வீடுகளில் இரவு சமையல் செய்வதற்கு முன்பாகப் பகல் சாம்பலை ஒரு பாத்திரத்தில் எடுத்து வைப்பார்கள். மறுநாள் காலை இரவுச் சாம்பலுடன் அந்தச் சாம்பலையும் எடுத்துப் போய்க் குப்பைக் குழியில் நம்முடைய நாட்டுப் புறங்களின் வீடுகளில் போலக் கொட்டி வைப்பார்கள். அந்த நாட்டிலும் அப்போது குப்பை எருதான். பாத்திரத்தில் (Pot) வைத்திருந்த சாம்பல் (Ash) தான் Pot-ash என்று மருவி பொட்டாஷ் ஆயிற்று. சாம்பலில் உள்ள பொட்டாஷியம் 4 சதவிகிதம். இன்று அதிக உபயோகத்திலிருப்பது பொட்டாஷியம் குளோரைட். மியூரியேட் ஆப் பொட்டாஷ் என்றும் இதற்குப் பெயர் வழங்குகிறது. புகையிலை போன்ற சில பயிர்களுக்கு பொட்டாஷியம் சல்பேட் உரம் தான் உபயோகிக்கப்பட வேண்டும். குளோரின் ஒத்துக் கொள்ளாத பயிர்கள் சில.

மியூரியேட் ஆப் பொட்டாஷில் 50 சதவிகிதம் பொட்டாஷியம் இருக்கிறது.

ஸோரன்ஸன் என்ற டேனிஷ் ரசாயன சாஸ்திரி அதிக அமிலத்திலிருந்து அதிக காரம் வரையில் உள்ள நிலைகளைப் பதினன்கு பாகுபாடுகள் செய்தார். நடுநிலை பி.எச். 7க்குக் குறைவானது அமிலம்; கூட இருப்பது காரம்.

பி. எச். 3.5க்குக் கீழே அமிலமாகவோ பி.எச். 9க்கு மேலேயுள்ள காரமாகவோ நிலத்தின் மண் இருந்தால் எந்தப் பயிரும் வளராது. இப்போது மண்ணின் பி.எச். தரத்தைத் தெளிவாக நிர்ணயிக்கக் கூடிய அற்புதமான சாதனங்கள் இருக்கின்றன. நிலத்தின் - மண்ணின் தன்மையைப் பரிசோதனை செய்யாமல் உரமிட்டால் உரமும் வியர்த்தம், பலனும் இராது. ரசாயன உரங்களைச் சிலர் குறைகூறக் காரணம் இதுதான். ஒரு நோயாளியை டாக்டரிடம் காண்பிக்காமல் நேரே மருந்துக் கடைக்குள் இழுத்துக் கொண்டு வந்து தள்ளி அகப்பட்ட மருந்தைச் சாப்பிடச் சொன்னால் எப்படி விபரீதம் விளையுமோ அப்படி நிலத்தைப் பரிசோதனை செய்யாமல் உரமிடுவதனால் விபரீதம் விளையும்.

பயிரின் சிற்றுண்டிகளான (Micro Nutrients) உரப் பொருள்களைத் திறமையுடன்தான் உபயோகிக்க முடியும். உரம் பற்றிய தகுந்த ஆலோசனையை எப்போதும் விவசாய இலாகாவிடமிருந்து இலவசமாகப் பெறலாம்.

நைட்ரஜன், பாஸ்பேட், பொட்டாஷ் இவைகளைப் பல்வேறு விகிதத்தில் கொண்ட NPK கலப்பு உரங்கள் கிடைக்கின்றன. விவசாயிகளுக்கு எல்லா உரக் கம்பெனியாரும் எப்போதும் ஆலோசனை கூறக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய உரங்களினால் விளைச்சல் பெருகுமானால் விளம்பரமும் லாபமும் அவர்களுக்கு உண்டல்லவா?

எனக்குச் சாமர்த்தியம் போதாது. உலகத்தில் கஷ்டமான காரியங்களில் ஒன்று என்றே அதைச் சொல்லலாம். உங்களுக்கும் அப்படித்தான் தோன்றும்.

வீட்டத்தில் உள்ள ஓர் ஊருக்குப் போவோரை வழியனுப்புவது அவ்வளவு பெரிய காரியமில்லை. அப்போது நாம் ரயிலடிக்குப் போய்த்தான் வழியனுப்ப வேண்டுமென்று யாரும் எதிர்பார்ப்பதில்லை. நண்பர் நீண்ட தூரம் போவதாக இருக்கும்போதோ திரும்பிவர நெடுநாளாகும் என்றுவோதான் நாம் ரயிலடிக்குப் போகிறோம். ஸ்நேகம் எவ்வளவு ஆழ்ந்ததோ, பிரயாணம் எவ்வளவு நீண்டதோ, பிரிவுக் காலம் எவ்வளவு பெரியதோ அதற்கேற்ப நாம் ரயிலடிக்கு வரும் நேரமும் மிகவும் முன்னதாக இருக்கும்.

கொண்டு கொட்டக் கொட்ட நிற்கிறோம். பேசவே ஒன்றும் இருப்பதில்லை. ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறோம்.— வாயில்லாப் பிராணிகள் மனிதர்களைப் பார்க்குமே அது போல. ஏதோ "பேச்சு" கொடுக்கிறோம். அதுவும் எத்தகைய பேச்சு! நேற்றிரவு விடைபெற்ற நண்பர்கள்தான் இவர்கள். நாமும் ஒன்றும் மாறி விடவில்லை என்பது அவர்களுக்குத் தெரியும். ஆனால் தோற்றத்தில் எல்லாமே புதிதாக இருக்கிறது. சகஜமற்ற இந்தச் சூழ்நிலையில் நம் மனத்தில் எழும் எண்ணம் இதுதான்: "ரயில் புறப்படச் சீக்கிரம் மணி அடிக்காதா, சீக்கிரம் இந்த நடிப்புக்கு ஒரு முடிவு வராதா!"

அமெரிக்கா செல்லும் ஒரு பழைய நண்பனை வழியனுப்பப் போன வாரம் ரயி





# ரயிலடியில் டாட்டா!

**நினைவிருக்கட்டும்! இது சர்வதேச உல்லாசப் பிரயாண ஆண்டு!**

அதே அளவில் பரிதாபமாகத் தவறுகிறோம். நிலைமையின் உணர்ச்சிக்கும் நமது நெகிழ்ச்சிக்கும் ஏற்ப நமது தடுமாற்றமும் அதிகமாக இருக்கிறது!

விடைபெறுதல் என்னும் சடங்கை அறைக்குள்ளே, ஏன் ஒரு நிலைப்படியிலே கூட, பிரமாதமாக நிறைவேற்றலாம். பிரிவால் நமது அகத்திலே உணரும் உண்மையான ஏக்கத்தை முகத்திலே தேக்கலாம். வார்த்தைகளுக்கும் தடுமாறத் தேவையில்லை. விடை பெறுவோர், தருவோர் இருவருக்கிடையே எந்த விதமான தயக்கமும் இருப்பதில்லை. விடைபெறுதல் லட்சணமாக இருக்கிறது. இதை இப்படியே விட்டால்தான் என்ன? பிரிந்து செல்லும் நண்பர்கள் "நாளைக் காலையில் சிரமப்பட்டு ஸ்டேஷனுக்கு வர வேண்டியதில்லை" என்றுதான் எப்போதும் சொல்லுகிறார்கள். அவர்கள் மனத்திலிருப்பதை அறிந்து நாமும் எப்போதுமே அந்த வேண்டுகோளைப் புறக்கணிக்கிறோம். அவர்கள் சொன்னபடி நாம் ஸ்டேஷனுக்குப் போகாமல் இருந்துவிட்டால்தான் பிரயாணம் செய்யும் நண்பர்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். அவர்கள் மீண்டும் நம்மைச் சந்திக்கவே விரும்புவார்கள். அந்த விருப்பத்தை நிறைவேற்றும் வகையில் ஸ்டேஷனுக்குப் போகிறோம். பின்னர் 'அப்பாடா!' கொட்டாவி விட்டுக்

லடிக்குப் போயிருந்தேன். முதல் நாள் இரவுதான் அவனுக்கு நாங்களெல்லாம் ஒரு விருந்து வைத்திருந்தோம். அதிலே பிரியும் ஏக்கமும் இருந்தது; ஓரளவு உற்சாகமும் கலந்திருந்தது. அவன் திரும்பி வரப் பல வருஷங்கள் ஆகலாம். எங்களில் சிலருக்கு அவனை மீண்டும் சந்திக்க வாய்ப்பே இல்லாமல் போகலாம். எதிர்காலம் கோரமாக இருக்கும் இருள் படிந்த நினைவு ஒருபுறம் இருக்க, கடந்த கால நட்பை நாங்கள் உற்சாகமாகக் கொண்டாடினோம். இத்தனை காலம் இந்த நண்பனின் நட்பு கிடைத்ததற்குப் பெருமைப்பட்ட அளவு அவனைப் பிரிய நேர்ந்ததற்கு ஏக்கமும் காட்டினோம். இரண்டு உணர்ச்சிகளுமே எங்கள் பேச்சிலும் செயலிலும் வெளிப்பட்டன. கச்சிதமான ஒரு பிரிவு உபசார நிகழ்ச்சி.

ஆனால் இப்போதோ — ரயில்வே பிளாட்பாரத்தில் நாங்களெல்லாம் விறைப்பாக, தடுமாறியபடி நின்று கொண்டிருந்தோம். ரயில் பெட்டியின் ஜன்னலில் எங்கள் நண்பனின் முகம் தெரிகிறது. அது என் நண்பனின் முகமா? இல்லை. முற்றிலும் அந்நியரான ஒருவர் முகம். பழக்கமில்லாதவர் பேசிக்கொள்வது போல மரியாதையை உத்தேசித்த வார்த்தைகளே நிரம்பிய சூழ்நிலை. "எல்லாச் சாமானும் இருக்கிறதா?" என்று எங்களில் ஒருவர் கேட்டார். மௌனத்தைக்

**ஸர் மாக்ஸ் பீர்பாம்**

கலைக்க ஏதாவது பேசித் தொலைக்க வேண்டுமே. உள்ளிருந்து நண்பன் புன்னகையுடன் தலையாட்டி, ''எடுத்துக் கொண்டாயிற்று'' என்றான். பிறகு மீண்டும் ''எல்லாம் எடுத்துக்கொண்டாயிற்று'' என்றான். மூளை செயல்படவில்லை என்பதை எடுத்துக் காட்டுவதுபோல்.

''ரயிலிலேயே பகல் சாப்பாட்டை வைத்துக் கொள்ளலாம்'' என்று நான் கூறினேன்; அற்புதமான புதிய யோசனை ஒன்றைத் தெரிவிப்பது போல. இதற்கு முன்பே சிலர் சொல்லியிருந்த அற்புதமான யோசனைதான் அது. நண்பனும் 'ஆமாம், ஆமாம்' என்றான். பிறகு ஏதோ நினைத்துக் கொண்டவன் போல ''இந்த வண்டி இதை விட்டால் நேரே லிவர்ப்பூல் ஜங்ஷனில்தான் நிற்கும்'' என்



' ' . இந்த விவரம் எனக்குப் புதிதாகப் பட்டது. ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டோம். ''க்ரூவில் நிற்பதில்லையா?'' என்று எங்களில் ஒருவர் கேட்டார். ''இல்லை'' என்று பட்டென்று சொன்னான் பிரயாணம் செய்யும் நண்பன். என்ன, சொல்வதை இப்படி மறுக்கிறானே என்று பட்டது. நீண்டதொரு மௌனம் நிலவியது. எங்களில் ஒருவர் பலவந்தமாக வரவழைத்த ஒரு புன்னகையுடன் தலையசைத்து, ''சரிதான்'' என்றார். பேச ஒன்றுமில்லாததால் பொழுது கரைய அதுவும் உதவியது. ரயிலடியின் பல வகை இரைச்சல் இடைவிடாது ஒலித்தது. வண்டியோ நகர்வதாகக் காணோம். ஒரு முடிவே வரவில்லை இந்தத் தவிப்புக்கு — எங்களுக்காகட்டும், நண்பனுக்காகட்டும்!

இங்குமங்கும் அலைந்து கொண்டிருந்த என் பார்வையில் பட்டான் ஒருவன். சற்றே இரட்டைநாடியான அந்த நடுத்தர வயதுக் காரன் நான் நின்று கொண்டிருந்த பெட்டியில் ஒரு ஜன்னல் தள்ளி அமர்ந்திருந்த பெண் ஒருத்தியுடன் மும்முரமாகப் பேசிக் கொண்டிருந்தான். அவனை எங்கோ பார்த்ததாக நினைவு எழுந்தது. ஊருக்குப் போகும் பெண் ஓர் அமெரிக்கப் பெண்மணி என்பது நன்கு தெரிந்தது. இவனோ இங்கிலீஷ்காரன். இல்லாவிட்டால் அவனை அந்தப் பெண்ணின் அப்பன் என்றே எண்ணியிருப்பேன். அவன் அவளிடம் என்ன சொல்லுகிறான் என்பதைக் கேட்க வேண்டும் போலிருந்தது. நிச்சயம் அவன் சிறந்த புத்திமதி சொல்லிக் கொண்டிருப்பான் என்றே பட்டது. அவன் கனிவான பார்வையும் இதமான பேச்சும், பரவசமூட்டுவதாய் இருந்தன. இந்த உணர்வும் முன்னர் எப்போதோ பழக்கப் பட்டதுபோல் இருந்தது. எப்போது?

நினைவு மின்னல் பளிச்சிட்டது. அட! இவன் ஹியூபர்ட் இல்லையா! கடைசியாகப் பார்த்ததற்கு எவ்வளவு மாறிவிட்டான்! அதாவது ஏழெட்டு வருஷங்களுக்கு முன்னர் அப்போது அவன் (எப்போதும் போல) வேலையின்றி இருந்தான். என்னிடமிருந்து அரை கிரவுன் பணம் வாங்கியிருந்தான். அவனுக்குக் கடன் தரவே ஒருவன் கொடுத்து வைக்க வேண்டும். அப்படித் தான் நடந்து கொள்வான். அத்தகைய ஒரு கவர்ச்சி அவனிடம் இருந்தது. ஆனால் அந்த அபூர்வக் கவர்ச்சி ஏன் நாடக மேடையில் அவனைக் கைதூக்கிவிடவில்லை என்பது எனக்கு ஒரு புதிராகவே இருந்தது. அவன் தேர்ந்த ஒரு நடிகன். நல்ல பழக்கங்கள் கொண்டவன். வேறு எத்தனையோ பேரைப் போல் அவன் லண்டனைவிட்டு உள்ளூர் போய் விட்டான். நானும் மற்றவரைப் போலவே அவனை மெல்ல மறந்துவிட்டேன்.

இத்தனை வருஷங்களுக்குப் பின் அவனை இங்கே ரயிலடியில் வளமான வனப்புடன் காண விநோதமாக இருந்தது. சதை மட்டும் போடவில்லை. அவன் நல்ல உடுப்பும் போட்டிருந்தான். ஆள் அடையாளமே தெரியவில்லை. அந்த நாளில் அவனது ஒட்டிய தாடையைப் போலவே அவனது அழுக்குக் கோட்டும் அவனுடன் எப்போதும் ஒட்டிக்



கொண்டிருக்கும். இன்றோ அவனைப் பார்த்தால் ஒரு பாங்கரைப் போல் இருந்தது. அவன் வழியனுப்ப வந்தால் எந்தப் பிரயாணிக்கும் பெருமையாகத்தான் இருக்கும்.

''நகருங்கள். எட்டி நில்லுங்கள்.''

வண்டி புறப்படும் சமயம். நான் என் நண்பனுக்குக் கையசைத்தேன். ஹியூபர்ட் அசையவில்லை. ஜன்னலைவிட்டு நகரவில்லை. இரண்டு கைகளாலும் அந்தப் பெண்ணின் கையைப் பிடித்தபடி நின்றிருந்தான்.

''நகருங்கள், ஐயா !''

கார்டின் கட்டளைக்கு அவன் பணிந்தான். ஆனால் ஒரு கணத்தில் மறுபடியும் ஓரடி முன் வைத்து ஏதோ கெகெகத்தான். அவன்

கண்களில் நீர் ததும்புவது போலத் தோன்றியது. ஆம், உண்மையாகவே கண்ணீர் வழிந்ததைப் பார்த்தேன். வண்டி நகர்ந்து மறைந்ததும் அவன் திரும்பியபோது அவனை நேருக்குநேர் பார்த்தபோது அவன் கண்ணிலே நீர் ததும்பியதைக் கண்டேன். என்னைப் பார்த்ததும் அவன் மகிழ்ச்சியால் துள்ளினான். ''எங்கே, இத்தனை காலமாகக் காணோம்?'' என்று கேட்டபடியே என்னிடம் அரை கிரவுன் நாணயம் ஒன்றை எடுத்துக் கொடுத்தான். ஏதோ நேற்றுத்தான் வாங்கிய கடனைத் திருப்புவது போலிருந்தது அவன் செயல். என் கையைத் தன் கையில் கோத்தபடி பிளாட்பாரத்தில் நடந்தான். வாரந்தோறும் எனது நாடக விமரிசனங்களைப் படித்து வருவதாக உற்சாகமாகக் கூறினான்.

பதிலுக்கு நானும் நாடகமேடை அவனை இழந்து விட்டதே என்று சொல்லி வைத்தேன். ''ஆமாம். நான் இப்போது நாடக மேடையில் நடிப்பதில்லை'' என்று பதிலளித்தான். ''நாடக மேடை'' என்னும் சொல்லில் சற்றே அழுத்தம் கொடுக்கப்பட்டதாகப் பட்டது. ''அப்படியானால் உன் நடிப்புத் திறமையை எங்கே காட்டுகிறாய்?'' என்று விசாரித்தேன். '' பிளாட்பாரத்தில் '' என்றான். புரியவில்லை. கேட்டேன். சிரித்தான் அவன். ''இங்கே, இந்தப் பிளாட்பாரம்தான் என் நாடக மேடை'' என்று கைத்தடியால் தரையைத் தட்டினான். எனக்குக் குழப்பம் அதிகமாயிற்று. திடீரென்று வந்த செல்வச் செழிப்பு அவன் புத்தியைப் பேதலித்து விட்டதா? அவனிடம் இன்னும் அதிக விளக்கம் கோரினேன்.

'' 'ஆங்கில அமெரிக்க சோஷியல் பீரோ' பற்றித் தெரிந்திருக்குமே '' என்றான். எனக்குத் தெரிந்திருக்கவில்லை. அவன் விளக்கினான். ஆயிரக்கணக்காய் ஆண்டுதோறும் இங்கிலாந்துக்கு வரும் அமெரிக்கர் பற்றியும் அவர்களில் நூற்றுக்கணக்கானவர்களுக்கு இங்கே யாருமே நண்பர்கள் இராததையும் தெரிவித்தான். பழைய நாட்களில் அவர்கள் யாருக்காவது அறிமுகக் கடிதம் வாங்கி வருவார்கள். ஆனாலும் பயனில்லை. ஆங்கிலேயரா சும்மாவா?. யாருக்கும் வலியப் போய் உபசாரம் செய்துவிட மாட்டார்களே! ''ஆகவே இந்த ஆ. அ. சோ. பீ நீண்ட நாளையத் தேவையைப் பூர்த்தி செய்கிறது. அமெரிக்கர்கள் உற்சாகமாகப் பழகுபவர்கள். அவர்களிடம் பணமோ கொட்டிக் கிடக்கிறது. ஆ.அ.சோ. பீ. அவர்களுக்கு ஆங்கில நண்பர்களை வழங்குகிறது. வசூலில் நண்பர்களாகச் சேவை செய்வோருக்குப் பாதி கிடைக்கும். ஆ. அ. சோ. பீ. மற்ற பாதியை எடுத்துக் கொள்ளும். நான் அதிலே பங்கு போட்ட டைரக்டர் இல்லை. இருந்தால் ரொம்பப் பணம் பண்ணியிருப்பேன். நான் வெறும் தொழிலாளி. இருந்தாலும் சுகமாக இருக்கிறேன். வழியனுப்புவோரில் நானும் ஒருவன்.''

''இன்னும் புரியும்படி சொல்ல வேண்டும்'' என்றேன். ''பல அமெரிக்கருக்கு இங்கிலாந்தில் நண்பர்கள் அமர்த்துவது சாத்தியமில்லை. ஆனால் எவருக்குமே வழியனுப்புவோரை அமர்த்திக் கொள்ள முடியும். செலவு ஒரு பிரயாணிக்கு ஐந்து பவுன்தான். (சுமார் நூறு ரூபாய்) ஒன்றுக்கு மேற்பட்ட கோஷ்டிக்குக் கட்டணம் எட்டு பவுன். பணத்தை முன்னதாகவே எங்கள் நிலையத்துக்கு அனுப்பிவிட்டுக் கடிதத்தில் பிரயாணத்தேதி, அவர்களைப் பற்றிய அடையாளமெல்லாம் தெரிவிப்பார்கள். அவ்வளவு போதும். பிளாட்பாரத்துக்கு நாங்கள் வந்து அவர்களை அடையாளம் கண்டு பிடித்து வழியனுப்புவோம்.''

''இதனால் என்ன பயன்?''

''பயனா? நிச்சயம் பயன் உண்டு. இதனால் தனிமை உணர்வு தவிர்க்கப்படுகிறது. ரயில் வண்டியின் கார்டு அந்தப் பிரயாணிகளை மதிக்கத் தொடங்குவான். சக பிரயாணிகள்— அவர்களில் சிலர் அமெரிக்கா வரை போவோரா யிருக்கலாம். இவர்களை அலட்சியம் செய்ய மாட்டார்கள். மொத்தத்தில் இந்தச் செயல் அவர்கள் பயணம் முழுதுக்குமே ஒரு நல்ல ஆரம்பமாக அமைகிறது. நீங்கள் தான் பார்த்துக் கொண்டிருந்தீர்களே, நான் அந்த அம்மாளை வழி அனுப்பினேனே, நன்றாகச் செய்தேன், இல்லையா ?''

''ரொம்ப நன்றாகச் செய்தாய். சொல்லப்போனால் நான் உன்னைப் பார்த்துப் பொறாமைப்பட்டேன். அதே சமயத்தில் நானே—''

''தெரியும், தெரியும். கால் மாற்றிக் கால் ஊன்றிக் கொண்டு அர்த்தமில்லாமல் ஊருக்குப் போகும் நண்பரை வெறித்துப் பார்த்தபடி நின்றிருப்பீர்கள். பேசவோ ஒன்றுமிருக்காது. தெரியும். நானும் அப்படித்தான் இருந்தேன் முன்பெல்லாம், அதாவது இந்தக் கலையைப் பயில்வதற்கு முன். ரயில்வே ஸ்டேஷன் சூழ்நிலையில் நடிப்பது ரொம்பக் கஷ்டம். உங்களுக்கும் அனுபவத்தில் தெரியுமே!''

நான் ரோஷத்துடன் மறுத்தேன். ''ஆனால் நான் நடிக்க முயலவில்லை. நான் உண்மை உணர்ச்சியுடன் இருந்தேன்.''

''நானும் அப்படித்தான் ஸார். உணர்ச்சி இல்லாமல் நடிக்க முடியாது'' என்றானே பார்க்கலாம் அவன். ''வண்டி நகர்ந்தபோது என் கண்ணில் நீர் துளிக்கவில்லையா? நான் பலவந்தமாகக் கண்ணீரை வரவழைக்கவில்லை. நான் உண்மையிலே நெகிழ்ந்த கணம் அது. நீங்களும் அப்படித்தான் இருந்திருப்பீர்கள். ஆனால் உங்களுக்கு அதை வெளியிடும் சாமர்த்தியம் போதவில்லை. அதாவது உங்களுக்கு நடிக்கத் தெரியவில்லை'' என்றான். சற்று இதமான குரலில், ''ரயிலடியில் நடிப்பதைச் சொன்னேன்'' என்றான்.

''எனக்கும் கற்றுக் கொடேன்'' என்றேன்.

''ஆகட்டும். வழியனுப்பும் சீசன் அநேகமாக முடிந்து விட்டது. இருந்தாலும் முடிந்ததைக் கற்றுக் கொடுக்கிறேன். ஏற்கனவே பலருக்கு இப்போது பாடம் சொல்கிறேன்'' என்று கூறியவாறு கோட்டுப் பையிலிருந்து ஒரு சிறு டைரியை எடுத்துப் பார்த்தான். ''உங்களுக்குச் செவ்வாயும் வெள்ளியும் தினம் ஒரு மணி பாடம்'' என்று சொன்னான்.

அவன் வாங்கும் கட்டணம் அதிகம்தான், ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இந்த முதலீட்டுக்காக நான் வருந்தவில்லை.

**தமிழாக்கம்: தம்பி சீனிவாசன்**

# பேசும் தெய்வம்

ரவி புரொடக்ஷன்ஸாரின் "பேசும் தெய்வம்" சுவாரசியமாக இருக்கிறது.

ஏழுமலையானை வைத்துக் கொண்டே படத்தை ஓட்டியிருக்கிறார்கள். "பேசும் தெய்வ"மான அவர், பேசாமலே படம் முழுவதும் நடித்துப் பரவசமூட்டுகிறார்.

பழகிப்போன பழங் கதைதான் எனினும் சிவாஜி கணேசன் பத்மினியின் சிறந்த நடிப்பினால், பழுத்த மரம் புதுத் துளிர் விட்டாற் போல இப் படம் பார்க்கப் பசுமையாயிருக்கிறது.

குழந்தையை உயிரோடு பறிகொடுத்துவிட்டு ஊர் திரும்பியதும், கட்டிய மனைவியிடம் அதைப் பற்றிப் பேச முடியாமல் விம்மி வெடிக்கும் காட்சியில் சிவாஜிக்கே உரிய சிறந்த நடிப்பு சுடர் விட்டுப் பிரகாசிக்கிறது. குழந்தையைக் கணவனுடன் தனியாக அனுப்பிவைக்கும் காட்சியில் பயமும் துடிப்பும், சிறு கோபமும் கலந்து நடித்துப் பத்மினி தம் பழைய புகழை நிலைநாட்டிக் கொள்கிறார். 'குழந்தையைத் தூங்கப் பண்ணும் போது பக்கத்தில் விட்டுக் கொண்டு அவன் கையில் உங்கள் மேல் துண்டைக் கொடுத்து விட்டால், என் முன்தானையைப் பிடித்துக் கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டு தூங்கிவிடுவான்' என்று சொல்லும்போது புத்திர வாஞ்சையை அதியற்புதமாக வெளிப் படுத்துகிறார்.

நாகேஷ் இருக்கிறார் சிரிக்க வைக்க.

எஸ். வி. ரங்கா ராவ் பேசும் தெய்வத்தோடு பேசியே திரைக் கதையையும் ஒட்டித் தம் நடிப்புத் திறமைக்கும் கொடி நாட்டுகிறார். 'அவன் கிட்டே சொல்லிட்டேண்டா. இனிமேல் அவன் கவனிச்சுப்பான்' என்று சொல்லும்போது அவர் குரலில் பக்தி உணர்வின் கனிவு தான் எத்தனை!

திரைக் கதையைத் தயாரித்து, வசனம் தீட்டி, டைரக்ஷனையும் தாமே மேற் கொண்டு பூரண வெற்றி பெற்றுவிட்டார் கே. எஸ். கோபாலகிருஷ்ணன். மூலக் கதை சி. ஆர். ராஜம்மாளினுடையது. வாலியின் பாடல்கள் யாவும் இனிமையாக ஒலிக்கின்றன. அவற்றுள் "நான் அனுப்புவது கடிதம் அல்ல" என்ற பாடல் மிகவும் நன்றாக இருக்கிறது.

ஒரு நல்ல படம் பார்த்தோம் என்று திருப்திப்பட்டுக் கொள்ளும்படி அமைந்திருக்கிறது "பேசும் தெய்வம்"





# கோடைக்கு நீலகிரி

என். ராமகிருஷ்ணா

கோவையிலிருந்து மேட்டுப்பாளையம் செல்லும் புகைவண்டித் தொடரில் நாம் உட்கார்ந்து செல்லும்போது நீல நிறமான மலைத் தொடர்கள் நம் மனத்தைக் கவர்கின்றன. நீலநிறமாகக் காட்சி அளிப்பதால் நீலகிரி என்று பெயர் வந்தது. மேற்குத் தொடர்ச்சி மலைகளும், கிழக்குத் தொடர்ச்சி மலைகளும் சேரும் இடத்தில் சுமார் ஆயிரம் சதுர மைல் பரப்பில் நீலகிரி மலை அமைந்துள்ளது. 1908ம் ஆண்டிலிருந்தே இங்கு மக்கள் சென்று இதன் அழகை ரசித்து வருகிறார்கள்.

வரலாறு: 1602ம் ஆண்டு வரை இவ்விடத்தை யாரும் அறியவில்லை என்று வரலாறு கூறுகிறது. 1602ம் ஆண்டு ஃபிரெய்ரி என்ற போர்த்துக்கீசிய பாதிரியார் மலை ஏறும் முயற்சியில் ஈடுபட்டார். ஆனால் அவருக்குப் பின் சுமார் இருநூறு ஆண்டு வரையில் எவரும் முயலவில்லை. பின்பு அரசாங்கத்தின் உத்தரவுப்படி டாக்டர் புச்சனன் என்பவரும் கீஸ் என்ற சர்வேயரும் அவரது உதவியாளரான மாக்மோகன் என்பவரும் கோவைக் கலெக்டரால் இவ்விடத்தைக் காண அனுப்பப்பட்டனர். இந்த மாக்மோகன்தான் பின்னால் இந்தியாவுக்கும் திபெத்துக்கும் நடுவில் ''மாக் மோகன் லைன்'' என்ற எல்லைக் கோடு போட்டவர். இவர்களே முதன் முதலாகத் தகவல்களைச் சேகரித்தனர். 1818ம் ஆண்டு கோவையில் இருந்த



குனூர்-லேம்பஸ் ராக், கீழே பாதாளம் 1000 அடி. >

< உதகமண்டலம்-தாவர இயல் பூங்கா.

ஜான் சல்லிவன் என்ற கிழக்கிந்தியக் கம்பெனி கலெக்டர் பலரை இம்மலைக்கு அனுப்பிப் பூர்வாங்க ஆராய்ச்சி செய்யும்படி கட்டளையிட்டார். பின்பு தாமே நேரில் சென்று ஒரு வீடும் கட்டினார். உதகையில் வீடு கட்டிய முதல் ஆங்கிலேயர் இவரே. 1823ல் கட்டிய இவ்வீட்டுக்குக் ''கல் வீடு'' என்று பெயரிடப்பட்டது. அவர் நட்ட மரம் இன்றும் உள்ளது. கொஞ்சம் கொஞ்சமாக ஐரோப்பியர் இங்கு குடியேற ஆரம்பித்தனர். சென்னை அரசாங்கத்தின் வாசஸ்தலமாகக் கோடையில் இது உபயோகப்படுத்தப்பட்டது. பின்பு கவர்னராக இருந்த பக்கிங்ஹாம் பிரபு புதிதாக அரசாங்க மாளிகை ஒன்றைக் கட்டி, பூங்காவையும் ஏற்படுத்தினார். மக்கள் கொஞ்சம் கொஞ்சமாக இங்கு குடியேற முற்பட்டனர். 1826ல் அஞ்சல் நிலையமும் 1829ல் மருத்துவ மனையும் 1863ல் நகராட்சியும், 1866ல்



கூனூரிலிருந்து ஆறு மைல் சென்றால் லேடி கானிங்ஸ் ஸீட் என்ற இடத்தை அடையலாம். கீழே பள்ளத்தாக்கு 3000 அடி ஆழம். >

கூனூர். மேலே ரோடு, கீழே ரயில். V

கலெக்டர் அலுவலகமும், 1878ல் ஒரு நூலகமும் ஏற்படுத்தப்பட்டன.

முதன் முதலாக 1819ல் கோவையிலிருந்து சாலை போட ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் நல்ல முறையில் அதைப் போட முடியவில்லை. மேட்டுப்பாளையத்துக்குப் பக்கத்திலிருந்து போட 1829ல் லஷிங்டன் என்ற சென்னை கவர்னர் உத்தரவிட்டார். 1832ல் இப்பாதை ஏற்படுத்தப்பட்டது. தற்போதுள்ள உதகமண்டலம் கூனூர்ப் பாதை 1853ல் தொடங்கப்பட்டது. இயற்கைக் காட்சிகள் இடையே வளைந்து வளைந்து செல்லும் இப்பாதையின் அழகே அழகு. பின்பு 29 மைல் ரயில்பாதை அமைக்கும் திட்டம் 1864ல் வகுக்கப்பட்டது. ஆனால் 1890ல்தான் வேலை தொடங்கியது. பதினாறு சுரங்கப் பாதைகளும் அநேக பாலங்களும் அமைக்கப்பட்டன. 1908ல் இது முடிவுற்றது. அதுவரை மக்கள் உதகை சென்றது மாட்டு வண்டியிலும் குதிரை வண்டியிலும்தான்.

வெளி நாடுகளிலிருந்து வரும் உல்லாசப் பிரயாணிகள் நீலகிரியை "இந்தியாவின் சுவிட்ஜர்லாந்து" என்று அழைக்கின்றனர். டெனிசன் என்ற ஆங்கிலக் கவி நீலகிரியை வர்ணித்துக் கவிதை பாடியுள்ளார். ஆங்கிலேயர் காலத்தில் மிகவும் சிறப்பாக இருந்தது வருடாந்தர வேட்டை. சாம்பார் என்ற மானை அக்காலத்தில் வேட்டையாடினர். 1845ல் இது ஆரம்பிக்கப்பட்டது. ஆங்கிலேயப் பட்டாளத்தில் இருந்தவர் இதனை மிகவும் ரசித்தனர்.

உதகமண்டலத்தில் உள்ள பூர்வ குடிகள் மூன்று வகையினர்-படகர்கள்,தோதவர்கள், கோதவர்கள். தோதவர்கள் குடியிருக்கும் குடிசைகள் அழகானவை. வளைந்த கூரைகளையுடைய இவைகளின் முன் கதவுகள் 2 அடிதான் உள்ளன. மிருகங்கள் உள்ளே செல்லாதபடி கட்டப்பட்டுள்ளன.

மேட்டுப் பாளையத்திலிருந்து உதகை இருபத்திஎட்டரை மைல் தூரத்தில் உள்ளது. ஐந்து மைல் தூரம் ரயில் சம தரையில் சென்ற பிறகு, கல்லாரிலிருந்து மலைப் பாதை ஆரம்பமாகிறது. இங்குள்ள ரயிலுக்கு இஞ்ஜின் முன்னால் கிடையாது. பின்புறமிருந்து தள்ளுகிறது. வண்டித் தொடர் நழுவி விழுந்துவிடாமல் இருப்பதற்கு ஒருவிதமான சாதனம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இரண்டு தண்டவாளங்களுக்கு மத்தியில் சங்கிலித் தொடர் ஒன்று பொருத்தப்பட்டுள்ளது. இஞ்ஜினில் ஒரு பல் சக்கரம் உள்ளது. அது இந்தச் சங்கிலித் தொடரில் பதிந்து பதிந்து செல்லும். நழுவிவிட முடியாது. கல்லாரிலிருந்து கூனூர் வரையில் பன்னிரண்டு மைல் இம்மாதிரி அமைந்துள்ளது. ஸ்டேஷனிலும் சமதரையிலும் இச்சாதனம் கிடையாது. இதற்குத் தக்கபடி இஞ்ஜின் தயார் செய்கிறார்கள். 1890ல் கட்டப்பட்டது இச்சாதனம். இம்மாதிரி சாதனத்தில் ரயில் வண்டி செல்வது இந்தியாவிலேயே இந்த ஓர் இடத்தில்தான் என்று கூறுகின்றனர். ஆங்கிலேயப் பொறிஇயல் நிபுணர்களுக்கு இது அக்காலத்தில் மாபெரும் வெற்றி. இருப்புப் பாதையின் இரண்டு பக்கங்களிலும் அழகான பள்ளத்தாக்குகளையும் நீர் வீழ்ச்சிகளையும், காட்டாறுகளையும் காணலாம்.

உதகமண்டலத்தில் நம் கண்ணைக் கவரும் இடம் தாவர இயல் பூங்கா. 140 ஆண்டுகளான இத் தோட்டம் 1825ல் உதகையிலிருந்த சில ஆங்கிலேயர்களால் காய்கறித் தோட்டமாக ஆரம்பிக்கப்பட்டது. பின்பு தாவர இயல் பூங்காவாக மாற்றப்பட்டது. 1847ல் தாவர இயல் சங்கம் ஏற்படுத்தப்பட்டது. அப்பொழுது சென்னை கவர்னராக இருந்த டிவிடேல் என்பவர் இதில் ஆர்வம் காட்டி ஆயிரம் ரூபாய் நன்கொடையாக அளித்தார். பின்பு இங்கிலாந்தில் இருக்கும் பிரசித்தி பெற்ற கியூ தோட்டத்திலிருந்து மெக்கிவர் என்ற நிபுணர் வரவழைக்கப்பட்டார். 1848ல் வந்த இவர் அரசாங்கத்திடம் இருந்து உதவி பெற்று இத் தோட்டத்தைச் சீர்ப்படுத்தினார். முடிவில் 1853ல் அரசாங்கமே இதைத் தன் மேற்பார்வையில் வைத்துக் கொண்டது. 1857ல் காய்கறிகள் பயிரிடுவது நிறுத்தப்பட்டு, பூங்காவாக மாறியது. 1883ல் மற்றுமொரு தாவர இயல் அதிகாரி நியமிக்கப்பட்டு அவர் மேற்பார்வையில் பூங்கா வளர்ந்தது. முடிவாக 1896ல் கலெக்டர் வசம் ஒப்படைக்கப்பட்டது. ஆனால் இந்தப் பூங்காவை வளர்த்துக் கட்டிடங்கள் கட்டிய பெருமை மெக்கிவரையே சாரும். இப்பூங்காவின் விஸ்தீரணம் ஐம்பது ஏக்கர்.

உதகைக்குப் பக்கலில் உள்ள பொழுது போக்குக்கான இடங்கள் "கேலின் ஹில்" முக்கர்ட்டி, பைகாரா முதலியன. மோயார் மற்றும் குண்டா மின் திட்டங்களும் நீலகிரி மாவட்டத்தில் உள்ளன.

உதகையின் கடை வீதியிலிருந்து ஏரிக்குச் செல்லலாம். இது செயற்கை ஏரி. இரண்டு சதுர மைல் கொண்டது. 1823ல் சலிவன் கலெக்டரால் ஏற்படுத்தப்பட்டது. படகோட்டுதல் பொழுதுபோக்கு.

உதகைக்கு ஆறு மைல் தொலைவில் உள்ளது தொட்டபெட்டா சிகரம். இங்கிருந்து மைசூர் கோவை பீடபூமிகளைக் காணலாம். தொட்டபெட்டாவின் உயரம் 8640 அடி. சென்னை ராஜ்யத்தில் மிகவும் உயரமான மலைச் சிகரம் இதுவே.

உதகையிலும் அதையொட்டியுள்ள கூனூரிலும் சுற்று வட்டாரங்களில் மனோரம்யமான இயற்கைக் காட்சிகளை அனுபவிக்க ஏற்றதான வேறு பல இடங்களும் உண்டு.

உதகமண்டலத்துக்குப் பக்கலில் உள்ளது 'முதுமலை வனவிலங்கு சரணாலயம்'—1840ல் ஏற்படுத்தப்பட்டபோது 24 சதுர மைல் விஸ்தீரணம் உள்ளதாக இருந்தது. 1956ல் 114 சதுர மைல் உள்ளதாக ஆகிவிட்டது. உதகை — மைசூர் ரோட்டில் 40 மைல் தொலைவில் உள்ளது. பலவிதமான வனவிலங்குகளையும், பட்சிகளையும் காணலாம். தெப்பக்காடு யானைகளுக்குப் பெயர் போனது. இங்கு வேட்டையாடுதல் தடுக்கப்பட்டுள்ளது.

# வட்டார நகைச்சுவை

## நெல்லை



குசலம் விசாரிக்கும்போது ஆண் குழந்தை எத்தனை, பெண் குழந்தை எத்தனை என்று கேட்பதற்கு ''வீட்டுக்கு எத்தனை? ஊருக்கு எத்தனை?'' என்று கேட்பார்கள். பிறந்தகத்திலேயே ஆண்கள் நிலைத்திருப்பதால் ஆண் குழந்தையை வீட்டுக்கு என்றும் பெண்கள் புக்ககம் செல்வதால் பெண் குழந்தையை ஊருக்கு என்றும் சொல்லுவார்கள்.





எந்தச் சாமான் வாங்கினாலும் பல மளிகைக் கடைகளில் 'ஓசி'க்குக் கருப்பட்டி (பனைவெல்லம்) கொடுப்பார்கள். எனவே அதற்குப் 'போடு கருப்பட்டி' என்று வேடிக்கையாகச் சொல்வார்கள். இதேபோல் ஒருவரைக் கேலி பண்ணும்போது 'போடா, போடு கருப்பட்டிப் பயலே!' என்பார்கள்.

**எம். பி. முத்துக்கனி**



**வாய் சாமர்த்தியத்துக்கும் சிக்கனத்துக்கும் பெயர் பெற்றது நெல்லை**

சிக்கனமான ஒரு தம்பதி காலை ஆகாரத்துக்காக வழக்கம்போல் மூன்று தோசை தயாரித்துச் சாப்பிடப் போகும் வேளையில் ஒரு விருந்தாளி வந்துவிட்டார். வந்தவருக்கும் கணவனுக்கும் முதலில் ஒவ்வொரு தோசையைப் போட்டுச் சாப்பிட்டானபின் மீதி இருக்கும் ஒரு தோசையைக் கணவனுக்குத் தட்டில் போடப்போகும் சமயம் 'சீ எனக்கு வேண்டாம், ஒன்றுக்குமேல் மனுஷன் தின்ன முடியுமா? அண்ணாச்சிக்குப் போடு' என்று அந்தப் பக்கம் கையைக் காட்டினார். விருந்தாளி 'என்ன சொரணை இல்லாதவரா?' ஐயோ இதுவே எனக்கு அதிகம்' என்று சொல்லிவிட்டார். ஆக அம்மையாருக்கும் தோசை கிடைத்துவிட்டது. விருந்தும் முடிந்துவிட்டது..

-சி. ராசையா

தந்தை இருப்பது திருநெல்வேலி டவுனில். மணமாகாத மகன் திருச்சியில் வேலை பார்க்கிறான்.

தந்தையின் கடிதம்: ''இரண்டு இடங்களில் பெண் இருப்பதாகத் தரகர் தெரிவித்தார். ஒன்று உள்ளூரில்; மற்றது பேட்டையில். உள்ளூர்ப் பெண்ணையே முடிக்கலாம் என்று நானும் உன் அம்மாவும் நினைக்கிறோம். வெளியூரில் சம்பந்தம் போடுவதால் வீண் செலவுதான் ஏற்படும். பெண்ணைப் பார்க்க நீ புறப்பட்டு வா. 'மெயிலில்' வரவேண்டாம். வீண் செலவு. சாதாரண ரயிலிலேயே மூன்றும் வகுப்பில் வா.''

மைந்தனின் பதில்: ''பெண்ணை நீங்களே பார்த்து முடிவு செய்தால் போதும். அதனால் நமக்கும் செலவு மிச்சம். பார்க்கிறவர்களும் 'பெற்றோர் கிழித்த கோடு தாண்டாத பிள்ளை' என்று என்னை மெச்சுவார்கள்.

ஆமாம், கடிதத்தைப் பத்துப் பைசா கவரில் ஏன் எழுதினீர்கள்? கார்டிலேயே எழுதியிருக்கலாம்.''

குறிப்பு: திருநெல்வேலிக்கும் பேட்டைக்கும் இடையே உள்ள தூரம் 4 கிலோ மீட்டர்கள்.

— ச. பழநிவேல்



பரிசுத் தொகையான ரூபாய் இருபத்தைந்து பெறுபவர்: ச. பழநிவேல்
6, புளியமரத்துச் சந்து, கள்ளத் தெரு, திருச்சி-8

"நட்சத்திரங்கள், கிரகங்கள் இருப்பிடத்தைப் பற்றி உங்களுக்குத் தெரியுமோ?" என்று கேட்டார் கல்கத்தாவாசி.

"ஓ! எம். ஜி. ஆர். லாயிட்ஸ் ரோடு, சாவித்திரி ஹபிபுல்லா ரோடு, தேவிகா ராஜா அண்ணாமலைபுரம்."

"சுவாமி! நான் வெள்ளித்திரை நட்சத்திரங்களைப் பற்றிச் சொல்லவில்லை. வான மண்டலத்திலுள்ள நட்சத்திரங்கள், கிரகங்களைப் பற்றிக் கேட்கிறேன்!" என்று சிரித்தபடியே சொன்னார் கல்கத்தாவாசி.

"ஓஹோ! அவையா! எங்க பாட்டனார், அந்தக் காலத்தில் எங்க அப்பாவை இரவில் வீட்டுக்கு வெளியில் உட்கார வைத்து



# செவ்வாய் கிரகம் செல்வோமா?



நட்சத்திரங்களைப் பற்றிச் சொல்வாராம். எனக்குச் சினிமா நட்சத்திரங்களைப் பற்றிய தகவல்கள் அத்துப்படி!"

"சரி! உங்கள் மாதிரி ஆட்களுக்கும் வான மண்டல சாஸ்திரம் புரியும்படியாக ஓர் இடம் கல்கத்தாவில் சௌரிங்கியில் இருக்கிறது. போகலாமா?" என்று கேட்டார் கல்கத்தாவாசி.

"ஓ! இது ராக்கெட் உலகம் கொஞ்சமாவது அதைத் தெரிந்து வைத்துக் கொண்டால்தான் ஊரில் தற்பெருமையடித்துக் கொள்ள வசதியாக இருக்கும்!" என்று இறக்கை கட்டிப் பறந்தேன்!

சிறிது நேரத்தில் பிர்லா கிரக ஆராய்ச்சி நிலையத்துக்கு ( Birla Planetarium ) ராக்கெட் வேகத்தில் ஜீப்பில் வந்து சேர்ந்தோம். கிரக ஆராய்ச்சி நிலையத்தின் வாசலிலேயே ஏராளமான மக்கள் அதைக் காணக் குழுமியிருந்தனர். இந்நிலையத்தின் தலைவர் திரு சுப்பிரமணியம் நம் தமிழ் நாட்டுக்காரர். இந்த நவீன யுகத்தில் வெள்ளித்திரை நட்சத்திரங்களை மறந்து, வானமண்டல நட்சத்திர ஆராய்ச்சியில் இவராவது மூழ்கியிருக்கிறாரே என்று சந்தோஷமாக இருக்கிறதல்லவா? இவர் புது தில்லியில் விஞ்ஞான ஆராய்ச்சி நிலையத்தில் டாக்டர் கே. எஸ். கிருஷ்ணனிடம் பயிற்சி பெற்றவராம்.

"இது விண்வெளியுகம். ராக்கெட்டில் ஏறி வானமண்டலத்தை அளக்கும் காலம். முக்கால் மணி நேரத்தில் செவ்வாய் கிரகத்துக்குச்



முன் பக்கம்: உஜ்ஜயினியிலுள்ள பிரசித்திபெற்ற வான ஆராய்ச்சி நிலையம். (ஜந்தர்மந்தர்) ★

கல்கத்தாவிலுள்ள பிர்லா கிரக ஆராய்ச்சி நிலையம். ★

இந்தப் பக்கத்தில்: வான மண்டல கிரக, நட்சத்திரங்களை நமக்கு விளக்கிக் காட்டும் கருவி. யூனிவர்சல் புரொஜக்டர். ★



சென்று திரும்பி விடலாம். வருகிறீர்களா?'' என்று கேட்டார் திரு சுப்பிரமணியம்.

சொப்பனபுரியோ, புது உலகமோ என்று எண்ணும்படியான வட்ட வடிவமான அரங்குக்குள் நுழைந்தோம். வட்ட வடிவமாக ஆசனங்கள் அமைக்கப்பட்டு ஐந்நூறு பேர்கள் வசதியாக அமர்ந்து கொண்டிருந்தனர். மேலே அலுமினியத்திலான அர்த்த சந்திர வடிவ விதானம். இன்னிசை இலேசாக முழங்குகிறது. அந்த இன்னிசையின் மயக்கத்திலே கிறங்கியிருக்கும் போது அன்றைய நிகழ்ச்சியை நடத்தி வைக்கும் இயக்குநர் தம் இடத்துக்கு வந்து மைக்கைத் தலையில் பொருத்திக் கொள்கிறார். அவருக்குக் கைக்கு எட்டிய தூரத்தில் விசைக் கருவிகள் இருக்கின்றன. அரங்கின் மத்தியிலே அதிசய வானமண்டலத்தைக் காட்டும் புரொஜக்டர் கருவி அமைக்கப்பட்டிருக்கிறது. கொஞ்சம் கொஞ்சமாக இன்னிசையைக் குறைத்து விட்டு இயக்குநர் தம் பேச்சைத் தொடங்குகிறார். ''இன்று உங்களைச் செவ்வாய்கிரகத்துக்கு அழைத்துச் செல்கிறேன்'' என்று கூறி விட்டு விசையை முடுக்குகிறார். உடனே மேல் விதானத்தில் சூரியன் கிடுகிடுவென்று தோன்றி அஸ்தமிக்கிறது. அஸ்தமிக்கும் வேளையில் செவ்வானத்தையும் பிறகு இருட்டையும் அநுபவிக்கிறோம். அடுத்த கணம் மேல் விதானத்தில் நிஜ வான மண்டலத்திலிருக்கும் நட்சத்திரங்களைப் போலவே நட்சத்திரங்கள் கண் சிமிட்டி ஒளி விடுகின்றன; கிரகங்கள் பளிச்சிடுகின்றன. சந்திரன் உதயமாகிறான். செவ்வாய் கிரகத்தைப் பெரிதாகக் காட்டி அதன் குண விசேஷங்களைக் காட்டுகிறார் இயக்குநர். செவ்வாய் கிரகம் போய்வருவதற்கு ஒன்றரை வருஷம் ஆகலாம் என்கிறார். 1985-ம் ஆண்டில் இருபது பேர்கள் ராக்கெட்டில் செவ்வாய் கிரகத்தில் போய் இறங்கவிருக்கிறார்கள் என்னும் நற்செய்தியைச் சொல்கிறார். முக்கால் மணி நேரம் ஓர் அதிசய உலகத்தில் இருந்த திருப்தி ஏற்படுகிறது.

ஃ ஃ ஃ

வான சாஸ்திரம் (Astronomy) நம் இந்திய மக்களுக்குப் புதிய சாஸ்திரமல்ல. பன்னெடுங் காலமாகவே நம் மக்கள் இரவில் வானத்தில் நட்சத்திரங்களையும், கிரகங்களையும் கணக்கிட்டு, புராணங்கள், கதைகள், கொள்கை விளக்கங்கள் செய்து வந்திருக்கிறார்கள். கிறிஸ்து பிறப்பதற்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, ஆரியர்கள் ரிக்வேதத்தை இயற்றிய தருணத்திலிருந்தே இவ்வான சாஸ்திரம் உருப்பெற்று வந்திருக்கிறது.

தில்லியிலும், ஜெய்பூரிலும் வான ஆராய்ச்சி நிலையங்கள் உள்ள இடங்கள் 'ஜந்தர் மந்தர்' என்று வழங்கப்படுகின்றன. கி. பி. 1699லிருந்து 1743 வரை ஆம்பரை ஆண்ட மகாராஜா இரண்டாம் ஜெய்சிங் உஜ்ஜயினி, ஜெய்பூர், காசி, தில்லி, மதுரா ஆகிய ஐந்து இடங்களில் வான மண்டல ஆராய்ச்சி நிலையங்களை நிறுவினார். அவருக்கு ஜோதிடக் கலையில் உள்ள ஆசை வான சாஸ்திரத்தையும் கற்கத் தூண்டியது. அவர் பல தேசங்களைச் சேர்ந்த அறிவாளிகளுடன் கலந்தாலோசித்து, அந்தந்த தேசங்களில் உள்ள அபூர்வ வான சாஸ்திரக் கலைகளைத் தெரிந்து கொண்டார். கோவாவிலுள்ள போர்ச்சுகீசியர்களும், ஜெஸூட்களும் ஐரோப்பிய வான சாஸ்திரத்தைத் தந்தார்கள். பாரசீகம், துருக்கிஸ்தான் முதலிய இடங்களிலுள்ள வான சாஸ்திரங்களைப் பற்றிய நூல்களைப் பல தூதுவர்கள் பெற்று வந்தார்கள். இதன் பிறகுதான் மகாராஜா ஜெய்சிங் ஐந்து வான மண்டல ஆராய்ச்சி நிலையங்களை ஏற்படுத்தினார். இவை சாமர்கண்டிலுள்ள பிரசித்தி பெற்ற உலுக் பெக் வான ஆராய்ச்சி நிலையத்தை அடிப்படையாகக் கொண்டவை. இந்தியாவில் வான மண்டலக் கலையில் தேர்ந்தவர்கள் சூர்ய சித்தாந்தாவும், பிரும்ம சித்தாந்தாவும் ஆவர்.

கல்கத்தாவில் உள்ள பிர்லா கிரக ஆராய்ச்சி நிலையம் உலகில் உள்ள மிகப் பெரிய வான சாஸ்திர ஆராய்ச்சி நிலையங்களில் ஒன்றாகும். இதை பிர்லா நிதி டிரஸ்டிலிருந்து பதின்மூன்று இலட்சம் ரூபாய் செலவில் நிர்மாணித்திருக்கிறார்கள். ஆராய்ச்சி நிலையத்துக்கான நிலத்தை மேற்கு வங்காள சர்க்கார் வழங்கியிருக்கிறார்கள்.

கிரக நிலையம் என்பது ஒரு வட்ட வடிவமான அரங்கை நிர்மாணித்து, அர்த்தசந்திர

வடிவில் விதானம் ஏற்படுத்தி, அரங்கின் நடுவில் பல நுணுக்கமான கருவிகள் கொண்ட புரொஜக்டரை நிறுவுவது. இந்த அதிசய இயந்திரத்தைத் தயாரித்தளித்த வர்கள் பிரசித்தி பெற்ற ஜெர்மன் நிறுவன மான கார்ல் செயிஸ். இந்தப் பிர்லா ஆராய்ச்சி நிலையத்தில் நிஜசூரியன், சந்திரன், கிரகங்கள், நட்சத்திரங்களைப் பார்ப்பது போன்ற பிரமையை உண்டாக்கி விடுகிறார்கள்.

1913ம் ஆண்டில் மூனிச்சிலுள்ள டியூச்சஸ் மியூஸியத்தின் டைரக்டர், ஹைடல்பர்க் வான மண்டல ஆராய்ச்சி நிலையத்தின் டைரக் டர் மாக்ஸ் வூல்ப் யோசனைப்படி, பிரபல ஜெர்மன் மூக்குக் கண்ணாடி தயாரிப்பாளர் களான கார்ல் செய்ஸை நட்சத்திரங்கள் கிரகங்களைப் பிரதிபலிக்கும் அதிசய இயந் திரமான புரொஜக்டரைத் தயாரிக்கும்படி வேண்டிக் கொண்டார். நான்கு வருஷக் கடும் உழைப்புக்குப் பின் திட்டப்படி பேராசிரியர் பார்ஸ் பீல்ட் அத்தகைய ஓர் இயந்திரத்தை உருவாக்கினார்.

1923ல் செயற்கையாக வான மண்டலத் தைப் பிரதிபலிக்க இந்தக் கருவி பயன்படுத் தப்பட்டது. வட முனையில் உள்ள நட்சத் திரங்களை மட்டும் பிரதிபலித்த இந்தக் கருவி வான மண்டல ஆராய்ச்சியாளருக்குத் திகைப்பைக் கொடுத்தது. டாக்டர் வில்லிகர் அந்தக் கருவியில் பல மாற்றங்களைச் செய்து வானமண்டலத்திலுள்ள பெரும்பாலான கிரகங்களையும், நட்சத்திரங்களையும் பிரதி பலிக்கும் கருவி உருவாக வழிவகுத்தார். யூனிவர்சல் புரொஜக்டர் பிரசித்தியடைந்து உலகின் பல இடங்களில் இருபத்தைந்து கருவிகள் நிறுவப்பட்டன. நூறு லென்ஸ் களுக்கு மேல் கொண்டுள்ள இந்தப் புரொஜக் டர் பல நுணுக்கமான பாகங்களைப் பெற் றது. இதன் எடை இரண்டு டன்னும். 9000 நட்சத்திரங்களைப் பிரதிபலிக்கும் சக்தி படைத்தது இந்தக் கருவி. இந்தக் கருவி யைக் கண்ட்ரோல் அறையிலிருந்து இயக்குநர் மின்சார முறையில் இயக்க முடிகிறது.

பிர்லா கிரக ஆராய்ச்சி நிலையத்தில் முக்கால் மணி நேரத்தில் ராக்கெட் வேகத்தில் செவ் வாய் கிரகத்துக்கே சென்று விட்டுத் திரும் பிய திருப்தியுடன் வெளி வருகிறோம். நிஜ மாகவே செவ்வாய் கிரகத்துக்குச் செல்லும் வாய்ப்பு கிட்டினால்....? அந்த அதிசயப் பிர யாணம் விரைவில் நிறைவேறுமலா போகப் போகிறது? அமெரிக்கர்களும், ரஷ்யர்களும் போட்டி போட்டுக் கொண்டு செவ்வாய் கிர கத்தில் இறங்க முயற்சி செய்து வருகிறார்கள். இப்பொழுதே அவர்களுக்கு 'ஒவி' டிக்கெட் டுக்கு முதலில் 'புக்' பண்ணச் சொல்லி எழுதி விட்டால் போகிறது!

—**குண்டுமணி**

---

## தலைவலியாளர் சங்கம்.....?



- ☐ சூரிய கிரகணம் அதிகபட்சம் எத்தனை நிமிடங்கள் நீடிக்கும்?
- ☐ உலகிலேயே மிகப் பெரிய பூ சுமத்ராவில் காணப் பட்டதாகச் சில ஆண்டுகளுக்குமுன் செய்தி வந்தது. பூவின் எடை அல்லது விட்டத்தை உத்தேசமாகக் கூற முடியுமா?
- ☐ தென் ஆப்பிரிக்காவில் உள்ள இந்த நகரத்தில் 'தலைவலியால் அவதிப்படுவோர் சங்கம்' ஒன்று நிறுவப்பட்டது மூன்று ஆண்டுகளுக்கு முன்! நினை விருக்கிறதா நகரத்தை?
- ☐ ஒரு பவுண்டு எடையுள்ள சிலந்திக் கூடு தயாராகச் சுமார் எத்தனை சிலந்திப் பூச்சிகள் தேவை?
- ☐ லிங்கன், கென்னடி இவ்விருவரது காரியதரிசி களாகப் பணியாற்றிய பிரமுகர்களின் பெயர்களுள் விசித்திர ஒற்றுமை ஒன்று உண்டு. என்ன அது!
- ☐ சாக்ரடீஸ், சாஸர், பெர்னார்ட் ஷா, பேகன், டார்வின், டிக்கன்ஸ், ஷேக்ஸ்பியர், மோசஸ் இந்த எண்மரில் தாடி வைத்திருந்த பெரியார்களை மட்டும் பிரித்துக் கூற முடியுமா?
- ☐ பிரதி வருடமும் ஒரு குறிப்பிட்ட தேதியில்தான் நோபல் பரிசுகள் சாதாரணமாக வழங்கப்படுகின் றன. தேதியை 'டக்' எனக் கூற முடியுமா?
- ☐ மனிதனுடைய தோலில், ஒரு தபால் தலை அளவு பிரதேசத்தில் எத்தனை அடி நீளமுள்ள ரத்தக் குழாய்கள் அடங்கி உள்ளன?

- பரணி

(விடை 50ம் பக்கம் பார்க்க)




## அத்தியாயம் 4

ஒற்றை நாடி உடம்பு என்று சொல்லுவதைவிட, குச்சியான உடம்பு என்று தான் பாகீரதியைப் பார்த்தவர்கள் சொல்லுவார்கள். ஒட்டிய கன்னங்கள், குழி விட்ட கண்கள், உடம்பின் நிறமே மாறி வெளிறிப் போன நிறம். எந்த நிறத்திலும் சேராத ஒரு தனி நிறம். தலை முழுதும் ஒரே தும்பைப் பூ போன்ற வெண்மை. அவளைப் பார்க்கும்போது எல்லாம் சந்தானத்தின் உள்ளம் கசியும்! இவள் ஏன், எதற்காக உயிரை இத்தனை சிறிய எலும்புக் கூட்டுக்குள் வைத்துக் கொண்டு, காற்றில் அகல் விளக்கு அணையாமல் இருக்க வேண்டுமே என்று தவிக்கிறவளைப் போலத் தவிக்கிறாள்? அவளுக்குத் தெரியும், இனிமேல் தான் வாழ ஒன்றும் இல்லை என்று! ஆனால் பாகீரதி தனக்காகவே வாழும் கூட்டத்தைச் சேர்ந்தவள் இல்லையே? அவள் வயிற்றிலிருந்து விழுந்த மூன்று பூக்கள் காற்றிலே விழுந்தோ, மண்ணிலே புதைந்தோ போகாமல் இருக்க, அவர்கள் பிறந்த பிறவியின் பயனை அடைய வேண்டும் என்ற ஒரே துடிப்போடு அல்லவா அவள் வாழ்கிறாள்?

சற்றைக்கெல்லாம் காப்பி வந்தது.

''நேற்று பார்த்தாயா, சந்தானம்? உனக்கு என்ன தோணறது?'' என்று தம்ளரையும் டபராவையும் கொடுத்துக் கொண்டே அவள் கேட்டாள். எதையோ எதிர்பார்க்கிறவளுடைய ஆர்வம் குரலில் ஒலிக்காவிட்டாலும், அவளுடைய மனத்தின் ஆதங்கத்தைச் சந்தானம் புரிந்து கொண்டான்.

ஒரு வாய்க் காப்பியைப் பருகின அவன், அதன் சூட்டின் இனிமையை அநுபவித்துக் கொண்டே, ''பார்த்தேன், மாமி! ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தேன்!'' என்றான்.

பாகீரதியின் முகத்தில் திடீரென்று ஒரு நம்பிக்கை ஒளி உதயமாகி விட்டதாகச் சந்தானத்துக்குத் தோன்றியது. அவன் வெகு நேரம் பேசியதாகச் சொன்ன தகவல்தான் அதற்குக் காரணம் என்று அவன் கருதினான்.

அவன் காப்பியை மெதுவாகச் சாப்பிட்டு முடித்தான்.

''அப்போ முடிச்சுடலாம் இல்லியா?''

''சீதாவுக்கு வேறே நல்ல இடமாகப் பார்க்கலாம், மாமி!''

பாகீரதியின் முகம் மாறிக் கறுத்தது. ''ஏன், அறுநூறு ரூபாய் சம்பளம். சொந்த வீடு வேறு இருக்கு.''

''எதுக்கு மாமி சீதா இரண்டாந்தாரமாகப் போகணும்?''

''அது தெரிந்துதானே இந்த வரனைப் பார்த்தோம்?''

''எனக்கு அப்போதே பிடிக்கவில்லை. ஏதோ உங்க வார்த்தையைத் தட்டப்படாதுன்னுதான் நானும் ஒத்துப் போனேன்...''

''பெண்களுக்கு வயசு ஏற ஆரம்பிச்சா விஷம் போல ஏறும்!''

''இன்னும் கொஞ்சம் பொறுங்கள். அவசரப்பட்டு நாற்பது வயசுக்காரனுக்கு. அவன் தயாராக

இருக்கிறான் என்கிற காரணத்துக்காகச் சீதாவைப் பலி கொடுக்க வேண்டாம்.''

''சீதாவுக்கு இந்த மாசிக்கு இருபத்தேழு நிறையறது...''

''இருக்கட்டும். நீங்கள் இதிலே பிடிவாதமா நின்றால் சீதாவுக்கே பிடிக்காது....''

''இந்த ஒரு வரனும் போய்விட்டால், இன்னொன்று இதுமாதிரி...''

''இதுமாதிரி இன்னொன்று கிடைக்க வேண்டாம். இதைவிட நல்லதாகக் கிடைக்கட்டும்...''

''அது இந்த ஜன்மத்தில் கிடைக்காது...''

''மாமி! நானும் ஏதாவது பார்க்கிறேனே. இந்தப் பிள்ளையைக் கட்டோடு பிடிக்கவில்லை. பார்த்தால் நாற்பத்தைஞ்சு வயசுக்கு மதிப்புப் போடுவார்கள். உயரமே இல்லை. போதாததற்குத் தொந்தி வேறு. வேண்டாம் மாமி! சீதாவுக்கு என்னதான் வயசானாலும் அவளை ஜன்மம் முழுதும் அழவைக்கக் கூடாது.''

பாகீரதி மேலே ஏதும் பேசாமல் காலி தம்ளருடன் திரும்பினாள். ஆனால் அவள் மனத்தில் வைராக்கியமான முடிவு பிறந்து விட்டதை வெளியில் சொல்லவில்லை.

சந்தானமும் தன் அறையை நோக்கி நடந்தான். ஏதோ ஒரு காரியத்தில் பிரமாதமான வெற்றியைக் கண்டு விட்டவனைப்போல அவனுடைய மனம் திருப்தியில் லயித்தது. ஆனால் பாகீரதியின் மனத்தை அவன் பூரணமாகப் புரிந்து கொள்ளவில்லையே?

முன்பின் உறவோ பழக்கமோ இல்லாத பாகீரதியின் குடும்பத்தோடு சந்தானத்தின் வாழ்க்கை ஒட்டிக் கொண்டது ஒரு விசித்திரம்தான். எங்கோ திசை கெட்டுச் செல்லும் இரண்டு காட்டாறுகள் சந்தித்துக் கொள்வதைப் போலத்தான் திடீரென்று சந்தானம் பாகீரதியைச் சந்தித்தான். தொடர்பு என்னவோ ஒரு பொறி போலத்தான் கிளம்பியது, எட்டு ஆண்டுகளுக்கு முன்னால். ஆனால் அப்பொறி வெறும் அறிமுகத்தோடு நிற்காமல் மெல்ல மெல்ல வளர்ந்து தெய்விக சிநேகமாகக் கொழுந்துவிட்டுத் தீபமாகப் பிரகாசிக்கலாயிற்று. இதற்கு யார்தான் முக்கிய காரணமென்று எவருமே சொல்ல முடியாது. பரிசுத்தமான சந்தானத்தின் உள்ளத்துக்குப் பரிவையும் அன்பையும் தவிர வேறு எதையும் சுரக்கத் தெரியவில்லை. நன்னடத்தையும் பண்பும் அவனுடைய ரத்தத்தில் ஊறிய ஜீவதாதுக்கள்.

வாழ்க்கையில் சமூகத்தில் தான் ஒரு கருகிவிட்ட மரம் என்ற நினைப்பிலேயே புழுங்கிப் புழுங்கித் தன்னைத் தானே சதா வெறுத்துக் கொண்டிருந்த பாகீரதி அம்மாள் உலகம் அறியாத பேதை. வெளுத்ததெல்லாம் பால் என்று எண்ணும் சுபாவம் உள்ளவள். பிறர் மனம் புண்படப் பேசி அறியாதவள். இப்போதெல்லாம் தன் பெண்கள் நாதனற்று நிற்பதைக் கண்டு மனம் வெதும்பி வெறுத்துக் கோபமும் ஆத்திரமும் அவள் வாயிலிருந்து வெடிக்கின்றன. ஆனால் அவை அவளுடைய தோல்வியைத் தவிர வேறு எதையும் கண்டிராத உள்ளத்தின் கசிவு ஆவிகள்தான். அவளுடைய வெந்துபோன இருதயத்துக்கு மருந்தாக இருக்கிறவன் சந்தானம்தான்.

எட்டு ஆண்டுகளுக்கு முன்னால் கோயமுத்தூரிலிருந்து பெட்டியும் படுக்கையுமாகச் சென்னை சென்டிரல் ஸ்டேஷனில் பிழைப்புத் தேடி இறங்கியவன் சந்தானம். அவன் மீது அபிமானம் கொண்ட பிரமுகர் கொடுத்திருந்த கடிதத்துடன் அவன் அளவில்லாத நம்பிக்கையுடன் வந்தான். வந்த அன்றே கடிதத்துடன் கோதண்டராமனைப் பார்த்தான். வேலையும் கிடைத்தது. பல்லைக் கடித்துக் கொண்டு ஓராண்டுக் காலம் கோதண்டராமன் மனச் சாட்சியைக் குழிதோண்



டிப் புதைத்து விட்டுச் செய்யும் வியாபாரத்தில் அவருடைய கருவியானான். அதன் பிறகு அவனுக்கும் திடீரென்று விடிவு பிறந்தது. ஒரு பெரிய பிரபல கம்பெனியில் வேலை கிடைத்தது. ஒரு வருட காலத்தில் தன் 'வியாபாரத்தை' முழுதும் அறிந்திருந்தும் சந்தானம் நேர்மையாகவே இருந்திருக்கிறான் என்ற திருப்தியில் கோதண்ட ராமன் அவனுக்கு ஒரு மாத சம்பளத்தை வெகுமதியாகக் கொடுத்தே அனுப்பினார்.

முதன் முதலில் மயிலாப்பூரிலே ஒரு தூர பந்துவின் வீட்டில் தங்கியிருந்த சந்தானம் வேறு இடம் பார்க்கலானான். உறவினரே, தம் பெரிய குடும்பத்துடன் ஒண்டுக் குடித்தனத்தில் திண்டாடிக் கொண்டிருந்தார். சந்தானம் தான் வேறு பாரமாக இருப்பதை விரும்பவில்லை. அவனுடைய அதிர்ஷ்டம் சீக்கிரத்திலேயே ஒரு தனி அறை கிடைத்தது. அதுதான் அரிசிக்காரன் தெருவில் பாகீரதி அம்மாள் குடியிருந்த வீட்டில், ரேழிக்கு வலது புறமாகத் திண்ணைக்கும் கூடத்துக்கும் நடுவே இருக்கும் அறை.

அப்போது முப்பது ரூபாய் வாடகையைக் கூடத் தாள முடியாத நிலையில் பாகீரதி அம்மாள் தவித்துக் கொண்டிருந்தாள். இன்னும் குறைந்த வாடகைக்கு ஏதாவது ஓர் ஒண்டிக் குடிக்குப் போக முடியும் என்றாலும் யாருக்கும் அதில் விருப்பமில்லை. பெண் வர்க்கம் மட்டுமே உள்ள ஒரு குடும்பம், ஒரு தனி வீட்டில் ஒடுங்கி வாழ்வதுதான் நல்லது என்று பாகீரதி அம்மாள் நினைத்தாள்.

நிலைமை இப்படி இருந்தபோது சீதா ஒரு நாள் திடீரென்று ஒரு யோசனையைத் தெரிவித்தாள். வீட்டின் முன் பக்கத்து அறையை யாருக்காவது வாடகைக்கு விட்டால் என்ன? பாரம் கொஞ்சமாவது குறையும். படுக்கை அறையிலும் கூடத்திலுமாக ஜானுவும் கமலாவும் படித்துக் கொள்ளலாம். காரியாலயம் செல்லும் சீதாவுக்கோ, சமையலறையைத் தவிர வேறு எந்தக்



கதியும் இல்லாத தாயாருக்கோ தனி அறை என்ற தேவை ஏதும் இல்லை.

எடுத்த எடுப்பிலேயே பெண்ணின் யோசனையை நிராகரித்த தாயார், நாள் செல்லச் செல்ல வீட்டுச் செலவுகளும் பணக் கஷ்டமும் நெருக்க நெருக்க, மெள்ள மெள்ளச் சீதாவின் யோசனையை அலசிப் பார்த்தாள். பொருளாதாரப் பிரச்னை மற்ற எல்லாப் பிரச்னைகளையும் விழுங்கிக் கொண்டு அவள் முன் பயங்கரமாக எழுந்தது. என்னதான் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி வாழ்ந்தாலும் ஓர் எல்லைக்கு மேல் அவளால் தாள முடியவில்லை. மாதக் கடைசியில் பஸ்ஸுக்குச் சில்லறை இல்லாமல் சீதா மூன்று மைல் நடந்து வருவதைக் கண்டு இரத்தம் கசிந்தது.

மூன்று பெண்களை உத்தேசித்துப் பாகீரதி அம்மாள் கடைசியில் சீதாவின் எண்ணத்துக்கு இசைந்தாள். ஆனால், தையற்காரர்களோ, சின்னாளம்பட்டுப் பட்டுப் புடவைக்காரர்களோ, அல்லது இது போன்ற சிறு தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களோ வரக்கூடாது என்று மட்டும் கண்டிப்பாகச் சொல்லி விட்டாள். அறை தேடி வருபவரை அங்கீகரிக்கும் பொறுப்பு தாயாருடையதுதான் என்று சீதா வாக்களிக்கவே, பாகீரதி அம்மாள் ஒருவாறு திருப்தி அடைந்தாள்.

இரண்டு மூன்று பேர்கள் வந்து போன பின்தான் சந்தானம் ஒரு நாள் மத்தியானம் வந்து நின்றான். அப்போது வீட்டில் பாகீரதி அம்மாள் மாத்திரம்தான் இருந்தாள்.

ரேழிச் சுவரில் சாய்ந்து கொண்டே மரியாதையுடன் அவன் விசாரித்தவிதம் பாகீரதியின் மனத்தில் ஒரு நல்ல எண்ணத்தை உண்டாக்கி விட்டது.

சந்தானத்தின் சாந்தம் ததும்பிய முகமும், தாழ்ந்த குரலும் பாகீரதியைக் கவரவே அவள் மேலும் மேலும் அவனுடைய குடும்பத்தைப் பற்றி விசாரித்தாள். அவன் தன் வரலாற்றைச் சொல்லி முடித்தபோது பாகீரதியின் கண்கள் கனத்தன. அவளைப் போலத்தான் அவனும்! நிர்க்கதியாக விடப்பட்ட எத்தனையோ குடும்பங்களில் சந்தானத்தின் குடும்பமும் ஒன்று என்று அறிந்த போது, அந்த அநாதைத் தன்மையே இருவருக்கிடையில் ஒரு பாலமாக அமைந்து விட்டது.

தாயையும் தந்தையையும் இழந்த அவன் என்னதான் இரக்கத்துக்கும் தாட்சண்யத்துக்கும் உட்பட்டாலும், அவனுடைய வயதைக் கண்டு பாகீரதி பயந்தாள். இருபத்தி நாலு வயது இளைஞனை மூன்று பெண்கள் இருக்கும் வீட்டுக்குள் அனுமதிப்பதா? இந்தக் கேள்விக்கு அவள் மனம் திருப்திகரமான எந்தப் பதிலையும் தர முடியாமல் தவித்தது. ஆனால் பாகீரதி அம்மாளின் அசைக்க முடியாத தன்னம்பிக்கையும் அவளுடைய நிலையால் திடீரென்று தோன்றிவிட்ட தைரியமுமே கடைசியில் ஒரு பதிலை அளித்தன. சந்தானத்தைப் போன்ற பிள்ளைகள் வீடு நிறையக் குழுமியிருந்தாலும் அவர்களால் எந்தப் பெண்ணுக்கும் எந்த விதமான ஆபத்தும் வராது என்று அவள் நம்பினாள். இந்த உள்ளுணர்வின் தீர்ப்பே அவளுக்கு முடிவையும் சொல்லிற்று. ஆனால் சந்தானம் அறை கிடைக்கிறது என்ற சந்தோஷத்தில் உடனேயே ஏற்றுக் கொள்ளவில்லை. அவளுடைய பெண்களை ஒரு தடவைக்கு இரு தடவையாகக் கலந்து ஆலோசித்து முடிவு கூறும்படி சொல்லி விட்டுச் சென்றான் சந்தானம்.

மறுநாள் அவன் வந்தபோது, பாகீரதி புன்முறுவலுடன் அவனை வரவேற்றாள்.

அன்றைக்குத் தோன்றிய புன்முறுவல் இன்றுவரை மாறவில்லை. முன்பின் தெரியாத ஏதோ ஒரு குடும்பத்திலிருந்து வந்த சந்தானம் இன்று பாகீரதி பெறாத பிள்ளை. மூன்று பெண்களுக்கும் ஆதரவாக, பாதுகாப்பாக, உபகாரியாக இருக்கும் சகோதரன்.

அவனைப் புரிந்து கொள்ளவே யாரும் கஷ்டப்படவில்லை. ஜானுவும் கமலாவும் அவனைக் கேலி செய்தார்கள். அவன் சிரித்தான். ஒரொரு சமயம் வாழ்க்கையின் ஏமாற்றத்தில் தன் வசம் இழந்து சீதா அவனை அலட்சியப்படுத்துவாள்; அல்லது மனம் நோகும்படி பேசுவாள். ஆனால் அவளை நன்றாகப் புரிந்து கொண்டிருந்த சந்தானம் மௌனமாக நிற்பான்.

அந்தக் குடும்பத்தில் எது நடந்தாலும் அதில் சந்தானம் இருந்தான். பத்து ரூபாய் வாடகை என்று பேசி வந்தவன், வெறும் குடிக்கூலியை மட்டுமா கொடுத்தான்? எத்தனைமுறை பணம் இல்லாமல் மெல்லவும் இயலாமல் விழுங்கவும் முடியாமல் பாகீரதி அம்மாள் தவித்திருக்கிறாள்? எத்தனை முறை சீதா நாளுக்காக உதவி கோரி வந்திருக்கிறாள்? அப்போதெல்லாம் சந்தானத்தைத் தவிர வேறு யார் ஒடிந்து விழும் கிளையைத் தாங்கிக் கொண்டு நின்றிருக்கிறார்கள்?

ஆரம்பத்தில் பாகீரதியின் மனத்தில் சந்தானத்துக்கும் சீதாவுக்கும் நல்ல பொருத்தம் இருக்கிறது என்ற சபலம் இருந்தது. ஆனால் சந்தானமே அவளுடைய சபலம் மேலும் வளராதபடி தகர்த்தெறிந்து விட்டான். அதற்குப் பின் பாகீரதி தன் ஆசையை என்றுமே வளர்த்ததில்லை.

அன்றைக்கு நூறு ரூபாய் சம்பளத்தில் உத்தியோக வாழ்க்கையைத் தொடங்கிய சந்தானம் இன்று கை நிறைய ஐந்நூறு ரூபாய் வாங்குகிறான். அவனுடைய பணத்துக்கு என்ன செலவு? தாயார் இருக்கிறாளா? தந்தை இருக்கிறாரா? இல்லை, அண்டிவாழத் தம்பி தங்கைகள்தான் இருக்கிறார்களா? கம்பெனி அளிக்கும் போனஸும் சம்பளத்தில் மிச்சமாகும் பணமும் பாங்கியில் உறங்க ஆரம்பித்தன.

சுமார் ஏழரை மணிக்குச் சந்தானம் பேப்பருடன் கூடத்துக்கு வந்தான்.

அதே சமயம் உள்ளேயிருந்து பாகீரதி அம்மாள் வந்தாள். காலையில் தன்னுடைய அபிப்பிராயத்தை ரொம்பவும் ஆணித்தரமாகச் சொல்லிவிட்டோமோ என்ற கவலை அவன் மனத்தில் திடீரென்று எழுந்தது. ஆனால் அதைப் புரிந்து கொள்ளாத பாகீரதி அம்மாள், ''சந்தானம், வெந்நீர் ஆறிவிடறதுக்கு முன்னாலே குளிச்சுவிடு!'' என்றாள்.

அதே கணத்தில் அவளுடைய குரலை அடக்கிக் கொண்டு கமலாவின் இரைச்சல் வீட்டை இரண்டாகப் பிளந்தது. ''அம்மா, ஜானு புதுசா கடிகாரம் வாங்கியிருக்கா!''

சீதாவும் அம்மாவும் ஒன்றும் புரியாமல் விழிக்க, அசட்டுச் சிரிப்புடன் ஜானு, சந்தானத்தைப் பார்த்தாள்.

சமையலறையில் பாகீரதி அம்மாளுக்கு வேலை ஓடவில்லை. சீதாவுக்காகப் பார்த்திருக்கும் வரனை, அவள் நிச்சயமாக நடந்தேறிவிடும் என்று நம்பியிருந்த வரனைச் சந்தானம் ஒரேயடியாக ஒதுக்கியது மட்டுமல்லாமல் நிர்த்தாட்சண்யத்துடன் பேசியதை நினைத்த போது மனம் அலைபாய்ந்தது. ரகுபதியை அவள் பார்த்ததில்லையானாலும் அவனுடைய அத்தை அலமேலு அம்மாளை அவள் மூன்று நான்கு ஆண்டுகளாக அறிவாள். கதா காலட்சேபங்களிலும், கோவிலிலும் உண்டான பரிச்சயம் நாளடைவில் சிநேகமாகவே மாறிவிட்டது. அலமேலு சொல்லித்தான் பாகீரதிக்கே இந்த வரனில் ஒரு



''சார் வாழைப்பழமும் ஆரஞ்சுப் பழமும் ஏதாவது வேணுமா?''

''அழுகிப்போன தக்காளி இருந்தால் இரண்டு கொடு!''

பிடிப்பும், ஏன் ஒரு மோகமும் கூட ஏற்பட்டது. ரகுபதி கலியாணமான இரண்டு மூன்று மாதங்களிலேயே மனைவியை இழந்தவன். கலியாணமான பின் அவள் கணவனுடைய வீட்டுக்குப் போகுமுன்னேயே டைபாய்ட் ஜுரத்தில் விழுந்தவள்தானாம். தாலியைக் கட்டினவனேயானாலும், ரகுபதி ஒரு முழு பிரம்மச்சாரி என்றே நம்பினாள் பாகீரதி. இந்த ஓர் எண்ணமே பெண் இரண்டாந்தாரமாக வாழ்க்கைப்படுகிறாள் என்ற நினைப்பை அடியோடு மறைத்தது. சீதாவிடம் அவள் இது வரை நேர்முகமாகப் பிரஸ்தாபிக்கவில்லை. ஆரம்பத்திலேயே அவள் முட்டுக்கட்டை போட்டுவிடுவாளோ என்ற பயம் தாயாருக்கு. பூர்வாங்கக் காரியங்களை ஒருவாறு முடித்து விட்டால் சீதாவிடம் சொல்லி விடலாம். அதன் பின்னும் சீதா ஒப்புக் கொள்ள மாட்டாள் என்பது தெரிந்ததுதான். ஆனால் பாகீரதி ஊர் நியாயத்தையும் உலக நியதியையும் எடுத்துச் சொல்லி, கண்ணால் கண்ணீர் விட்டு, வாயால் கெஞ்சி, சீதாவின் காலை வேண்டுமானாலும் பிடித்து அவளுடைய சம்மதத்தைப் பெற்று விடுவாள்.

இந்தப் பூர்வாங்கக் காரியம் நிமித்தம் தான் சந்தானம் ரகுபதியை முந்தின இரவு சந்தித்தது. சந்தானத்துடைய அபிப்பிராயம் என்னதான் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய தொன்று

என்ற கட்டாயம் இல்லாவிட்டாலும அவனுடன் இத்தனை நாட்கள் பழகிய தோஷத்தாலும், அவன் மீது இயல்பாகவே பாகீரதி கொண்டிருந்த நம்பிக்கையாலும் அவள் என்ன செய்வது என்று தெரியாமல் தவித்தாள்.

காலையில் காப்பி சாப்பிடும்போது, இருவருமே கொஞ்சம் அவசரப்பட்டு விட்டதாகத் தோன்றியது பாகீரதிக்கு. மெள்ளச் சாவகாசமாக சந்தானத்துடன் இன்னொரு தடவை பேச வேண்டுமென்று ஒரு முடிவுக்கு வந்தாள். இந்த வரனைப் பற்றிய விஷயத்தில் அவன் வாயிலிருந்து ஏதேனும் ஒரு நல்ல வார்த்தை வந்தால் அவளுக்குப் போதும். அதைப் பிடித்துக் கொண்டு அவன் அபிப்பிராயத்துக்கு அங்கீகாரத்தைப் பெற்றுவிடுவாள்.

சிந்தனையின் போராட்டத்தினூடே அவள் சுமார் ஏழரை மணிக்குக் கூடத்துக்கு வந்தபோதுதான் கமலாவின் அலறல் காதில் அறைந்தது.

அம்மாவைக் கண்டதுமே கமலா, ''அம்மா அம்மா... இதைப் பாரேன். ரோல்ட்கோல்டு கடிகாரம். புடவைக்கு நடுவே ஞானு வச்சிருக்கா. கேட்டேன். பதில் சொல்ல மாட்டேன் என்கிறாள்!'' என்றாள். மின்சார ரயில் வேகத்தில் வார்த்தைகள் விரைந்தன.

''அதுக்கு ஏண்டி இப்படி அலர்றே? என்ன ஞானு, கடிகாரம் வாங்கியிருக்கியா?'' என்னதான் நிதானமாகக் கேட்டாலும் குரலில் கடுமையும், வேதனையும் ஒலித்தன. சீதாவைப் பற்றி உள்ளத்தில் புகைந்து கொண்டிருக்கும் வேதனை தான் அது என்று யாருக்குத் தெரியும்?

ஞானு சந்தானத்தைப் பார்த்து இலேசாகச் சிரித்தாள்.

''என்னடி, அம்மா ஏதோ கேட்கிறா... நீ அலட்சியமாகச் சிரிக்கிறே?'' என்றாள் கமலா. பிறகு ''ஏன் அக்கா நீ பேசாமல் இருக்கே?'' என்று கேட்டாள் சீதாவைப் பார்த்து.

ஏதோ பையில் மூழ்கியிருந்த சீதா, ''என்னை இரண்டு பேரும் தயை செய்து எதிலும் இழுக்காதீர்கள். எனக்கு இந்த வீட்டிலே யாரைச் சொல்லவும் உரிமை இல்லையே?'' என்றாள்.

சந்தானம் மெதுவாகத் தன் அறைக்குப் பின்வாங்கி, அறை வாயிலில் நின்று கொண்டான். என்னதான் இந்தக் குடும்பத்துடன் ஓர் அன்னியோன்னியம் இருந்தாலும் தர்க்கத்தில் கலந்து கொள்ளுவதை விட வேடிக்கை பார்ப்பதே நல்லது என்று அவன் நினைத்தான்.

பதில் சொல்லாத ஞானுவைப் பார்த்த பாகீரதிக்கு ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது.

''ஞானு, இது ஏது கடிகாரம்...?''

''வாங்கினேன் அம்மா...''

''ஏன் முன்னமே சொல்லல்லே?''

''நேற்றுத்தான் அம்மா வாங்கினேன். ராத்திரி சொல்லச் சந்தர்ப்பம் அமையல்லே... இன்னிக்குச் சொல்லணும்னுதான் இருந்தேன்.''

''அதைக் கேட்கவில்லை. வாங்கறதுக்கு முன்னாடி ஏன் என்கிட்டே சொல்லலேன்னுதான் கேட்கிறேன்.''

''கேட்டா நீ வேண்டாம்னு சொல்லியிருக்கப் போறியா அம்மா?'' என்று ஞானுவின் குரல் கெஞ்சலுக்கு இறங்கியது.

(தொடரும்)

## இப்படியும் நடந்தது!



லைப்ரேரியனாக வேலை பார்த்த பீர் என்ற பெண்மணி தன் மேஜை மீது வைத்திருந்த ஒரு புத்தகத்துக்குள், அப்புறம் எடுத்துக் கொள்ளலாம் என்று தம்முடைய சம்பளப்பணம் அடங்கிய கவரை வைத்திருந்தார். கொஞ்சநேரத்தில் அதை மறந்துவிட்டார். பிறகு மாலையில் வீடு திரும்பும்போது அந்தப் புத்தகத்தை யாரோ பணத்துடன் எடுத்துப் போய் விட்டது தெரிந்தது. பணம் தொலைந்ததுதான் என்று நினைத்திருந்த அவருக்கு இரண்டு மாதங்கள் கழித்து ஒரு மணியார்டர் வந்தது. அதில் அவருடைய சம்பளத் தொகையை விட இரு மடங்கு பணம் அனுப்பப்பட்டிருந்தது. கூப்பனில் எழுதி இருந்தது. ''உங்கள் பணம் என்னுடைய கஷ்ட காலத்தில் மிகவும் உதவியது. நன்றி.'' — இது நடந்தது ஸ்வீடன் நாட்டில்.

- பாவி

# கரங்கள் இரண்டு செயல்கள் இருபது



'டக் டடக் டக் கட் டக் டடக்.'

கை கனஜோராக வேலை செய்கிறது. விரல்கள் வெகு வேகமாக இயந்திரத்தில் துரித நடனம் புரிகின்றன. வாய் என்னவோ முணுமுணுத்த வண்ணம் இருக்கிறது. எழுத்துக் கூட்டி, கைகள் செய்யும் காரியம் சரிதானு என்பதை ஒத்திட்டுப் பார்த்துக் கொண்டிருக்கிறதோ?

'டிரிங் டிரிங் டிரிங் டிரிங்'

அருகிலேயே இருக்கும் தொலை பேசி கதறுகிறது. கரம் 'டடக் டக்'கை ஓரிடத்தில் கொண்டு நிறுத்திய பின்னரே தொலை பேசிக் குழாயை எடுக்கிறது. ''எஸ்... சுப்புலக்ஷ்மி ஸ்பீக்கிங்!'' குழாய் வழியே குரல் செல்லுகிறது.

''நாளைக் காலை எட்டு மணிக்கா?...யாரு? சினிமா ஸ்டார்... தேவியா? பேட்டிக்கு வரலாம் என்று சொன்னுங்களா?... இருங்க ஒரு நிமிஷம்....''

இன்னெரு கை டைரியைப் புரட்டுகிறது.

''எட்டு மணிக்கு முடியாது போலிருக்கிறதே. ஏழு மணிக்கு விளம்பரம் சம்பந்தமாக ஓரிடத்தில் 'அப்பாயிண்ட்மெண்ட் ஃபிக்ஸ்' பண்ணிக்கிட்டிருக்கேன். அப்புறமா ஒரு பிரஸ் கான்பிரன்ஸ் இருக்கு. மத்தியானம் ஒரு மணிக்குச் சௌகரியப் படுமா, கேட்டுச் சொல்லுங்க.''

''.........''

''என்ன? என் சௌகரியத்துக்கு எப்பொழுது வேண்டுமானாலும் வரலாமா? அப்போ சொன்னபடி ஒரு மணிக்கே வந்துடறேன்னு சொல்லுங்க.''

தொலை பேசி இணைப்புத் துண்டிக்கப்படுகிறது.

''அடடா! நீங்களா! உட்காருங்க!'' நாற்காலியைச் சுட்டிக் காட்டிய கையோடு கையாக, ''ஒரு நிமிஷம்... இதோ வந்துடறேன். அடுப்பிலே பால் வச்சிருக்கேன். அதைக் கவனிக்க இறக்கிப்பிட்டு...'' என்று கூறியவண்ணம் உள்ளே ஓடுகிறார் அவர்.

''அவசரமில்லை, வாருங்கள்!''

இதற்குள் 'டக் டக்' மெஷின் தானாகவே ஏதோ அடித்துக் கொள்ளுகிறது. டெலி பிரிண்டர் மெஷின் ஆயிற்றே. உள்ளிருந்து வந்ததும் அந்த மெஷினின் அருகில் செல்லுகிறார். 'டக் டக்' மொழியில் ஏதோ பதில் அளிக்கிறார். அருகிலேயே எத்தனையோ பத்திரிகைகள்! அவற்றில் பார்வை ஓடுகிறது. கரம் தன் வேலையைச் செய்கிறது.

''உங்களைக் காக்க வைத்து விட்டேன். இதோ ஒரு நிமிடத்தில் வருகிறேன். இந்தத் தபால்கள் இன்றைய கட்டுக்கே போக வேண்டியவை.''

இப்படிக் கூறிய வண்ணமே விலாசம் எழுதிக் கவர் ஒட்டி, தபால் தலை ஒட்டி மேஜை மேல் வைக்கிறார். கடிதங்களைத் தபாலில் சேர்க்க ஒருவேளை இவரே போஸ்டாபீசுக்குப் போய்விடுவாரோ?

எண்ணம் இப்படித் திசை மாறவே, ''உங்களுக்கு இன்று அவகாசம் இல்லையென்றால் இன்னெரு நாள்...'' என்று இழுக்கிறேன்.

''எந்த நாளும் திருநாள்தான். அலை ஓய்ந்த பின்தான் சமுத்திர ஸ்நானம் என்றால் அது நடக்கக் கூடிய காரியமா? இரண்டு அலைகளுக்கு இடையே ஏற்படும் இடைவெளியை உபயோகப் படுத்திக்கொள்ள வேண்டியதுதான்.''

இவ்வாறெல்லாம் அஷ்டாவதானம் சதாவதானம் செய்யும் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி பத்திரிகை நிருபர் தொழிலை மேற்கொண்டிருப்பவர். அதோடு விளம்பரம் சேகரிக்கும் கலையையும் நன்கு அறிந்தவர்.

டெலி பிரிண்டரும் தொலை பேசியும் பக்க வாத்தியமாக முழங்கத் தமது பேட்டியை ஓர் இன்னிசைக் கச்சேரியெனக் களை கட்டச் செய்துவிட்டார். சுருக்கமான சாராம்சம் இதோ இதுதான்:



''கோவையைச் சேர்ந்தவள் நான். என் தந்தை வைத்தீஸ்வரன் அவர்கள் பற்பல இடங்களில் விவசாய டெமான்ஸ்டிரேட்டராகப் பணியாற்றியவர். எனவே, எந்த மாவட்டமும் என் சொந்த மாவட்டமாகிவிட்டது. இன்றைய ஆந்திர ராஜ்யம் அன்று சென்னை மாவட்டத்தில் இணைந்திருந்தபொழுது என் தந்தை தெலுங்குப் பகுதிகளில் பணியாற்றியிருக்கிறார். எனக்குக் கூடப் பிறந்த சகோதர சகோதரிகள் இனத்துக்கு இருவராக நால்வர். எனக்குத் தமிழோடு தெலுங்கும், தெலுங்கோடு ஹிந்தியும் தெரியும். உயர்நிலைப் பள்ளியோடு என் கல்விக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டார்கள். தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த ஸ்ரீ பால சுப்பிரமணியம் அவர்களை வாழ்க்கைத் துணைவராகப் பெறும் பேறு எனக்கு 1944ம் ஆண்டிலேயே கிடைத்தது.

''சொல்லப் போனால் பத்திரிகைத் தொழிலில் எனக்கு இவ்வளவு ஈடுபாடு ஏற்பட்டதற்குக் காரணம் என் கணவரே ஆகும்.

''திருச்சி ஜோஸப் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றவர், ஏறக்குறைய இருபது ஆண்டுகளாகப் பத்திரிகைத் தொழிலை மேற்கொண்டிருக்கிறார். ஆரம்பத்தில் பத்தாண்டு காலத்துக்கு சுதேசமித்திரனில் பணியாற்றியிருக்கும் இவர், பின்னர் நேஷனல் நியூஸ் ஏஜென்ஸியோடு சிறிது காலம் தொடர்பு கொண்டிருந்தார். பிறகு சுயேச்சையாகப் பல பத்திரிகைகளுக்கு நிருபராகப் பணியாற்றியிருக்கிறார். ஆரம்பத்தில் கணவரின் காரியங்களுக்கு நம்மால் இயன்ற அளவு உதவ வேண்டும் என்ற நோக்கத்தில் கூடமாட இருந்த நான் இன்று சொந்தமாகவே இந்த நிருபர் தொழிலை மேற்கொள்ளக் கூடிய நிலைக்கு வந்திருக்கிறேன் என்றால், அதன் முழுப் பொறுப்பும் அவரையே சாரும்.

''பல வட இந்திய, தென்னிந்தியப் பத்திரிகைகளுக்கு நான் சென்னைப் பிரதிநிதியாக இருக்கிறேன். சினிமா விமரிசனங்களோடு, நட்சத்திரப் பேட்டி, ஸ்டுடியோ செய்தி போன்ற பகுதிகளை நான் கவனித்துக் கொள்கிறேன். அதோடு இந்தத் தொழிலுக்கு ஜீவநாடியான விளம்பரத் துறையிலும் அக்கறை காட்டி என்னால் இயன்ற பணியைச் செய்து வருகிறேன்.''

இப்படிச் சொல்லும் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மிக்கு மூச்சு விட நேரமில்லை. காலைப் பொழுது பேட்டி, ஸ்டுடியோ, படங்கள் போன்றவற்றில் போகிறதென்றால், மாலைப் பொழுது 'டெலிபிரிண்டர்' அடியில் போகிறது. இரவு ஒன்பது மணி வரையில் இப்படிப் பொழுதைச் செலவிடும் இவருக்கு எப்பொழுதுதான் எழுத நேரம் கிடைக்கிறதோ....?

வியப்பில் நாம் வேண்டுமானால் மூக்கில் விரலை வைக்கலாம். நம் வியப்பைக் கண்டு மூக்கின் மேல் விரல் வைக்க இவருக்குப் பொழுது இருக்கிறதோ இல்லையோ? அந்த நேரத்தில் எத்தனையோ வேலைகள் அவருடைய கைகளுக்காகக் காத்திருக்கின்றன.

சிறிது காலத்துக்கு ஹிந்துஸ்தான்-ஹிதைஷி மண்டலின் சார்பில் ஆசிரியையாகப் பணியாற்றியுள்ள இவருக்குப் பத்திரிகைத் தொழில் இன்று ஒரு தொழிலாகி வருவாயும் தருகிறது. நடுத்தரக் குடும்பங்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம்தான் என்றாலும், வேலைக்குத் தகுந்த கூலி கிடைக்கவில்லை என்பதை இவரால் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

ஆயினும் ஒரு திருப்தி. இந்தத் தொழில் கண்ணியமானது. சமூகத்தில் இதற்கு ஓர் அந்தஸ்து கிடைக்கிறது என்பது மட்டுமின்றி, இது எத்தனைய பெரியவர்களையும் கண்டு பேசிப் பழகும் வாய்ப்பை அளிக்கிறது. அதோடு 'கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது உலகளவு' என்பதை நினைவுறுத்தி இறுமாப்பில் சிக்க வைக்காமல் காப்பாற்றுகிறது என்றும் நம்புகிறார்.

பழக்கத்தினால் கைவந்த இந்தக் கலையைப் பற்றி இவர் இன்னொரு ரகசியமும் புரிந்து வைத்துக் கொண்டிருக்கிறார். யார் யாரை எப்படி எப்படிப் பேட்டி காண வேண்டும், என்ன என்ன கேள்விகள் கேட்க வேண்டும் என்று முன்கூட்டியே திட்டமிட்டுக்கொண்டு செயற்பட முடியாது. அந்த நேரத்தில் என்ன தோன்றுகிறதோ, அதை மனோதர்மத்துக்கேற்பக் கேட்டு விஷயத்தைக் கிரகிக்க வேண்டும். அப்புறம் அன்னப் பறவை எனப் பிரித்துச் சொல்லக்கூடாதவற்றை ஒதுக்கிச் சொல்லக் கூடியவற்றை மட்டுமே சொல்ல வேண்டும். பேட்டிகளில் இதுவே வெற்றியின் ரகசியம்.

''ஆமாம், திரைப்பட நட்சத்திரங்களையோ, தயாரிப்பாளர்களையோ, இயக்குநர்களையோ பேட்டி காணுகிறீர்களே, இவர்களை எளிதில் பேட்டி கண்டுவிட முடிகிறதா?''

''சொன்னால் சொன்ன நேரத்தில் இவர்களைப் பார்க்க இயலாமற் போய்விடுவதுண்டு. பல முறைகள் நாம் நம்பிக்கை இழந்தே கூடப்

போய்விடுவோம். காரணம், இவர்கள் தொழில் அப்படிப்பட்டது. ஒருவர் சௌகரியத்தை இன்னொருவர் நம்பி வாழ வேண்டியிருப்பதனுல் இந்த நிலை ஏற்படுகிறது. ஆனுலும் ஒன்று. பேட்டி காணும் விஷயத்தில் ஆண்களைக் காட்டிலும் பெண்களாகிய எங்களுக்கு வாய்ப்பு அதிகம்; ஏமாற்றம் குறைவு. பேட்டி தருபவர்கள் பெண்களாயிருந்து விட்டால் கூச்சமின்றிப் பழகித் தேவையான தகவல்களைத் தருவார்கள். ஆண்களாயிருந்து விட்டாலும் அநுதாபத்தோடு ஆதரவான பதில்களையே தருவார்கள். எனவே, இதுவரை எனக்கு அதிகமாக ஏமாற்றம் கிட்டவில்லை. இருந்தாலும் ஒன்றுமட்டும் கூறுவேன். இவர்களை வீட்டில் போய்ப் பேட்டி காண முயலுவதைக் காட்டிலும் ஸ்டுடியோக்களில் பேட்டி காண்பதே இலகுவான காரியம்.''

''...விளம்பரம் சேகரிப்பதாகக் கூறுகிறீர்களே! எத்தனையோ விளம்பரஏஜன்ஸிகள் செயல்படும் இந்த நாளில் உங்களால் சுலபமாக விளம்பரங்கள் பெற முடிகிறதா?''

''முடியாவிட்டால் இந்தப் பணியில் இறங்குவேனு? நேரில் சென்று விஷயத்தை விளக்கிக் கூறினுல் விளம்பரதாரர்கள் அநுதாபத்தோடு செவி சாய்த்து ஆதரவு தரவே செய்கிருர்கள். இது நான் கண்ட அநுபவ உண்மை.''

''இந்த நிருபர் தொழில் பெண்களுக்கு உகந்ததுதானு? இதில் ஏதேனும் சிரமம் தோன்றவில்லையா?''

பெண்களால் ஆகாத காரியம் எதுவும் இல்லையென்று பெரியவர்கள் தெரியாமல் சொல்லிவிடவில்லை. இது கவையான தொழில். பெண்களும் விரும்பிச் செய்யலாம். ஆனுல் ஒரே ஒரு சிரமம் இருக்கிறது. சில முக்கியமான செய்திகள் நள்ளிரவுக்குப் பின்னரும் கிடைப்பதுண்டு. பி. டி. ஐ. போன்ற நிறுவனங்களின் சந்தாதாரர்களாக இருந்தால் இந்தச் செய்தி தாமாகவே அப்பத்திரிகைகளை அடைந்துவிடும். சில சிறு பத்திரிகைகளுக்கு அந்த வசதி கிடையாது. தங்கள் நிருபர்களையே நம்பியிருக்கிருர்கள். நள்ளிரவு நேரத்தில் ஒரு பெண் நிருபர் இந்தச் செய்திகளைச் சேகரிப்பதும் சிரம சாத்தியம், அனுப்புவதும் சிரமம். மற்றப் பத்திரிகைகள் வெளியிட்டு ஆறி அவலாகி விட்ட செய்தியை மறுநாள் அனுப்பித்தான் என்ன பயன்? பிரசுரித்துத்தான் என்ன பயன்? இதனுல் இந்தச் செய்தியை முன் கூட்டியே ஏன் எங்களுக்குக் கொடுக்கவில்லை என்று அவர்கள் கடிந்து கொள்வதில் நியாயம் இருக்கவே செய்கிறது. போட்டி போட்டுக் கொண்டு செய்தியை முன்னுல் கொடுப்பது தானே பத்திரிகைகளின் தர்மமாயிருக்க வேண்டும்? அவற்றின் சிரமம் எங்களுக்குப் புரிந்தாலும், எங்கள் சிரமம் அவர்களுக்குப் புரிந்தாலும், இது ஒரு குறை குறைதான். ஆனுல் எனக்கு ஒரு வசதி. என் கணவரும் இதே தொழிலில் ஈடுபட்டிருப்பவராதலால், எனக்கு இத்தகைய சிரமங்கள் அதிகம் ஏற்படவில்லை.''

''இந்த டெலிபிரிண்டரை இயக்க நீங்கள் எப்படிக் கற்றீர்கள்?''

''டைப்ரைட்டர் போன்ற சாதனம்தான் இந்த டெலிபிரிண்டர். இது மின்சக்தியில் இயங்குவதனுல் ஒரொரு சமயம் 'ஷாக்' வாங்கிக்கொள்ள நேருவதுண்டு. பழகிவிட்டால் ஒன்றும் பிரும்ம வித்தையல்ல. பகல் மூன்று மணி முதல் இரவு ஒன்பது மணி வரை எனக்கு இதனேடுதான் வேலை.''

''டிரிங், டிரிங்!''

''ஹலோ!''

பேசி முடிந்த பின், ''பாண்டிச்சேரியில் ஒரு ஷோகிங் நியூஸ். ஆளும் கட்சிக்கு அது ஷாகிங் நியூஸ். ஓர் அங்கத்தினர் கட்சி மாறிவிட்டாராம்!'' என்று கூறியவர், டெலிபிரிண்டர் அடியில் நின்று கொட்ட ஆரம்பித்து விட்டார் கனவேகமாக.

அருகில் சென்று பார்த்தால் ரோமன் எழுத்தில் தமிழ் மொழியில் செய்தி பறந்து கொண்டிருந்தது. அவர் நிருபராகப் பணியாற்றி வரும் பத்திரிகைக்கு.

விடைபெற்று எழுந்தபோது, ''பெயருக்கும் சம்பளத்துக்கும்தான் பகுதி நேர வேலை. வேலைக்கும் பொறுப்புக்கும் இரவு—பகல் இருபத்து நான்கு மணி நேரமும் போதவில்லை. இரண்டு கைகளுக்குப் பதிலாக இராவணேசுவரனின் இருபது கைகளும் கிடைத்திருந்தாலும் கூட இன்னும் இரண்டு கைகளுக்கு வேலை இருக்கும்!'' என்று முடித்தார் நிருபர் சுப்புலக்ஷ்மி. —ரா. வீ.

---

பயமுறுத்தல் கடிதம்

'ஸ்டீபன் லீகாக்' என்பவர் கனடா நாட்டைச் சேர்ந்த புகழ்வாய்ந்த நகைச்சுவை எழுத்தாளர். ஒரு சமயம் அவர் ஒரு கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். வருட ஊதியம் 700 டாலர்கள் (5,250 ரூபாய்)தான். இது அவருக்குப் போதவில்லையாதலால் கல்லூரி நிர்வாகிகளுக்கு ஒரு கடிதம் எழுதினுர்:

"சீமான்களே! என் ஊதியத்தை உயர்த்துவதற்கு நீங்கள் உடனடியாக ஏதேனும் ஒரு வழி செய்தாக வேண்டும்; இல்லாவிட்டால்..." (இந்த இடத்தில் கடிதத்தின் முதல் பக்கம் முடிந்தது. நிர்வாகிகள் ஆவலோடு இரண்டாவது பக்கத்தைப் புரட்டினுர்கள்!) "இல்லாவிட்டால் இதே ஊதியத்துக்காகத்தான் நான் தொடர்ந்து பணியாற்ற வேண்டியிருக்கும்."

'ரத்னஶ்ரீ' - "கனேடியன் ரிவ்யூ"



# சூரன் பீட்டர் 3

வால்ட் டிஸ்னி

வானத்தில் பறப்பதென்பது புதுமையானதோர் அனுபவம். அந்த அற்புத மானுட செயல் டார்லிங் சீமானின் குழந்தைகளுக்குக் கிட்டியது. நல்ல உள்ளமும் நல்ல செய்கையும் புனிதமான எண்ணங்களும் கொண்ட குழந்தைகளால் எதையும் சாதிக்க முடியும் என்கிறான் பீட்டர்.

வெண்டி, ஜான், மைக்கேல் மூவரையும் அழைத்துக் கொண்டு லண்டன் நகர வான வெளியிலே வட்டமடிக்கலானான் பீட்டர்.








மாளிகை நிலாமுற்றத்தில் இருந்த விசுவாசமுள்ள நாய் நானா, தன் தலைக்கு மேலே சுற்றி வரும் உருவங்களைக் கண்டு திகைப்படைந்தது.






தனியே பறந்தது வன தேவதை டிங்கர். பீட்டர் வெண்டியிடம் காட்டும் அன்பு அதற்கு ஆத்திரமூட்டியது.



மேலே...மேலே...அவர்கள் பறந்து சென்றார்கள். தேம்ஸ் நதியையும் தாண்டி மேகத்துக்குள் மறைந்தார்கள்.








அந்த நால்வரும் அந்த உலகை நோக்கி ஆகாய வீதியில் விரைந்து சென்றார்கள்.

### அத்தியாயம் பதினாறு

## காதல் விபத்து!

ரங்கமணி அன்று மாலை பயணத்துக்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தான். அவனிடம் பேசக் கூடத் திரிவேணிக்கு நேரம் கிடைக்கவில்லை. அவனுக்கு ஏற்பட்டிருந்த காயத்தைப்பற்றி விசாரித்து விட்டுப் போகப் பல முக்கியமான தொண்டர்கள் வந்தவண்ணம் இருந்தார்கள். தன்னைப் பார்க்க வரும் கூட்டத்திலிருந்து எப்படியாவது தப்பிச் சிறிது நேரமாவது ரங்கமணியைத் தனியே சந்தித்துப் பேச வேண்டும் என்று துடித்தாள். ஆனால் அதற்குச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. ரங்கமணியின் பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை அத்தைதான் கவனித்தாள். ரயிலில் சாப்பிடுவதற்காகச் சாப்பாட்டுப் பொட்டலம் தயார் செய்தாள். அவனுக்கு வேண்டிய மற்ற சாமான்கள் எல்லாம் சரியாக இருக்கின்றனவா என்று அடிக்கடி எண்ணிப் பார்த்துக் கொண்டாள். அவள் படும் சிரமத்தைக் கண்டு ரங்கமணி தவித்தான். ரங்கமணி தடுத்துப் பார்த்தான். ஆனால் அத்தை கேட்டால்தானே? அவன் புறப்படும் வரை அவனுக்கு வேண்டியதைக் கவனித்து ஆயத்தப் படுத்துவதிலேயே மூழ்ந்திருந்தாள். ரங்கமணி தில்லி வரை போகிறான் என்பதே அத்தைக்குப் பிடிக்கவில்லை.

இன்னும் சில நாட்களுக்கு அவனைக் காண முடியாது என்ற எண்ணம் அத்தையின் மனத்தில் வேதனையை உண்டாக்கியது. அதுவும் அவன் தனியே தில்லிக்குப் போகிறான் என்பதை அறிந்ததும் புரிந்து கொள்ள முடியாத ஒரு பயம் தோன்றி விட்டது. ஏதோ ஓர் இரகசியம் நிறைந்த பயங்கரக் காரியத்துக்குத்தான் சர்தார் அவனை அனுப்புகிறார் என்பதைப் புரிந்து கொண்டாள் அத்தை.

தீக்ஷிதரிடம் இதைப் பற்றித் துருவித் துருவிக் கேட்டாள். பாவம், அவருக்குத்தான் என்ன தெரியும்!

''எனக்கென்ன தெரிகிறது பசாக்கலிங்கத்தின் வேலையெல்லாம்? என்ன திட்டம் போட்டிருக்கிறேனோ? யார் கண்டது? இந்தப் பையனை அனுப்பி வைக்கிறேன். அவ்வளவுதான் எனக்குத் தெரியும்!'' என்றார் தீக்ஷிதர். அத்தைக்கு இருப்புக் கொள்ளவில்லை. வீட்டுக்குள் வளைய வளைய வந்தாள்.

ஏன் இந்தத் தவிப்பு?

எங்கிருந்தோ மூன்று மாதங்களுக்குமுன் வந்து அந்தக் குடும்பத்தோடு ஒட்டிக் கொண்டான். அவன் மீது ஏன்தான் இந்தப் பாசம் கரை புரண்டு ஓடுகிறதோ? அத்தைக்கே இது புரியவில்லை. அவனுடைய பால்வடியும் முகமும், கலகலப்பான பேச்சும் அத்தையிடம் அவன் கொண்டிருந்த தனிப்பட்ட மதிப்பும், உள்ளடங்கிய பாசமும் அத்தையின் நெஞ்சில் பாச ஊற்றைக் கிளப்பி விட்டுவிட்டன. அவனுடைய கவலைகளையெல்லாம் திரிவேணியின் முகத்தில் மறந்திருந்தாள். இப்போது அவளுடைய இதயத்தில் ரங்கமணியும் தனக்கென்று ஓர் இடத்தைப் பிடித்துக் கொண்டு விட்டான்.

ஊருக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிற பிள்ளையிடம் ஆற அமர இருந்து திரிவேணியைப் பேசவிடாமல் இப்படிக் கூட்டம் மொய்க்கிறதே என்று அங்கலாய்த்தாள் அத்தை. திரிவேணியும் இந்த நிலையில்தான் தவித்துக்



கல்கத்தா ஸுந்தரம்

ஸ.கி. நல்லமுத்துமாள்

வெள்ளி விழா
இரண்டாவது
பரிசு நாவல்

கொண்டிருந்தாள். கடைசியில் அன்று மாலை அவன் விடைபெற வந்தபோதுதான் அவனோடு பேசும் வாய்ப்பே கிடைத்தது. அதுவும் எவ்வளவு நேரம்? ரங்கமணி அவள் இருந்த அறைக்குள் வந்தான்.

"போய் வரட்டுமா?" என்று அவள் கட்டில் பக்கத்தில் வந்து நின்றான். அவளைப் பார்க்க வந்திருந்த இரண்டு மூன்று வெளியூர்ப் பிரமுகர்கள் அப்போதும் அவள் பக்கத்தில் நாற்காலியில் அமர்ந்திருந்தனர். ரங்கமணி உள்ளே வந்ததும் பரபரப்புடன் படுக்கையிலிருந்து எழுந்திருக்க முயன்றாள். "வேண்டாம் படுத்துக் கொள். உடம்பைப் பத்திரமாகப் பார்த்துக் கொள். நான் வரட்டுமா?" என்றான் ரங்கமணி.

இதென்ன? திரிவேணிக்கு என்ன வந்து விட்டது? ஏன் தொண்டை அடைத்துக் கொண்டது? எவ்வளவோ பேசித் தீர்த்துவிட வேண்டும் என்ற தவிப்பிலிருந்தவள், ஊமையாக அவனை வெறிக்கப் பார்த்தவண்ணம் உட்கார்ந்திருக்கிறாளே!

ரங்கமணி மட்டும் இலேசாகச் சிரித்தான். அவள் உதடுகளும் சிரிப்பதற்காக இலேசாக விரிந்தன. ஆனால் ஒரு வார்த்தை கூட வெளிவரவில்லை. அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். 'சீக்கிரம் வந்துவிடுங்கள்' என்றாவது கூறிவிட வேண்டும் என்று உள்ளுணர்வு தூண்டியது.

ஆனால் பாழும் குரல் எங்கோ பதுங்கிக் கொண்டதே. எப்படியோ விடை கொடுக்கும் பாவனையாகத் தலையை மட்டும் ஆட்டி வைத்தாள். ரங்கமணி மறுகணம் அந்த அறையை விட்டுப் போய் விட்டான். வாசலில் அவன் வண்டி ஏறும் சத்தமும், அத்தை அவனை வழியனுப்பும் சத்தமும் திரிவேணிக்குக் கேட்டன. ஓடிப் போய் வாசலில் நின்று அவனை வழியனுப்ப வேண்டும் என்ற தவிப்பு அவளுக்கு. ஆனால் பக்கத்திலிருந்த தொண்டர்கள் பேச்சுக் கொடுக்கவே தன் ஆசைகளை உள்ளேயே அடக்கிக் கொண்டாள்.

இரவு ஏழு மணிக்கு மேல்தான் திரிவேணிக்கு ஓய்வு கிடைத்தது. அத்தை சாப்பிடக் கூப்பிட்டாள். திரிவேணி பசி இல்லை என்று மறுத்து விட்டாள். அத்தைக்கும் பசி இல்லை. ரங்கமணி போய் விட்டால் அதற்காகப் பசியும் இல்லாமல் போய்விட வேண்டுமா? நல்லவேளை, தீக்ஷிதர் தம்முடைய ஊருக்கு அன்று காலையே போய் விட்டார். இல்லையென்றால் அவருக்காகவாவது கூட இருந்து சாப்பிட்டுத் தொலைக்க வேண்டியிருக்கும். இப்போது அந்த நிர்ப்பந்தமும் இல்லை. ஆகவே, அத்தையும் திரிவேணியும் சீக்கிரமே படுத்து விட்டார்கள். படுத்தால் போதுமா? தூக்கம் எங்கே வருகிறது?

அத்தைக்கு ஒரு நினைவு; திரிவேணிக்குவேறு நினைவு.

"இந்தப் பிள்ளை வெகு தூரம் போகிறானே, பகவானே. இந்தப் பிள்ளைக்கு எந்தக் கஷ்டத்தையும் கொடுக்காமல் திரும்பக் கொண்டு வந்து சேரப்பா!" என்று தெய்வத்திடம் வேண்டிக் கொண்டாள்.

திரிவேணியோ போகும்போது, அவனிடம் பேச முடியாமல் போய் விட்டதே என்ற ஆற்றாமையில் இருந்தாள். இத்தனை நாட்கள் தான் பேசியிருக்கிறானே! சட்டி காலியாகும் போதுதான் வழித்து வழித்து நக்குகிறோம். அதில் ஒரு ரசனையும் இருக்கிறது. ரங்கமணி போகிறான் என்ற போதுதான் அவனோடு பேசிக் களிக்கத் துடிக்கிறது மனம்.

திரிவேணிக்கு அழுகை அழுகையாக வந்தது. அவன்தான் என்ன? கூடக் கொஞ்ச நேரம் நின்று பேசினால்தான் என்னவாம்? "போய் வருகிறேன்!" என்ற இரு வார்த்தைகளைச் சொல்லத்தான் வந்தானா? அவன் கொஞ்ச நேரம் நிற்கத்தான் செய்தான். நீதானே அசடு மாதிரி ஊமை நாடகம் நடத்தினாய்! உனக்கு அப்போது என்ன வந்து விட்டது? ஒரு வார்த்தை பேசினாயா? உன் முகத்தையே ஆவலோடு பார்த்தானே! நீ ஏதாவது பேசி வழியனுப்புவாய் என்ற ஆசையோடு உன்னைத் தேடிக் கொண்டு உன் அறைக்கு வந்தான். நீ பெரிய இவள் மாதிரி தலையை மட்டும் ஆட்டி வழியனுப்பிவிட்டாய்! பாவம், அவன்தான் என்ன நினைத்திருப்பான்.... நீ ஒரு அசடு. அசடேதான்......

திரிவேணி தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு பொருமினாள். கண்ணீர் தலையணையை நனைத்தது. தலையிலிருந்த காயம்கூட வலிக்கவில்லை. இந்த நினைவுதான் நெஞ்சில் வலித்தது.

முந்திய இரவில் என்னவெல்லாம் கற்பனை செய்து கொண்டிருந்தாள்; எப்படியெல்லாம் பேசி அவனை வழியனுப்ப வேண்டும் என்று திட்டமிட்டிருந்தாள். இந்தத் தொண்டர்களுக்கு இங்கிதம் தெரிகிறதா? இன்றுதானா இப்படி மொய்க்க வேண்டும்? ஒரு வார்த்தை பேச விடவில்லையே! திரிவேணியின் மனம் உளைந்தது. அந்த உளைச்சலில் அயர்ந்து தூங்கி விட்டாள்.

ரங்கமணி கனவில் தோன்றினான். எவ்வளவு அருமையான கனவு! நிஜ வாழ்க்கையில் இப்படிப் பேசிச் சந்தித்திருக்க முடியுமா?

நிஜ வாழ்க்கையில் சாதிக்க முடியாதவைகளை மானசீகமாக நாம் சாதித்துத் திருப்திப் பட்டுக் கொள்ளத்தான் இந்தக் கனவு போலும். இனிமையான கனவின் ரசனையில் லயித்திருந்தாள், திரிவேணி.

ஒரு சோபாவில் திரிவேணி சாய்ந்திருந்தாள். ஆவலோடு அவள் பக்கத்தில் நெருங்கி உட்கார்ந்தான் ரங்கமணி. அவள் திகைத்து அவனைப் பார்க்கிறாள். அவ்வளவு நெருக்கமாக அவன் இடித்துக் கொண்டு ஒரு நாளும் உட்கார்ந்ததே இல்லை. அவளுக்கும் விலகி உட்கார வேண்டும் என்று



தோன்ற வில்லையே! அவள் ஓரக் கண்ணுல் அவனைப் பார்த்தாள். பிறகு கேட்டாள்:

''டில்லியிலிருந்து எனக்கு என்ன வாங்கி வருவீர்கள்?''

''நான் வாங்கி வருவது இருக்கட்டும். வெகுதூரம் போகிறேனே எனக்கு என்ன தந்து வழியனுப்பப் போகிருய்?'' என்று கேட்டான் ரங்கமணி.

''என்ன வேண்டும்?''

''நான் எடுத்துக் கொள்ளட்டுமா?''

''உம்.....''

''எதை வேண்டுமானுலும் எடுத்துக் கொள்வேன்'' என்று அவள் காதருகில் கிசுகிசுத்தான். அவளுடைய நெற்றியில் புரண்ட சுருள் முடி, அவன் காதில் பட்டுக் கிளுகிளுத்தது.

''எது வேண்டுமோ எடுத்துக் கொள்ளுங்கள். அப்படிக் கொடுப்பதற்கு என்னிடம் என்னதான் இருக்கிறது?''

''நான் எடுத்துக் கொண்ட பிறகு....''

''மறுக்க மாட்டேன்'' என்ருள் திரிவேணி.

திடீரென்று அவள் எதிர்பார்க்குமுன்பே அவளுடைய பட்டுக் கன்னத்தில் தன்னுடைய உதட்டைப் பதித்துத் தனக்கு வேண்டியதை எடுத்துக் கொண்டான். திரிவேணி திடுக்கிட்டுப் போனுள்.

''என்ன இது?''

''ஏன்? டில்லிவரை போகிறேனே? இந்த நினைவுதானே எனக்குத் துணை?''

''நீங்கள் சுத்த மோசம்!'' என்று கூறி முகத்தை வெடுக்கென்று திருப்பிக் கொண்டு கன்னத்தைத் துடைத்துக் கொண்டாள்.

''இஷ்டம் இல்லையென்ருல் வேண்டாம். நான் எடுத்த இடத்திலேயே வைத்துவிடுகிறேன்'' என்று கூறிக் கொண்டு மீண்டும் அவள் கன்னத்தை நெருங்கினுன். அவளுக்குச் சிரிப்பு வந்து விட்டது. முகமெல்லாம் குபீரென்று சிவந்து விட்டது. தன் கன்னத்தை நெருங்கும் அவனுடைய. குவிந்த உதட்டைப் பார்த்தாள். அவன் கண்களைப் பார்த்தாள்; அது ஏதோ பேசியது. அவளுக்கு வெட்கம் தாங்கவில்லை. கைகளால் முகத்தை மூடிக் கொண்டாள்.

ரங்கமணி ஏன் சும்மா இருக்கிருன்? மூடிய கைகளை விலக்கிக் குறும்பு செய்யவில்லையே, ஏன்?.... ஏன்?....

திரிவேணி முகத்தை மூடியிருந்த கைகளை விலக்கிப் பார்த்தாள். ரங்கமணியைக் காணும். பதறிப் போய் எழுந்தாள்.

இவ்வளவுதான் கனவு. திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள். கனவு, குழந்தை மாதிரி. நம்முடைய சொல்லுக்கு அடங்கியே நடக்காது. அதுவாக நம்மிடம் வரும். விளையாடிவிட்டுப் பாதியிலேயே போய்விடும். திரிவேணியின் கனவும் இப்படித்தான் சண்டித்தனம் செய்தது.

வெகுதூரம் பயணம் செய்து திடீரென்று காட்டுக்குள் அகப்பட்டுக் கொண்டு திசை தெரியாமல் தவிப்பவனைப் போல் தவித்தாள். கனவை நினைவில் கொண்டு வந்தாள். எவ்வளவு உண்மையாக நடப்பது போல் நடந்து விட்டது. கன்னத்தைத் தடவிப் பார்த்தாள். ஈரம் தட்டுப்படவில்லையே. ஆனாலும் கனவில் ரங்கமணி செய்த குறும்பு, நினைவிலும் அவள் கன்னத்தில் குறுகுறுத்தது. அந்த இடத்தையே தடவிக் கொண்டிருந்தாள்.

உண்மையிலேயே இப்படி நடந்திருந்தால் — இதை நினைக்கவே அவளுக்கு வெட்கமாக இருந்தது. ஆனால் இந்த நினைவு இனித்தது. விருந்து சாப்பிட்டவுடன் அதை நினைத்து நினைத்து நாக்கைச் சப்புக் கொட்டிக் கொள்வதைப் போல் இவளும் கனவை எண்ணி எண்ணி லயித்திருந்தாள்.

நிஜ வாழ்க்கையில் இப்படி நடக்காவிட்டாலும் இப்படி நடக்க வேண்டும் என்று மனம் ரகசியமாக ஆசைப்பட்டிருக்க வேண்டும். இல்லையென்ருல் கனவில் இது நடப்பானேன்? மனத்தில் மறைந்து கிடக்கும் இரகசியங்களையெல்லாம் கனவு வெட்ட வெளிச்சமாக்கி விடும் என்று ஒரு மனத்தத்துவப் புத்தகத்தில் படித்த ஞாபகம் அவளுக்கு வந்தது. உண்மையில் அவள் மனத்தில் இம்மாதிரி இரகசியம் மறைந்தா கிடந்தது?

திரிவேணி தன்னையே எண்ணிச் சிரித்துக் கொண்டாள். அவளுக்குத் தெரியும், ரங்கமணி வந்த பிறகு அவளுடைய வாழ்க்கையில் ஒரு மாற்றம் ஏற்பட்டிருக்கிறதென்று.

ஏன் இந்த மாற்றம்? இது அவளுக்கே புரியவில்லை. அவனேடு பேசினுல் ரசிக்கிறது; அவனைக் கண்டால் மனம் துள்ளுகிறது; அவனேடு இருந்து சாப்பிட்டால்தான் சாப்பிட்ட மாதிரி இருக்கிறது. இதெல்லாம் ஏன்? என்ன காரணமாக இருக்கலாம்? இதற்குப் போய் வேறு ஏதாவது ஓர் அர்த்தத்தைத் தேடி அலைவானேன்? அவளுக்குத் தெரியும், அவளுடைய மனம் வசமிழந்து நிற்கிறது என்று. ஆனால் இந்த நிலைக்கு ரங்கமணிதான் காரணம் என்று எப்படி நிச்சயமாகச் சொல்லிவிட முடியும்?

ஓர் ஆணும் பெண்ணும் சந்தித்தால் இடையே தோன்றுவது காதலாகத்தான் இருந்து தீரவேண்டுமா? படைப்பே இந்த ஒரு காரணத்துக்காகத்தானு? இதைத் திரிவேணியால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. ரங்கமணி ஒரு துறையில் தொண்டன். அவள் வேறு துறையில் தொண்டு செய்கிருள். அவன் வீட்டில் சர்தாரின் விருந்தாளியாகத் தங்குகிருன். இவ்வளவுதான் அவனுக்கும் அவளுக்கும் உள்ள தொடர்பு.... இவ்வளவுதானு....? இவ்வளவேதானு?

திரிவேணிக்குத் தர்மசங்கடமாகி விட்டது. இந்த மனம் இப்படித்தான் குழந்தை மாதிரி எதையாவது இக்கட்டாகக் கேட்டு வைத்து விடுகிறது. பின்னே இல்லையா, சூல் கொண்டிருக்கும் தாயைப் பார்த்துக் குழந்தை ''அம்மா, உன் வயிற்றில் குழந்தை எப்படி வந்தது?'' என்று கேட்டால் எப்படிப் பதில் சொல்வது? இப்படித்தான் இந்த மனம் எக்கச்சக்கமாக நம்மையே கேள்வி கேட்டுச் சங்கடப்படுத்தி விடுகிறது.

திரிவேணி தன்னையே புரிந்து கொள்ள முடியாமல் திணறினுள். எத்தனையோ முறைகள் அவனும் அவளும் அந்தி மயங்கும் வேளையில், தனிமையாகச் சிந்துபூந்துறை ஆற்று மணலில் பேசிக் கொண்டிருந்திருக்

## பெண்ணழகிகள் பலரும் பெப்ஸோடெண்ட் டூத்பேஸ்ட் உபயோகிப்பதன் ரகசியமென்ன?

பெப்ஸோடெண்ட் உபயோகிக்கும் பெண் புன்னகை புரிய அஞ்சவேண்டியதில்லை...அவளால் இயற்கையாகச் சிரித்து மகிழ்ந்திருக்க முடியும் ... பெப்ஸோடெண்ட் பற்களை, கண்ணைப் பறிக்கும் வெண்மை பளிச்சிடத் துலக்குவதே இதற்குக் காரணம். புன்சிரிப்பு மலர்ந்தால் போதும், முகமெங்கும் ஒளி சிந்தும். நீங்கள் புன்னகை புரியும் ஒவ்வொரு முறையும், உங்களுக்குள் மறைந்திருக்கும் பிரகாசத்தை வெளிப்படுத்தும் பெருமை பெப்ஸோடெண்டையே சாரும்.




பெப்ஸோடெண்டிலுள்ள 'இரியம் ப்ளஸ்' அற்புத நுரைவளத்தை அளிக்கிறது. அது, உங்கள் பற்களின்மேல் படிந்திருக்கும் மங்கலான திரையை அகற்றி, அவற்றை வெண்முத்துப்போல பளிச்சிடச் செய்கிறது!

பெப்ஸோடெண்ட் கொண்டு துலக்கினாலே
பற்கள் பளிச்சிடுமே அதிவெண்மையினாலே!

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரம்சிறந்த தயாரிப்பு

HDL-5936

கிறார்கள். ஆனால் ஒரு சமயமாவது அவன் அவளைத் தீண்டியதுண்டா? பார்வையால் கூடக் குறும்பு செய்ததில்லை! அவர்கள் அந்த ஆற்று மணலில் உட்காரும்போதெல்லாம் அவர்களுடைய எண்ணமும் பேச்சும் உயர உயரப் பறந்து கொண்டிருந்தனவே தவிர, கேவலம் இந்த மண்ணுலக உணர்ச்சிகளைப் பற்றிய சிந்தனைக்கே அங்கு இடமில்லை.

இப்படித்தான் ஒரு நாள் பேசிக் கொண்டிருந்த போது அவன் சொன்னான்:

"உலகத்தில் நடப்பது எதற்கும் காரண காரியமே இருப்பதில்லை. எல்லாம் தற்செயலாக நடக்கும் சம்பவங்களே!"

"கடவுள் நம்மைக் கவனிக்கவில்லை என்கிறீர்களா?" என்று கேட்டாள் திரிவேணி.

"கடவுளுக்கும் நமக்கும் சம்பந்தம் இருப்பதாகத் தெரியவில்லையே! இருந்திருந்தால் உங்கள் காந்தியின் பக்திக்கு இந்தநேரம் உருகி இருக்கமாட்டாரா கடவுள்? வெள்ளையனை ஆளவிட்டு நம்மைத் தாழ விட்டது இந்தக் கடவுள்தானே!" என்றான் எரிச்சலுடன்.

"இதற்காகக் கடவுள் சக்தியற்றவராகி விடுவாரா?"

"சின்னப்பிள்ளை நூல்கண்டை வைத்து விளையாடுவது போல்தான் இந்த உலகத்தோடு கடவுள் விளையாடியிருக்கிறார். நூல்கண்டு சிக்கலாகி விட்டது. இனி கடவுளாலேயே உலக சிக்கல்களைத் தீர்க்க முடியாது. ஆகையால் கண்டைத் தூர எறிந்துவிட்டுக் கடவுள் போய் விட்டார். திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. வாழ்க்கைச் சிக்கலும் விடுபடப் போவதில்லை" என்றான் ரங்கமணி.

"இந்த மாதிரி நாஸ்திகம் பேசுவதால்தான் மகாத்மாவின் சாத்வீகம் உங்களுக்குப் புரியவில்லை."

"ஐயையோ! ஆஸ்திகர்களின் கடவுள்களுக்கே சாத்வீகத்தில் நம்பிக்கை கிடையாதே. ராமன் இலங்கைக்குப் படையெடுக்கவில்லையா? கிருஷ்ணன் குருக்ஷேத்திரத்தில் திரியவில்லையா? பரசுராமர் க்ஷத்திரியர்களை வேரறுக்கும் வேலையில் இறங்கவில்லையா? சிவபெருமான் திரிபுரத்தையே எரித்துச் சாம்பலாக்கி விடவில்லையா?"

இதைக் கேட்டுத் திரிவேணி சிரித்தாள். பிறகு சொன்னாள்:

"அதெல்லாம் புராணம்."

"இருக்கட்டுமே. 'அட மனிதா, கோழையாகி விடாதே! அநீதி செய்பவனை அடித்து நொறுக்கு' என்று தைரியம் கூறத்தான் கடவுளையும் தீவிரவாதிகளாகக் காட்டி, அதை எழுதி வைத்திருக்கிறார்கள். அதைப் படித்துவிட்டு அதை அடுக்களை மதமாக்கிவிட்டார்களே தவிர, தெருவுக்கு வர இன்னும் தைரியம் வரவில்லை."

"அடுக்களை மதமா?" — வியப்புடன் கேட்டாள் திரிவேணி.

"பின்னே என்ன? எந்த கடவுளுக்கு எந்த நிவேதனம் பிடிக்கும் என்று ஆராய்ந்து சமைப்பதும் எந்தக் கிழமைக்கு எதைச் சாப்பிடலாம், எதைச் சாப்பிடக் கூடாது என்று திட்டம் போடுவதும்தானே நம்முடைய மதம். இதனால் கோயில் மடப்பள்ளியிலும் கரி படிந்தது, நம் மனத்திலும் இருள் சூழ்ந்தது" என்றான் ரங்கமணி. திரிவேணி அவனுடைய பேச்சில் லயித்து விட்டாள். அவனைக் கிண்டிவிட்டு விட்டு அவன் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருப்பதில் அவளுக்கு அலாதி ஆனந்தம். அவனுடைய கற்பனைத் திறனும், தர்க்கரீதியும் அவளைக் கவர்ந்து விட்டன.

அவனோடு வாதாட முடியாமல் தோல்வி ஏற்படும் போதெல்லாம் சிரித்துக்கொண்டே மணலிலிருந்து எழுந்து விடுவாள். அவனும் உடையில் ஒட்டியிருக்கும் ஆற்று மணலைத் தட்டிவிட்டுக் கொண்டு எழுந்துவிடுவான்.

அந்த ஆற்று மணலுக்கு வந்ததும் இருவருக்கும் உற்சாகம் வந்துவிடும். மணலில் ஓடிப் போய் உட்காருவார்கள். யாருமில்லாத அந்தச் சூழ்நிலையில் அவளைப் பாடச் சொல்லுவான். பாரதியின் பாடல்களுக்கு இசையூட்டி அவள் பாடும்போது அவனென்ன, தாமிரபரணி நதியே லயித்து நின்று விடும். அவளுடைய குரலின் இனிமையிலும் இசையின் போதையிலும் தன்னை மறந்து கிடப்பான். எத்தனையோ மாலை வேளைகளில் இருட்டியதைக்கூட உணராமல் திரிவேணியின் இசையில் மெய்ம்மறந்திருந்திருக்கிறான்.

"பாரதியாரின் பாட்டுக்களை இவ்வளவு உணர்ச்சியோடு பாடும் நீ, எப்படி இந்தச் சாத்வீகத் துறையில் இறங்கி விட்டாய்? காந்தி செய்த இமாலயத் தவறுகளில் இதுவும் ஒன்று!" என்றான்.

"எதுவும்?"

"உன்னைச் சாதுவாக்கியது!"

"ஏன்?"

"ஜான்ஸி ராணி மாதிரி வெள்ளையனுக்கு எதிராகக் கத்தி எடுத்துத் திரியவேண்டியவளை ராட்டினம் சுற்றச் சொன்னால் எப்படி? ராட்டினத்தின் தாலாட்டும் சத்தத்தில் நம் நாடு நன்றாகத் தூங்கும். பாரதியாரின் பாட்டை முழங்கிக் கொண்டு வீறுகொண்டு எப்படி எழ முடியும்?"

"ராட்டினத்தின் ஓசைக்குத்தான் இன்று வெள்ளைக்காரன் பயப்படுகிறான்" என்றாள்.

இதைக் கேட்டு ரங்கமணி சிரித்தான்.

"இந்த ராட்டினத்துக்குப் பயந்து பிரிட்டிஷ்காரன் ஓடப் போவதில்லை. அவன் பனங்காட்டு நரி. காந்தியின் அஹிம்சைத் தத்துவத்தால் அவனை இந்தியாவைவிட்டு ஓர் அங்குலம்கூட அசைக்க முடியாது. சாத்விகப் போராட்டத்தாலேயே அவனை ஓடவைத்துவிடலாம் என்பது, கொசு அடித்து இரத்தம் சேர்ப்பது மாதிரிதான்" என்றான்.

"சாத்விகப் போராட்டத்தின் தத்துவத்தை இன்னும் நீங்கள் புரிந்து கொள்ளவில்லை" என்றாள் திரிவேணி.

"புரிந்து கொள்ள இதில் என்ன இருக்கிறது? இந்திய வரலாறே சாத்வீகத்தால் சீரழிந்ததுதானே. இரக்கத்தையும், அன்பையும் எதிரிகளிடம் காட்டப் போய்த்தான் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக அடிமைகளாகி விட்டோம். வீரம் என்றால் என்ன என்பதே தெரியாமல் போய் விட்டது. இரத்தம் சிந்த வேண்டிய நேரத்தில், தத்துவம் பேசிக் கொண்டிருக்கிறீர்கள். இது வேடிக்கையாக இல்லையா? மகாத்மா காந்தி

மீது நீங்களெல்லாம் கொண்டிருப்பது குருட்டு பக்தி. இது கோயிலில் செலுத்த வேண்டிய விஷயம்'' என்று ஆவேசத்தோடு பேசினான். இதைக் கேட்டுவிட்டுத் திரிவேணி ஒரு கையில் ஆற்று நீரை அள்ளி அவன் மீது தெளித்தாள்.

''ரொம்பக் கொதித்து விட்டீர்கள். ஆற்று நீர்தான் தணிக்க வேண்டும்'' என்று கூறிக் கொண்டே எழுந்து விட்டாள். அவன் பதிலுக்கு அவள் மீது நீரை இறைக்க ஓடிய போது அவளும் ஓடினாள்.

தனிமையில் பேசிப் பொழுதைக் கழிக்கச் சந்தர்ப்பம் ஏற்பட்டபோதெல்லாம் பேச்சும், எண்ணமும் இப்படித்தான் ஒரு மேலான உயர்ந்த நிலையிலேயே இருந்தனவே தவிர, வெறும் உணர்ச்சிக்கு அங்கு இடமே இல்லை.

என்னதான் நம்முடைய மனம் உயர உயரப் பறந்தாலும், உணர்ச்சிக் கொப்புளிக்கும் இந்த உடல், மண்ணைத்தானே தொட்டுக் கொண்டிருக்கிறது?

திரிவேணி சில சமயங்களில் மண்ணுக்கும் இறங்கியதுண்டு. பல முறைகள் தற்செயலாக ரங்கமணியின் ஸ்பரிசம் கிட்டியபோது அவள் உள்ளம் சிலிர்த்தது. ஆனால் ரங்கமணி ஆகாயத்தில் இருக்கிறானா? அல்லது மண்ணைத் தொடுகிறானா என்று அவளால் அறிந்து கொள்ளவே முடியவில்லை. அவளோடு பேசுகிறான்; அவளைச் சிரிக்க வைக்கிறான்; சிந்திக்க வைக்கிறான்; தன்னுடைய நட்பால் அவளுடைய உள்ளத்தில் குறுகுறுப்பையும் மூட்டி விடுகிறான். ஆனால் அவன்.....?

அவன் ஒரு புதிர்தான்!

ஒரு நாள் ராமாயணத்தில் ஒரு கட்டத்தைப் பற்றிய பேச்சு எழுந்தது —

கானகத்தில் ஒரு நாள் இரவு, மண் தூங்க, மலை தூங்க, விண் தூங்க, பழுதில்லாத ராமனின் கண்கள் மட்டும் சீதையின் நினைவால் தூங்கவில்லையாம்!

''ராமபிரானே காதல் நோயால் வேதனைப் பட்டிருக்கிறாரே!'' என்றாள் திரிவேணி.

''ராமனும் இந்த மண்ணில் மனிதனாகப் பிறந்து தொலைத்து விட்டாரே. இதிலிருந்து தப்ப முடியுமா?'' என்றான் ரங்கமணி.

''மனிதனாகப் பிறந்து விட்டால் காதலித்துத்தான் தீர வேண்டுமா?'' ரங்கமணியை ஓரக் கண்ணால் பார்த்துக் கேட்டாள் திரிவேணி. ஆற்று மணலை அள்ளி விளையாடிக் கொண்டிருந்த ரங்கமணி அவளைப் பார்க்காமலே சொன்னான்:

''அவசியமில்லைதான். ஆனால் சீதை சும்மா இருக்க விட்டால்தானே?''

திரிவேணி கலுக்கென்று சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறாய்?''

''அப்பாவி சீதை என்ன செய்வாள்? தெருவோடு சென்ற ராமனைத் தலையை நிமிர்த்தி மாடியை யார் பார்க்கச் சொன்னார்கள்? நல்ல பிள்ளை மாதிரி பேசாமல் தன் பாதையைப் பார்த்துக் கொண்டு நடந்திருந்தால் ஏன் இந்த வம்பு?'' என்றாள் திரிவேணி.

''சீதையை யார் கன்னி மாடத்தில் வந்து நின்று கொண்டு தெருவைப் பார்க்கச் சொன்னார்களாம்?'' என்றான் ரங்கமணி.

''இந்த ஒட்டகத்துக்கு அதிக விலை சொல்றேனென்று பாக்கிறீங்களா? ஒரு காலன் தண்ணிலே ஐம்பது மைல் போகுமே சார் இது!''

''பெண்களென்றால் வீட்டுக்குள்ளேயே இருக்க வேண்டும் என்கிறீர்களா?''

''அப்படிச் சொல்லவில்லையே! தெருவுக்கு வந்தால் இப்படித்தான் ஏதாவது விபத்து நடந்து விடும்.''

''காதல் என்ன விபத்தா?''

''பின்னே இல்லையா? மிதிலைத் தெருவில் நடந்த ஆக்ஸிடெண்ட் எங்கு வரை பரவி விட்டது! கொழும்பு வரையல்லவா அது பரவிப் படாத பாடுபடுத்திவிட்டது'' என்றான் ரங்கமணி. இதைக் கேட்டுத் திரிவேணி கலகலவென்று சிரித்தாள்.

''கடைசியில் பெண் மீதுதான் பழி சுமத்துகிறீர்கள்?'' என்றாள் திரிவேணி.

''எல்லாவற்றுக்குமே பெண்தான் காரணம். கடவுள் பெண்ணைப் படைத்ததே ஆண்களைச் சீரழித்து, அவனுடைய ஆணவத்தை அழிக்கத்தானே!''

''அப்படியென்றால் நீங்கள் என்னோடு பழக வேண்டாம்'' என்று கூறிக் கோபம் கொண்டவளைப் போல் நடித்துக்கொண்டு எழுந்தாள். ரங்கமணி திடுக்கிட்டான்.

''அடடா நான் பொதுவாகச் சொன்னேன். உனக்கு எதற்குக் கோபம்? நான் ராமனும் இல்லை; நீ சீதையும் இல்லை; இது மிதிலையும் இல்லை'' என்றான் ரங்கமணி. இதைக் கேட்டுத் திரிவேணி துணுக்குற்றாள். அப்படியென்றால்.....?

ரங்கமணியின் மனத்தில் என்னதான் இருக்கிறது? அவளோடு அவன் நெருங்கிப் பழகுவதெல்லாம்; சிரிக்கச் சிரிக்கப் பேசுவதெல்லாம்; வெறும் நட்புத்தானா....? உண்மையிலேயே அப்படித்தானா.....??

''நான் ராமனும் இல்லை; நீ சீதையுமில்லை; இது மிதிலையும் இல்லை.''

இந்த வார்த்தைகள் அவளுக்கு எவ்வளவு கசந்தன; அவள் இதயத்தையே தாக்கி விட்டன. (தொடரும்)


நாளுக்கு நாள்...
உங்கள் மேனியெழிலை
ஓங்கச் செய்வது
ரெக்ஸோனா
அழகுசாதனத் தைலங்கள் இணைந்த விசேஷக் கலவை யாகிய 'கேடில்' அடங்கியது ரெக்ஸோனா ஒன்றுதான்.
பூரிக்கும் இன்ப நறுமணம் நேரமெல்லாம் உங்கள்மீது நின்றுநிலவச் செய்வது ரெக்ஸோனா ஒன்றுதான்..
அன்றாடம் உபயோகியுங்கள் ரெக்ஸோனா.
Rexona
GOOD FOR YOUR SKIN
'கேடில்' அடங்கிய ரெக்ஸோனா
உங்கள் மேனியெழிலுக்கு உகந்தது
இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

# மேஜர் பாலசந்தர்

அட்டைப்பட விளக்கம்



திரைப் படம் பண வசூல் விஷயத்தில் வெற்றி பெற வேண்டுமானால் அது வெறும் மூன்றாந்தரக் குப்பையாகத்தான் இருக்க வேண்டுமென்பதில்லை; திறமையுடன் செயலாற்றினால் தரமான படங்களும்கூட ஜனரஞ்சகமாக அமைய முடியும் என்பதை நிரூபித்துத் திரை உலகிற்குப் புத்துயிரும் புத்துணர்ச்சியும் ஊட்டி வருகிறார் பாலசந்தர். இதன்மூலம் தமிழ் நாட்டு சினிமா ரசிகர்களின் மதிப்பையும் உயர்த்தி வருகிறார். குப்பைப் படங்களைத்தான் மக்கள் விரும்பி நிரம்பப் பார்ப்பார்கள் என்ற அவதூறைத் துடைத்தெறிய முற்பட்டிருக்கிறார். தம் படத்தின் மூலம் சிரிக்க வைப்பது, அதில் வரும் கருத்துக்கள் மூலம் சிந்திக்க வைப்பது - இவை இரண்டுக்கும் இடையில் படக் காட்சிகளை ரஸிக்கவும் வைப்பது ஆகியவைகளே திரு பாலசந்தரின் உன்னதக் கோட்பாடுகள்.

திரு கே. பாலசந்தர் முதலில் நாடக மேடையை முற்றுகையிட்டு அதில் தம் புதுமைக் கருத்துக்களால் வெற்றிக் கொடி நாட்டினார். ராகினி ரிக்ரியேஷன்ஸாரின் ''எதிர் நீச்சல்'' நாடகத்தை யார்தான் பார்த்து மெச்சவில்லை? திரு கே. பாலசந்தருக்குப் பெரும் புகழ் தேடித் தந்த நாடகம் அல்லவா அது? அந்நாடகத்தில் வரும் ஒவ்வொரு பாத்திரமும் ஒவ்வொரு விதத்தில் உயர்ந்து நிற்கிறது. அவற்றுள் பட்டு மாமியின் பாத்திரம் தனிச் சிறப்புப் பெற்று இன்றியமையாத பாத்திரமாகி விட்டது. இந்த நாடகத்தில் மட்டுமல்லாமல் வேறு எந்த நாடகத்தை யார் நடத்தினாலும் அதில் ஒரு பட்டு மாமி வந்தாக வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. (ஆனால் மற்ற நாடகங்களில் வரும் மாமிகளால் ''எதிர் நீச்சல்'' பட்டு மாமியோடு எதிர் நீச்சல் போட முடியவில்லை என்பதும் ரசிகர்கள் ஒப்புக்கொண்ட உண்மை!)

திரு பாலசந்தரின் ஒன்றிரண்டு நாடகங்களின் மையக் கருத்துக்கள் அவருடையதல்ல, வேறெங்கிருந்தோ எடுக்கப்பட்டவை என்ற குற்றச்சாட்டுகள் நம் காதில் விழாமலில்லை. இதை ஒப்புக் கொள்வதாக இருந்தாலும் கூட அந்தச் சிறு மையப் புள்ளியை மட்டும் வைத்துக் கொண்டு அவர் வளர்த்திருக்கும் வண்ணக் கோலமாகிய நாடகம் அவர் கரத்தால் உருவான காரணத்தாலேயே மெருகேறி இத்துணை சிறப்பாக அரங்கேறியுள்ளது என்பதை யாரும் மறுக்க முடியாது.

கதை வசனம் டைரக்ஷன் இவற்றில் இன்று தலை சிறந்து விளங்கும் திரு கே. பாலசந்தரின் நாடக — திரையுலக வெற்றிக்குக் காரணம் அவரது கலைத் திறமை மட்டுமல்ல. திரு நாகேஷின் அயராத ஒத்துழைப்பும் மெருகேறி வரும் அவரது நடிப்பும் சேர்ந்துதான் அவருக்கு வெற்றிமேல் வெற்றி கிட்டுகிறது.

''மேஜர் சந்திரகாந்த்'', ''சர்வர் சுந்தரம்'' ஆகியவற்றில் திரு நாகேஷ் இணையற்ற பாத்திரமாக மாறி விடுகிறார். ''நீர்க் குமிழி''யில், வாழ்க்கையில் விரக்தியடைந்து விட்ட நோயாளியின் பாத்திரம் நாகேஷ் ஏற்றிருப்பது. எதிர் நீச்சல் மாதுவை மெச்சாதவரில்லை.

இப்போது வெற்றிப் படமாக ஓடிக்கொண்டிருக்கும் ''பாமா விஜயம்'' பாலசந்தருக்குப் பெருமையளிக்கும் படம். அந்த முழுநீள ஹாஸ்யப் படத்தின் வெற்றிக்கு உறுதுணையாயிருப்பவர் நாகேஷ்! இவ்விரட்டையரின் படத்தை இந்த இதழ் ''கல்கி''யின் அட்டையில் பிரசுரித்துப் பெருமிதம் கொள்ளுகிறோம். இவ்விருவரின் ஒத்துழைப்பில் இன்னும் பல உன்னதமான திரைப் படங்கள் கலை வண்ணத்தோடு வெளிவரும் என்று எதிர்பார்க்கிறோம்.

திரையுலகில் சிறந்த படங்களை எடுத்த எடுப்பிலேயே தயாரித்து வெற்றி மேல் வெற்றி கண்டு வரும் திரு கே. பாலசந்தரை 'மேஜர் பாலசந்தர்' என்று அழைப்பது பொருத்தம்தானே?

## அத்தியாயம் 3

# நீலவல்லி எங்கே?



"இளவரசியைக் காணோம்!" என்றான் வேலவன் கோதை. அவனுடைய குரலில் ஏமாற்றமும் துயரமும் அலை வீசின!

சேர வீரர்கள் கன்னி மாடத்தின் பல பகுதிகளிலும் புகுந்து ஆவலோடு தேடினார்கள்.

"இளவரசி இங்குதானே இருந்தார்? எங்கே காணோம்?" என்றார்கள் காவலாளிகள்.

"இளவரசி நிலா முற்றத்திலிருந்து எங்கும் செல்லவில்லையே!" என்றார்கள் எல்லாரும்.

"நீலவல்லியைக் காணோம்!" என்ற செய்தி ஒரு விநாடியில் வெள்ளைத் தீவு அரண்மனை முழுதும் நெருப்புப் போலப் பரவியது.

வேலவன் கோதை தனக்கு ஏற்பட்ட மன அதிர்ச்சியை வெளியே காண்பித்துக் கொள்ளாமல் மனத் திடத்தோடு நடந்து கொள்ள முயன்றான். ஆனாலும் கையும் காலும் பதறின.

## வெண்ணிலவுப் பெண்ணரசி

"தானைத் தலைவரே! இதில் ஏதோ சூது நடந்திருக்கிறதோ?" என்று கேட்டான் செங்குட்டுவன் வேலவனைப் பார்த்து.

"இளவரசே! ஒன்றும் புரியவில்லை. ஆனால் இளவரசி நேற்று வரை இங்கே தான் இருந்திருக்கிறாள் என்பது தெளிவாகத் தெரிகிறது, இந்த வீரர்களுடைய சொல்லிலிருந்து!"

"நேற்றே இளவரசி தப்பிச் சென்றிருக்க வேண்டும் போலிருக்கிறது. பார்ப்போம். என்ன சூழ்ச்சி நடந்திருந்த போதிலும் கைப் பற்றிய கோட்டையை இனி நம்மிடமிருந்து யாரும் மீட்டுவிட முடியாது. அது பற்றி நாம் மிகவும் முன் காவலாக இருக்க வேண்டும்!" என்றான் செங்குட்டுவன். அவனுக்கு வேலவன்கோதையின் உள்ளத்தில் அலை வீசிக் கொண்டிருந்த வேதனைக் கடல் எப்படித் தெரியும்!

"இளவரசே! கோட்டையின் எதிர்காலம் பற்றி எனக்கு எத்தகைய கலக்கமும் இல்லை. ஆனால் கோட்டைக்குள்ளே இருந்த இளவரசி எப்படிக் காணமற் போனாள் என்பதுதான் பெரும் வியப்பாக இருக்கிறது!" என்றான் வேலவன்.

"வீரர்களே! இந்தக் கன்னிமாடத்திலும் இதைச் சுற்றியுள்ள அரசமாடங்களிலும் எங்கெங்கே சுரங்கப் பாதைகள் இருக்கின்றன என்பதைச் சோதனை போடுங்கள்! இளவரசி நீலவல்லி எப்படித் தப்பித்துப் போயிருக்கக்கூடும் என்பதை ஆராய்ந்து இனி அந்தச் சுரங்க வழிகளையெல்லாம்



# சோழ

மிகுந்த கண்காணிப்போடு அடைத்து மூடிவிடுங்கள்!'' என்று உத்தரவிட்டான் செங்குட்டுவன்.

சேர வீரர்கள் வெள்ளைத் தீவு அரண்மனையின் சுரங்கப் பாதைகளையெல்லாம் ஆராயத் தொடங்கினார்கள். செங்குட்டுவன் வேலவன் கோதையைப் பார்த்துச் சொன்னான்:

# தலைவலியா?

# ஸாரிடான் 'ரோஷ்' சாப்பிடுங்கள்

## வலி நீங்கி...



## ...உங்களுக்குப் புத்துணர்ச்சி அனுபவமாகும்!

**அதுவே ஸாரிடானின் தனிப்பட்ட தன்மை!** வலியையும் அத்துடன் மனதில் உண்டாகும் 'பளு'வையும் போக்குவது மட்டுமல்லாமல், இதத்தையும் புத்துணர்ச்சியையும் கூட அளிப்பதற்காக ஸாரிடான் ஒரு தனிப்பட்ட முறையில் தயாரிக்கப்படுகிறது. ஸாரிடான் சாப்பிட்டதும் அனுபவமாகும் அற்புதமான மாறுதலைப் பாருங்கள்! உங்கள் மூளை மீண்டும் சுறுசுறுப்பாக வேலை செய்ய ஆரம்பிக்கிறது...வேலையில் உற்சாகம் ஏற்படுகிறது...சிநேகிதர்களுடன் களித்து மகிழ முடிகிறது! ஒரே ஒரு ஸாரிடான் வலியைப் போக்கி இதத்தையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும். ஸாரிடான் எப்பொழுதும் உங்கள் கைவசம் வைத்திருங்கள். குழந்தைகளுக்கு $\frac{1}{4}$ லிருந்து $\frac{1}{2}$ வில்லை வரை போதும்.




தலைவலி, பல்வலி, உடல் வலி, அசௌகரியமான நாட்களில் வலி உடன் நிவாரணம் பெற ஒரே ஒரு ஸாரிடான் போதும்!

**'ரோஷ்'** தயாரிப்பு:

**ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்**

VT. 5626.(A).

"தானைத் தலைவரே! வானமண்டலக் கடம்பன் ஒழிந்தான் என்பதில் நாம் மட்டற்ற மகிழ்ச்சி கொள்ள வேண்டிய வெற்றித் தருணம் இது. இப்போது அந்த மகிழ்ச்சிக்குக் குந்தகமாக வேறு எந்தக் கவலையும் நமது உள்ளத்தை வேதனைப்படுத்தலாகாது. இத்தனை பெரிய கோட்டையையே பிடித்த பிறகு நமக்கு இளவரசியைக் கண்டு பிடிப்பது ஒரு பெரிய செயல் இல்லை. ஒரு வேளை இங்கிருந்து யாராவது முன்னதாகவே தப்பிச் சென்றிருப்பார்கள் என்று வைத்துக் கொண்டாலும், இந்தத் தமிழ் நாட்டில் இவர்களுக்குப் புகல் தரக்கூடிய இடம் வேறு எது? துளு நாட்டு நன்னர்கள் மட்டுந்தான் இந்தக் கடம்பர்களின் திருட்டுக் கூட்டாளிகள். நம்முடைய அடுத்த குறிக்கோள் நன்னர்களின் மீது படை எடுப்பது என்பதுதானே! அதனால் அது பற்றி நாம் இப்போது கவலைப்பட வேண்டாம். முதலில் இந்த வெள்ளைத் தீவின் வெற்றிக்கு அறிகுறியாக இந்தத் தீவிலே உள்ள கடற்குறும்பர்களின் காவல் மரமாகிய கடம்ப மரத்தை வெட்டி வீழ்த்துவோம்! அந்தக் காவல் மரத்தைக் கொண்டு வாகை முரசு செய்து, நம்முடைய சேர நாட்டு மக்கள் கொண்டாடப் போகிற வெள்ளைத்தீவு வெற்றி விழாவிலே அந்தக் கடம்ப முரசு கொண்டு உவகை ஒலிகளை எழுப்புவோம்!"

இவ்வாறு அறிவித்தான் செங்குட்டுவன். வெள்ளைத்தீவு அரசு வட்டத்திலேயிருந்த காவல் மரமாகிய கடம்ப மரத்தை வெட்டி வீழ்த்தி, 'நாவலோ நாவல்!' என்று வீர முழக்கம் செய்தது சேரப் படை!

* * *



கடற் குறும்பு செய்து மேனாட்டு யவனர்களின் மரக்கலங்களை யெல்லாம் கொள்ளையடித்துத் தமிழ் மன்னர்களின் வாணிப வளத்தைக் கெடுத்து வந்த கடம்பரை அழித்து ஒழித்தது எத்தகைய பெரிய வெற்றி! இளவரசன் செங்குட்டுவனின் தலைமையிலே வேலவன்கோதையும் சேரநாட்டுக் கடற்படை வீரர்களும் எத்தகைய பேராற்றல் மிக்க செயலைச் செய்து முடித்தார்கள் என்று தமிழகம் முழுதும் களிப்படைந்தது. சேரலாத மன்னன் இந்த வெற்றியை ஒரு மாபெரும் திருவிழாவாகக் கொண்டாடினான் மாந்தை நகரத்திலே!

சேர நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வேந்தர்களும் தானைத் தலைவர்களும் புலவர்களும் புரவலர்களும் சான்றோர்களும் வந்து கூடினார்கள். திருவோலக்கத்தில் அரசியல் சுற்றத்தார் ஒருபுறமும், தானைத் தலைவர் ஒருபுறமும், நான்குபுறமும் விற்படை வீரர்களுமாகக் குழுமினார்கள். பாணரும் கூத்தரும் வந்து பாட்டும் கூத்தும் இயற்றிப் பரிசில் பெற்றுச் சென்றார்கள்.

திருவோலக்கம் முடிந்ததும் சேரலாத மன்னன் அழகு மிகுந்த யானை ஒன்றின் மீது இவர்ந்து திருவுலாச் செய்தான். அந்த அழகிய காட்சியைக் கண்ட கண்ணனார் என்ற புலவர் உள்ளம் நெகிழ்ந்தார்.

"கடல் நடுவே இருக்கை அமைத்துக் கொண்டு, மாமரத்தையே காவல் மரமாக நட்டுத் தங்கள் தீமைகளையெல்லாம் நடத்தி வந்தார்கள் அவுணர்கள்! கடல் நடுவே அவர்களுடைய அரண்மனையை அழித்து, அவர்களுடைய காவல் மரமாகிய மாமரத்தை வெட்டி வீழ்த்தி, வாகை சூடி வெற்றிக் கோலம் கொண்டான் முருகப் பெருமான்! தான் பெற்ற வெற்றிக்கு அறிகுறியாகப் பிணி முகம் என்ற யானை மேல் உலா வந்தான் முருகப் பெருமான். அந்தக் காட்சியே போல இருக்கிறது உன்னுடைய திருவுலாக் காட்சி! கடல் நடுவே உள்ள கடம்பரது அரணை அழித்து, அவர்களுடைய கடம்ப மரத்தை வீழ்த்தி, அதனால் முரசு செய்து வெற்றியை முழக்கும் சேரலாதனே! நின் சிறப்பைக் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி கொள்கிறோம் நாங்களும் எங்கள் சுற்றத்தார்களும்!" என்றும், இன்னும் பலவாறாகவும் பாடிப் பாடிப் பரவசம் அடைந்தார் புலவர் கண்ணனார்!

புலவர்கள், பாணர்கள், விறலியர்கள் எல்லாருக்கும் பரிசு வழங்கி அனுப்பி விட்டுச் செங்குட்டுவனும் வேலவன் கோதையும் தானுமாக அரச மனையிலே புகுந்து, ஆயமன்றம் என்று அழைக்கப்பட்ட இரகசிய ஆலோசனை மண்டபத்துக்குள்ளே சென்றான் சேரலாத மன்னன்! மகனையும் தானைத் தலைவனையும் பார்த்துப்பேசத் தொடங்கினான் சேர மன்னன் :

"கடற்கொள்ளைக் கூட்டத்தாரை அழித்து ஒழித்த செயலானது தமிழக வரலாற்றிலே சிறப்பு வாய்ந்த அரிய பெரிய செயலாகும். எதிர்காலத்தில் நம் நாட்டுக்கு வந்து வாணிபத்தை




**விடைகள்**

1. ஏழு நிமிடங்கள் 2. 15 பவுண்டு, 3 அடி 6 அங்குலம் 3. டர்பன் 4. 27,600 5. லிங்கனின் காரியதரிசியின் பெயர்: கென்னடி; கென்னடியின் காரியதரிசி: லிங்கன்! 6. அனைவருமே தாடி வைத்திருந்தனர். 7. டிசம்பர் 10. 8. சுமார் 3 அடி

மேலும் வளர்க்கப்போகிற யவனர்களும் மேனாட்டுப் பேரறிஞர்களும், இந்தப் போரை மகிழ்ச்சியோடு தங்கள் வரலாற்றிலே வியந்து பாராட்டி எழுதப் போகிறார்கள். அத்தகைய வெற்றியைக் கண்டு உவகை அடைந்தேன். என்றாலும் என் உள்ளத்தில் இப்போது ஏற்பட்டுள்ள சில துயரங்களைச் சொல்வதற்காகவே உங்கள் இருவரையும் தனியே அழைத்தேன்!''

இவ்வாறு பேசத் தொடங்கினான் சேரலாத மன்னன்.

''வயதின் முதுமையும் ஆட்சியின் கடமைகளும் என்னைச் சற்றும் தளராது பேணிக் கொண்டிருப்பதற்குக் காரணம், இளைஞர்களின் பொறுப்புணர்ச்சியும் சாதனைகளுமே என்று கருதி மகிழ்கிறேன். என்றாலும், கொங்கு நாட்டை நம்முடைய ஆட்சியிலே இணைத்திருப்பது கண்டும், புன்னாட்டு நீலக்கல் சுரங்கத்தின் சிறப்பு நோக்கியும் சோழ மன்னர்கள் நம்மிடம் வெகுண்டு போயிருக்கிறார்கள். சோழன் பெருநற்கிள்ளியோடு பெரியதோர் போர் நிகழ்த்த வேண்டிய ஒரு பெரிய அவசியம் நமக்கு நேரலாம் என்றும் கருதுகிறேன். அப்படி நேருமானால் அந்தப் போரிலே முழு மனத்தையும் செலுத்தி அந்தப் போர் நிகழ்ச்சியை இயக்க வேண்டிய பொறுப்பை நானே மேற்கொள்ளுவதாக இருக்கிறேன். நீங்கள் இருவரும் எதிர்காலத்தில் செய்து முடிக்க வேண்டிய ஒரு பெரும் பணி என்னவென்றால், துளு நாட்டு நன்னர்களை அடக்கி ஒடுக்க வேண்டும். அதை மனத்தில் எண்ணியே நம்முடைய கொங்குச் சேரர்களை ஆனைப் படையை வலிமைப்படுத்தும்படி சொல்லியிருக்கிறேன். புன்னாட்டின் மன்னர்களும் தங்கள் நாட்டின் வழியாக நமது படை சென்று துளு நாட்டைத் தாக்குவதற்கு வேண்டிய எல்லா உதவிகளும் செய்வார்கள். அவர்களுடைய முழு ஒத்துழைப்பும் நமக்கு இருக்கிறது. எனவே, நீங்கள் இருவரும் இனித் துளுநாட்டுப் படையெடுப்பு ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு அந்த மாபெரும் போரை எப்போது எப்படி நடத்தி வெற்றி காண்பது என்பதையே சிந்தனை செய்ய வேண்டும். அந்தச் சிந்தனைக்குரிய மன நிலை வேலவன் கோதைக்கு இருக்கிறதா என்றால், எதிர்பாராத முறையில் வெள்ளைத் தீவில் ஏற்பட்ட ஒரு சந்திப்பு அவனுடைய உள்ளத்தில் ஏதேதோ கவலைகளை உண்டாக்கி அவனைக் குழப்பி விட்டது. அது பற்றி எனக்கு—''

இவ்வாறு சொல்லி நிறுத்தினான் சேரலாத மன்னன். வேலவன் கோதைக்கு நெஞ்சம் அடைத்தது. கண்கள் கலங்கின.

''மன்னர் பெருமானே, அரசப் பணியிலே செல்லுபவன் காதலிலே சிக்குவது எத்தகைய தீவினை என்பதைச் செவ்வந்தி அடிகள் எனக்கு உணர்த்திய போது உடம்பெல்லாம் அனலாகச் சுட்டது. நான் நினைத்துச் செய்தது ஒன்று. நடந்திருப்பது வேறு. என்னைப் பெரிய உள்ளத்தோடு மன்னிக்க வேண்டும்!'' என்று சொல்லிச் சேரலாத மன்னன் முன்னிலையிலே உடல் தாழ்த்திக் கைகூப்பித் திருவடிகளிலே வணங்கினான் வேலவன்.

சேரலாதன் புன்முறுவலோடு பேசினான்:

''வேலவா! செவ்வந்தி அடிகள் எனக்கு அனுப்பிய மடக்கோலையை எதிர்காலத்தில் ஒரு நாள் நீ தனியாக இருந்து படித்துப் பார்த்தால், உன்னிடம் அடிகளுக்குள்ள எல்லையற்ற அன்பு எத்தகையது என்பது புலனாகும். அந்த அன்பு ஒன்றே நம் அனைவரின் தவறுகளையும் மன்னிக்க வல்லது. அதிலேயே என்னுடைய மன்னிப்பும் அடங்கியிருப்பதாக நீ கொள்ளலாம். ஆனால் அந்த உறவு நமக்கும் புன்னாட்டுக்கும் இடையே உள்ள ஒற்றுமையை இன்னும் சிறப்பாகப் பலப்படுத்துமே. அதற்கு இடமில்லாதபடி நீலவல்லி காணாமற் போய் விட்டாளே என்றுதான் நான் இப்போது வருந்துகிறேன். எனவே, காணாமற் போன நீலவல்லியைக் கண்டு பிடித்துக்கொண்டு வந்து, உங்கள் திருமண உறவைச் செவ்வந்தி அடிகளின் வாழ்த்தோடு முறைப்படி இணைத்து விட்டேன் என்றால், அந்த உறவு தமிழக மன்னர்களிடையே இப்போது ஏற்பட்டுள்ள வேற்றுமைகளை நீக்கிப் பலரும் ஒன்றுகூடி உறவாக வாழ்வதற்கு உறுதுணையாக அமையும் என்றே நினைக்கிறேன். எனவே, சோழர்களுடைய பகைமை வலுக்கும் முன்

# புத்தாண்டில் மீண்டும் எமது ஷோ-ரூம்




# விஸ்தரிப்பு!

சென்ற ஆண்டில், பட்டு சேலைகளுக்கான எமது ஷோ-ரூம் விஸ்தரிக்கப்பெற்றது.

இந்த ஆண்டில், வாடிக்கையாளர்கள் தாராளமாக, ஏராளமான புதிய ரகங்களை வசதியாகத் தேர்ந்தெடுக்க,

## 17-4-67 முதல்

மில் கைத்தறி மற்றும் பிரிண்டெட் சில்க் சேலைகளுக்கென்றே விசாலமான பிரிவொன்றையும் பிரத்யேகமாக அமைத்துள்ளோம்.

# நல்லி சின்னசாமி செட்டி

பனகல் பார்க்

(போன்: 44415 & 44411) தி.நகர் - சென்னை-17

தங்களது தொடர்ந்த பேராதரவை என்றென்றும் கோருகிறோம்

**கலியாணகால விசேஷ விற்பனை!**

## பட்டு சேலைகள் - சோளி பீஸ்கள்

னேயே நீலவல்லியை மீட்கக்கூடிய முயற்சியிலே நீ வெற்றி பெற்று விட்டால், அது அரசியல் முக்கியம் வாய்ந்த ஒரு திருமண நிகழ்ச்சியாக முடியும்! அதைச் செய்ய வேண்டும் நீ. என்ன சொல்லுகிறாய்?'' என்று கேட்டான் சேரலாத மன்னன்.

''மன்னர் பெருமானே! கடலிலே போர் நடந்த போது, திடீரென்று கடம்பனுடைய அரச மரக்கலம் தோன்றியதும், வானமண்டலக் கடம்பன் என்னுடைய சுழல்களைக்கு இரையானதும், உடனே அந்த மரக்கலம் கடலிலே ஆழ்ந்ததும் — எல்லாம் ஏதோ சூதான நிகழ்ச்சிகள் போல் எனக்குப் படுகின்றன. ஏதோ ஒரு உட்பகை எங்கோ வேலை செய்கிறது. அது கடம்பனுக்கு எதிராக மட்டுமே வேலை செய்கிறதா, அல்லது நீலவல்லிக்கும் நமக்கும் உள்ள உறவுக்குமே எதிராக வேலை செய்கிறதா என்று தெரியவில்லை. கோட்டையைப் பிடித்து உள்ளே சென்றால் இளவரசியைக் காணோம்! எங்களை எப்படி ஏமாற்றி விட்டு யார் அந்தப் பெண்களைக் கவர்ந்து சென்றிருக்கக்கூடும் என்று புரியவில்லை!'' என்றான் வேலவன் கோதை. இந்தச் சொற்களை இது வரை மௌனமாகக் கேட்டுக் கொண்டு வந்த செங்குட்டுவன் இப்போது பேசத் தொடங்கினான்:

''நீலவல்லி நம்முடைய படையெடுப்புக்கு அஞ்சித் தானாகவே அரண்மனையிலிருந்து வெளியேறியிருக்கலாம். அல்லது அவளைக் காப்பாற்ற எண்ணிய வேறு சிலர் அவளை வெளியேற்றியிருக்கலாம். எது எப்படி நடந்திருந்தாலும் நீலவல்லியின் தந்தை நாடான புன்னாட்டுக்கு நீலவல்லியின் மீட்சிப் பணியிலே ஒரு பெரும் பங்கு இருக்கிறது. அதைக் கருதும் போது வேலவன்கோதை புன்னாடு சென்று மலர்வேணிய மன்னனைக் கண்டு பேசுவது பயனுள்ள செயலாகும் என்று கருதுகிறேன். அதோடு துளுநாட்டின் மீது நாம் படை கொண்டு செல்லும் போது, நமக்கு வேண்டிய முறையிலே புன்னாட்டுத் தொடர்பு நமக்கு நன்கு இலைவதற்கு இது பேருதவியாக இருக்கும் என்று நினைக்கிறேன்!''

இவ்வாறு செங்குட்டுவன் கூறியதும் அந்தக் கருத்தை மிக்க மகிழ்ச்சியோடு வரவேற்றான் சேரலாத மன்னன்.

''நல்லது. அவ்வாறே செய்வோம். வேலவன் கோதை புன்னாட்டுக்குச் செல்வதற்குரிய ஏற்பாடுகளை உடனே செய்யுங்கள். நான் நம்முடைய அரசியற் சுற்றத்தார்களை அழைத்துச் சோழ நாட்டு நிலையை ஆராய்கிறேன்!''

ஆயமன்றத்திலிருந்து செங்குட்டுவனும் வேலவன் கோதையும் வெள்ளி மாடம் என்று அழைக்கப்பட்ட செங்குட்டுவனின் அரச இல்லத்துக்கு வந்தார்கள்.

வேலவன் கோதை புன்னாட்டுக்கு இப்போது செல்வது சேரநாட்டின் சார்பிலே என்பது வெளிப்படையாக உறுதியாயிற்று. இதற்கு முன்பு அவன் மலர்வேணிய மன்னனைச் சந்தித்த சூழ்நிலை முற்றிலும் வேறுவிதம்! வெள்ளைத் தீவிலிருந்து நீலவல்லியுடன் இரவுக்கு இரவே தப்பி ஓடுவதற்கு வேண்டிய மரக்கலம் ஒன்றை நாடி அல்லவா புன்னாடு சென்றான், வேலவன்! செல்வந்தி அடிகளிடமிருந்து வந்திருப்பதாக அல்லவா அரசனுக்குச் சொல்லியனுப்பினான் அவன்! ஆனால் இப்போது அப்படியா! இல்லை. சேரலாத மன்னனுடைய தூதுவனாக, நேருக்கு நேராகச் செல்ல வேண்டியவன் அவன். சேரநாட்டுப் படையோடு கூட்டுச் சேர்ந்து துளுநாட்டு நன்னர்களை அழித்து ஒழிக்கப் போகிற ஒப்பந்தம் காரணமாகச் செல்கிறான் அவன்! மலர்வேணிய மன்னனின் அரசச் சுற்றத்தார்கள் அனைவரோடும் கலந்து பேசக்கூடிய வாய்ப்போடு செல்கிறான் அவன்!

இத்தனை சிந்தனைகளுக்கு நடுவில் நீலவல்லியின் மறைவு தந்த வேதனை ஆற்றொணாத் துயரத்தைத் தந்தது. 'எதற்காகத் தப்பி ஓடினாள் நீலவல்லி?' சேரர் படை தங்கள் தீவைத் தாக்க வருகிறது என்று தெரிந்ததும் அதற்காக ஏன் தப்பி ஓட வேண்டும் அவள்? சேரர் படையைச் சேர்ந்த தானைத் தலைவன் யார் என்பது அவளுக்குத் தெரியுமே! அப்படித் தெரிந்திருந்தும் அவள் தப்பி ஓட முனைந்தாளா? ஒரு வேளை கடலிலே நீந்தித் தப்பிக்க முனைந்த வேலவன் சேரநாடு சென்று சேர்ந்திருக்க மாட்டான் என்று எண்ணினாளோ ?

ஆகா! எத்தகைய உறுதிகள் எல்லாம் எடுத்தார்கள் இருவரும்! எத்தகைய கனவுகள் எல்லாம் கண்டு களித்தார்கள்! அத்தனையும் இப்படி ஆகும் என்று எதிர்பார்த்திருந்தாள்....?'

ஓடுகிற விபரீத சிந்தனைகளை அப்படியே நிறுத்தினான் வேலவன் கோதை. புன்னாடு செல்வது, நீலவல்லியைப் பற்றிய ஐயங்களைத் துலக்குவது, இல்லையேல் நீலவல்லியைத் தேடித்

தேடித் தமிழகம் எங்கும் திரிவது. அப்படியும் பயனில்லை என்றால் தமிழகத்திலே மூளப் போகும் போரிலே குதித்து இந்தப் புண்ணியத் தமிழ் நாட்டின் மறுமலர்ச்சிக்காக உயிர் ஈந்து வானுலகம் செல்வது!

இவ்வாறு ஏதேதோ எண்ணங்கள் மனத்தைக் குமைத்துக் கொண்டே சென்றன! வெள்ளிமாடத்திலே செங்குட்டுவனிடம் விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தான் வேலவன் போனது. மாடத்துக்கு வெளியே விரிந்து பரந்த சோலை. அதிலே பெரிய பெரிய மாமரங்கள் தேமாங்கனிக் கொத்துகள் தொங்கத் தொங்க நின்றன. அந்த மாமரக் காவிலே நடந்து வெளியே செல்லப் போகும் தருணத்தில் யாரோ உரத்துச் சிரிக்கும் ஒலி கேட்டுத் திகைத்துத் திரும்பினான் வேலவன்! அதோ ஒரு பெரிய மாமரத்தின் அடியில் நின்றார், வித்தைச் சித்தரான செவ்வந்தி அடிகள்! இவர் எங்கிருந்து இப்போது குதித்து வந்தார் என்று வேலவன் திகைப்பதற்குள் இதோ எதிரேயே வந்து நின்று மீண்டும் உரக்கச் சிரித்தார் அடிகள்!

(தொடரும்)




**உயிர் விளக்கு,**
**அருள் நீதி**

**மழலைக் கனவுகள்**

**The Symphony of life**

**அ**ருமையான சிறுகதைகள் இவ்விரண்டு தொகுதிகளிலும் அடங்கியிருக்கின்றன.

கதைகளில் வரும் சம்பவங்களும், கதைப் பாத்திரங்கள் எதிரொலிக்கும் உணர்ச்சிகளும், அவற்றின் மூலம் உருவாகும் அநுபவங்களும் எல்லாக் குடும்பங்களிலும் சர்வ சாதாரணமாக அவ்வப்போது நிகழக் கூடியவைகளே. ஆயினும், படிப்பவர் மனத்தில் உயிர்ச் சித்திரங்களைத் தோற்றுவிக்கும் சக்தி வாய்ந்தவை.

ஒரு கதை தாய்மையின் பேரார்வத்தை எதிரொலித்தால், இன்னொரு கதை இளம் பருவத்தின் இயற்கையான தூண்டுதலால் இணைய விழையும் உள்ளங்களின் போராட்டத்தை எதிரொலிக்கிறது. வேறொரு கதை வாழ்க்கையின் வேதனையான பகுதிகளையும், அவற்றுடன் போராடி வென்றே தீர வேண்டிய மனித இனத்தின் கடமைகளையும் எடுத்துக் கூறுகிறது.

ஆசிரியரின் கதை சொல்லும் திறனும் விதம் விதமான பாத்திரப் படைப்புக்களும், சிறப்பான உத்திகளும், சிந்திக்க வைக்கும் சிக்கல்களும், படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டும் இலக்கிய நயம் கலந்த தமிழ் நடையும் இக்கதைகளிலே புத்துணர்ச்சியைப் புகுத்தியிருக்கின்றன.

எழுதியவர்: வை. சுப்பிரமணியன்; பிரசுரம்: புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், 135, பவழக்காரத் தெரு, சென்னை — 1; ஒவ்வொன்றின் விலை: ரூ.5.00

**சொ**ல் நயம், கருத்து நயம், கற்பனை வளம் — இவையனைத்தும் ஒருங்கே கொண்டு ஓசை நயத்தின் உயிர்த் துடிப்போடு உருவாகியிருப்பதுதான் கவிதை. இவ்வளவும் நிறைந்திருந்த போதிலும், கவிதைக்கு இலக்கண வரம்பும் இன்றியமையாதது. இலக்கண வரம்பின் எல்லையை மீறிவிட்ட கவிதை ஓசை நயத்தை இழந்து, கேட்போர் செவிக்குணவாகும் தன்மையையும் இழந்துவிடும்.

இந்நூலில் காணும் கவிதைகள் எவ்விதக் குறையுமின்றி வளம் நிறைந்த பசுமையான பயிரைப்போல் விளங்குகின்றன.

உதாரணத்துக்கு ஒன்று பார்ப்போம்:

"நித்திரையாம் வெண்திரையில்
நிலவென்னும் ஒளியன்தான்
சித்திரமாய்க் குழைவாக்கிச்
செய்தாரோ கனவுகளை?"

டாக்டர் மு. வ. அவர்களின் அறிமுகம் இந்நூலுக்கு ஓர் அணிகலனைத் திகழ்கிறது.

இயற்றியவர்: மின்னூர் சீனிவாசன் எம்.ஏ. எம். லிட்., விற்பனை உரிமை பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை—1; விலை: ரூ.2 00.

**மு**துமைக்கென ஒரு கௌரவம் உண்டு. விஷயங்களில் ஆழ்ந்துவிடாமல் விலகி நின்று கவனித்து விவேகத்தைப் பிரயோகிக்கும் ஒரு வாய்ப்பு வயோதிகத்துக்கு உண்டு. பக்குவம் வாய்ந்த முதுமைப் பருவத்தின் இத்தகைய மாண்புகளையெல்லாம் அழகாக எடுத்துக் கூறுகிறது இந்த ஆங்கில நூல். சிந்தனையில் களிப்பவராகவும், செயலை ஒரு சாதனையாகவுமே கருதுபவராகவும் தம்மைக் கூறிக்கொள்ளும் ஆசிரியர் வெகு அழகான நடையில் தமது எண்ணங்களை வடித்திருக்கிறார். வாழ்க்கையைச் சங்கீதத்தின் இசையாக்கிக் கொள்வதுதான் மையக் கருத்து. மேநாட்டு நல்லறிஞர்களின் மேலான வாக்குகள் ஆங்காங்கு இயல்பாக வந்து, ஆசிரியரது கருத்துக்குத் துணை நிற்கின்றன.

நூல் சிறிது: ஆனால் நம் சிந்தனையை வெகு விஸ்தாரமாகக் கிளறிவிடுகிறது.

ஆசிரியர்: பி. நடேசன்; கிடைக்குமிடம்: ஹிக்கின்பாதம்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை - 2; விலை: ரூ. 1-00.

# இந்தியன் பாங்க் லிமிடெட், மதராஸ்

இந்தியன் பாங்க் 60-வது வருடாந்திரக் கூட்டத்தில், பாங்கின் சேர்மன் செட்டிநாடு டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார், Kt. B. A., D. Litt., M. L. C. அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவின் முக்கிய அம்சங்கள்:

தோல் தொழிலில் முக்கியமாக ஏற்றுமதித் துறையில் மிகவும் திறம்பட சேவை செய்த நமது டைரக்டரும், தென்னிந்திய வர்த்தக சபையின் தலைவருமான தொழிலதிபர் ஸ்ரீ ஏ. நாகப்ப செட்டியார் அவர்களுக்கு இந்திய ஜனாதிபதி பத்மஸ்ரீ பட்டம் அளித்தது நாம் எல்லோரும் மிகவும் பாராட்டக்கூடிய விஷயம்.

31-12-66 உடன் முடிவடைந்த பாங்கின் வரவுசெலவு விவரங்களைப் பரிசிலனை செய்து பார்த்தால் பாங்கின் முன்னேற்றம் திருப்திகரமாகவே இருக்கிறது. 59.15 கோடியாக இருந்த டிபாஸிட்டுகள் 71.66 கோடியாகவும் அட்வான்ஸ்கள் 44.37 கோடியாகவும், முதலீடுகள் 17.08 கோடியிலிருந்து 18.60 கோடியாகவும் பில்கள் 1.10 கோடியாகவும், மொத்த வருமானம் 4.15 கோடியிலிருந்து 5.09 கோடியாகவும், மொத்த செலவு 3.96 கோடியிலிருந்து 4.90 கோடியாகவும் உயர்ந்துள்ளன. நிகர லாபம் சென்ற ஆண்டைவிட சற்றே உயர்ந்துள்ளது. 1966-ம் ஆண்டில் 8 புதிய அலுவலகங்கள் திறக்கப்பட்டுள்ளன. 26-12-66 முதல் இந்தப் பாங்க், சேலம் பாங்க் லிமிடெட்டின் ஆஸ்திகளையும், பொறுப்புக்களையும் ஏற்றுக் கொண்டது.

பிரஸ்தாப ஆண்டில் நாட்டில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டது. தொடர்ந்து இரண்டு ஆண்டுகளாகப் பருவ மழை தவறியதன் காரணமாகக் கடும் வறட்சி ஏற்பட்டு உணவுத் துறையில் பெரும் நெருக்கடி விளைந்தது. இறக்குமதி மூலம் நாம் எதிர்பார்த்த அளவு உதவி கிடைக்கவில்லை. 1967-ம் ஆண்டில் உணவு நிலைமை எப்படி இருக்குமென்பது 10 நாடுகள் கொண்ட இந்திய உதவிக் கூட்டணி இப்பொழுது பாரிஸில் கூடியுள்ள கூட்டத்தின் முடிவைப் பொறுத்திருக்கிறது.

மத்திய மற்றும் மாநில அரசாங்கங்களால் அமைக்கப்பட்டுள்ள டெவலப்மெண்ட் பைனான்ஸ் இன்ஸ்டிடியூஷன்கள், லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் மற்றும் யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா ஆகிய ஸ்தாபனங்களால் தொழில்களுக்கு வழங்கப்பட்டுள்ள உதவிகளின் மதிப்பு ரூ. 800 கோடி முதல் 900 கோடி வரை இருக்கும். இதனால் தொழில் ஸ்தாபனங்கள் பெரும்பாலும் கவர்ன்மெண்ட் பைனான்ஷியல் ஸ்தாபனங்களை நம்பித்தான் இருக்கின்றன என்பது தெளிவாகிறது. ஓரளவிற்குப் பெரிய வர்த்தக பாங்குகளும் தவணைக் கடன்கள் வழங்குகின்றன.

சுதந்திரத்துக்குப் பிறகு ஐந்தாண்டுத் திட்டங்கள் மூலம் தொழில் மற்றும் விவசாய அபிவிருத்திகளால் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த திட்டமிடப்பட்டது. முதல் இரண்டு திட்ட காலத்தில் நிறைவேறிய இந்நோக்கம், மூன்றாவது திட்டத்தின் கடைசி இரண்டு ஆண்டுகளில் நிறைவேற இயலவில்லை. எல்லைச் சச்சரவுகள், மழை இல்லாமை காரணமாக தொழில் விவசாய உற்பத்திகள் குறைந்ததுதான் காரணம். நான்காவது திட்டத்தின் இரண்டாவது ஆண்டில் நாம் தற்பொழுது இருக்கிறோம். மூலதன கட்டுப்பாடு, விலைவாசி உயர்வு, அந்நிய உதவி இல்லாதது காரணமாக இத்திட்டம் முழுதும் நிறைவேறுவதில் போதுமான அளவு பற்றாக்குறை ஏற்படும். அதைத் தவிர்க்க, விலைவாசி உயர்வுக் கட்டுப்பாடு, அந்நிய உதவி, அந்நிய ஒத்துழைப்பு இவைகள் வரவேற்கப்பட வேண்டும்.

பிரதமர் ஸ்ரீமதி இந்திராகாந்தி, துணைப் பிரதமர் ஸ்ரீ மொரார்ஜி தேசாய் மற்றும் மத்திய மந்திரிகள் அனைவரையும் பாராட்டி அவர்கள் வெற்றிபெற விரும்புகிறோம். ஜனநாயக வாக்கெடுப்பு மூலம் சென்னை மாநிலத்தில் திரு சி.என். அண்ணாதுரையின் திறமை மிக்க தலைமையின் கீழ் திராவிட முன்னேற்றக் கழகம் பதவி ஏற்றுள்ளது. அவருக்கும் அவரது சகமந்திரிகளுக்கும் எமது பாராட்டுகள்.

ரிஸர்வ் பாங்க் ஆப் இந்தியாவின் கவர்னர் ஸ்ரீ பி. சி. பட்டாசார்யா வரும் ஜூலை மாதத்தில் ஓய்வு எடுத்துக் கொள்ளப் போவதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. ஓய்வு பெற்ற பிறகும் அவரது அனுபவம் மிகுந்த யோசனைகள் நமது நாட்டிற்கு கிடைக்கும் என நம்புகிறோம்.

பாங்கின் புதிய தலைமை அலுவலகக் கட்டட வேலைகள் திருப்திகரமாக நடைபெறுகின்றன. மேன்மைதங்கிய மைசூர் கவர்னர் ஸ்ரீ வி. வி. கிரி அவர்களால் மைசூர் முதலமைச்சர் ஸ்ரீ எஸ். நிஜலிங்கப்பா தலைமையில் நமது பாங்கின் பெங்களூர் நகரக் கிளை கட்டடம் 10-6-66 அன்று திறக்கப்பட்டது. அன்று முதல் நமது கிளை அந்தக் கட்டடத்தில் இயங்கி வருகிறது. கோயமுத்தூர் மற்றும் திருப்பூரில் நமது கிளைகளுக்குப் புதிய கட்டடங்களின் வேலை துரிதமாக நடைபெறுகின்றன.

நட்பு மனப்பான்மையுடன்கூடிய பணியில் தனது 60 ஆண்டு பூர்த்தியை இவ்வாண்டு ஆகஸ்டு மாதத்தில் பாங்கு எய்துகிறது. வைர விழா கொண்டாடுவதற்கான ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. நமக்குப் பேராதரவு அளித்த பாங்கின் அங்கத்தினர்களுக்கும், பங்குதாரர்களுக்கும் எமது நன்றி மிகுந்த வந்தனங்கள்.

இறுதியில் சக டைரக்டர்கள் அளித்த ஒத்துழைப்பிற்கும், ஸ்தல அட்வைஸரி கமிட்டிகளுக்கும், காரியதரிசி, அதிகாரிகள் மற்றும் சிப்பந்திகளின் சிறந்த சேவையைப் பாராட்டி மனமார்ந்த நன்றியைத் தெரிவித்தார்.

---

இது வருடாந்திர பொதுக்கூட்டத்தின் நடவடிக்கைகளின் முழு விவரம் அல்ல.

## நிபுணரின் அறிக்கை!

பிரபல முதலாளி ஒருவர் ஒரு நடிகையின் மீது மோகம் கொண்டார்; அவளைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினார். அவளும் சம்மதித்தாள். எதற்கும் முன் ஜாக்கிரதையாகத் துப்பறியும் நிபுணர் ஒருவரை அழைத்தார் முதலாளி. அந்த நடிகையின் நடத்தை எப்படி என்று ரகசியமாய் விசாரித்து விவரமாய் எழுதிக் கொடுக்கும்படி அவரைக் கேட்டுக் கொண்டார். துப்பறியும் நிபுணரும் அப்படியே விசாரித்து ஓர் அறிக்கை எழுதிக் கொடுத்தார். அதில்



இருந்தது இதுதான்: ''இந்த நடிகைக்கு நல்ல கீர்த்தி இருக்கிறது. உத்தமமான பல சிநேகிதர்கள் இருக்கிறார்கள் இவருக்கு. ஆனால் கடந்த கால நடத்தையில் ஒரு குற்றமுமில்லை. ஆனால் சமீபத்தில் சில நாட்களாக மட்டும் இவர்மீது ஓர் அபவாதம் ஏற்பட்டுள்ளது. சந்தேகத்துக்கிடமான ஒரு முதலாளியோடு இவள் இப்போதெல்லாம் அடிக்கடி திரிகின்றாளாம். இதைத் தவிர வேறு எந்தக் குற்றமும் இவள்மேல் சொல்வதற்கில்லை'' என்று எழுதியிருந்தது.

—ரமணன்

## நாய் எங்கே?

பெல்ஜியம் நாட்டில் ஹம்பர்ட் என்ற பத்திரிகைச் சிறுவனை ஒருநாள் ஒரு நாய் துரத்தியது. அவன் ஓட ஆரம்பித்தான். நாயும் அவனை இரண்டு மைல் தூரம் துரத்தியது. பிறகு பையன் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு திரும்பி அந்த நாயைத் துரத்த ஆரம்பித்தான். நாய் தன் வாயில் கௌவிக் கொண்டு வந்த எதையோ போட்டுவிட்டு ஓட ஆரம்பித்தது. எடுத்துப் பார்த்ததில், அது தன்னுடைய பர்ஸ் என்று அந்தச் சிறுவனுக்குத் தெரிந்தது. பிறகு எவ்வளவோ தேடிப் பார்த்தும் அந்த நாயை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை.

'பாபு'



## ரகசியக் 'கைக்கடிகாரம்'

மாஸ்கோவில் உள்ள ஒரு கடையில் குருஷேவ் உபயோகித்து வந்த ஒரு கைக்கடிகாரம் ஜனங்களின் பார்வைக்காக வைக்கப்பட்டிருக்கிறது. அது ஒரு சாதாரண கைக்கடிகாரம்தான். குருஷேவ் பதவியிலிருக்கும்போது அந்தக் கடிகாரத்தைத்தான் உபயோகித்துவந்தார். அதிகாரிகளுடன் சம்பாஷணை செய்துவரும்போது, குருஷேவுக்குக் கோபமேற்பட்டால் உடனே தம்முடைய கைக் கடிகாரத்தைக் கழற்றி மேஜையின்மேல் ஓங்கி அறைந்து கூச்சலிடுவார். இதைக் கண்ட அதிகாரிகள் எல்லோரும் வெலவெலத்துப் போய் விடுவார்களாம். ஒருநாள்



பிரெஞ்சு வெளிநாட்டு அதிகாரி அந்தக் கைக்கடிகாரத்தை வாங்கிப் பார்த்தார். பிறகுதான் ரகசியம் அம்பலமாயிற்று. அது ஓர் ஓடாத கைக்கடிகாரம் என்றும், அதனுள் இயந்திரம் ஒன்றுமில்லையென்றும், புரிந்தது! குருஷேவ் தமது மிரட்டல் தந்திரங்களுக்காகவே அதை உபயோகித்து வந்தார்!

ஆதாரம்: ''நாக்பூர் டைம்ஸ்''

தகவல்: 'ராஜா'

## பன்னிரண்டாவது கத்திரி !

நோயாளிக்கு அறுவைச் சிகிச்சை முடிந்ததும், தையல் போடும் வேலையைத் தொடங்கினார் டாக்டர். நர்ஸ் குறுக்கிட்டாள்:

"டாக்டர்! பன்னிரண்டு கத்திரிகள் உபயோகித்தோம். ஆனால் பதினொன்றுதான் இருக்கின்றன."

"பன்னிரண்டையும் எடுத்தாகிவிட்டது" என்றார் டாக்டர்.

"இல்லை... இல்லை. பதினொன்றுதான் இருக்கின்றன. பன்னிரண்டாவது கத்திரியைக் கண்டுபிடித்த பிறகு தையல் போடத் தொடங்குங்கள்."

"எனக்குத் தெரியும். பன்னிரண்டையும் நான்தானே எடுத்துக் கொடுத்தேன்."

"நீங்கள் மறந்திருக்கலாம். மறுபடியும் தேடுங்கள்" என்று கண்டிப்பான குரலில் கூறினாள் நர்ஸ்.

டாக்டருக்குக் கோபம் வந்துவிட்டது. "பின்னால் எது நடந்தாலும் நான் பொறுப்பு.



இப்போது தைக்கப் போகிறேன். நீ பேசாமல் இரு" என்று கத்தினார்.

"முடியாது. பன்னிரண்டாவது கத்திரியைக் காண்பிக்காமல் உங்களைத் தைக்க விடமாட்டேன்" என்று நர்ஸும் கூச்சல் போட்டாள்.

உடனே டாக்டரின் முகத்தில் புன்னகை மலர்ந்தது. "வெரிகுட்! நீ கண்காணிப்பாக இருக்கிறாயா என்றுதான் சோதித்தேன். இதோ பார்! பன்னிரண்டாவது கத்திரி" என்று சொல்லித் தமது காலுக்கு அடியில் இருந்து ஒரு கத்திரியை எடுத்தார் டாக்டர்.

"அடக் கடவுளே! அதையும் சேர்த்துத்தான் பதினொன்று. இன்னொரு கத்திரி வேண்டும்" என்று தலையில் அடித்துக் கொண்டாள் நர்ஸ்.

டாக்டர் முகத்தில் அசடு வழிந்தது!

—'விஜயா'

ஆப்பிரிக்காவில் வாழ்ந்து வந்த ஓர் அமெரிக்கப் பெண்மணியின் விலையுயர்ந்த நெக்லஸ் ஒன்று காணாமல் போய்விட்டது. நீக்ரோ வேலைக்காரன்மீதுதான் சந்தேகம். ஆனால், அவனைக் கேட்க முடியவில்லை. திருடனைக் கண்டுபிடிப்பதற்காக ஒரு மந்திரவாதி வரவழைக்கப்பட்டான். அவன் அந்த வேலைக்காரனோடு சேர்ந்து வேறு நான்கு நீக்ரோக்களை அழைத்து ஒவ்வொருவர் கையிலும் நன்றாகக் காய்ந்துப் போன அரிசியைக் கொஞ்சம் கொடுத்து நன்றாக மென்று துப்பச் சொன்னான். ஒவ்வொருவராக மென்று துப்பினார்கள். கடைசியில் துப்பியவன் அந்த வேலைக்காரன்தான். "இவன்தான் நெக்லஸைத் திருடியவன்" என்று வேலைக்காரனைப் பார்த்துக் கூறினான் மந்திரவாதி. எப்படி? மற்ற நால்வரும் அரிசியை நன்றாக மென்று துப்பினார்கள். ஆனால் அந்த வேலைக்காரனால் அரிசியை மெல்லவே முடியவில்லை. பயத்தினால் அவனது தொண்டையும் வாயும் வறண்டு விடவே, 'ஸலிவா' என்று சொல்லப்படும் நீர் அவன் வாயில் ஊறவே இல்லை. அதனால் அரிசி அரைபடாமல் அப்படியே வெளியில் வந்தது!



வேலைக்காரன் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டான்.

அனுப்பியவர்: பலர் ஆதாரம்: பஞ்ச்

## நாற்பதாயிரம் பேருக்குச் சமம்!

பேரரசன் நெப்போலியன், அப்போது தன் படைகளைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தான். உடன் வந்த தளபதி மார்மாண்டிடம் நெப்போலியன் கேட்டான்:

"நம்மிடம் மொத்தம் லட்சம் வீரர்கள் இருக்கிறார்கள், இல்லையா?"

அதற்குத் தளபதி தயங்கியபடி, "இல்லையே, மொத்தம் அறுபதினாயிரம் வீரர்கள்தாமே இருக்கிறார்கள்?" என்றான்.

அதைக் கேட்டதும் நெப்போலியன் கம்பீரமாக, "அப்படியானால் என் கணக்குச் சரிதான்! அந்த அறுபதாயிரம் வீரர்களோடு என்னையும் சேர்த்தால், மொத்தம் லட்சம் பேர் இல்லையா?" என்றான். தகவல்: _'அடங்காதவன்'




பாங்குற அமைந்து கொண்டிருக்கிறது அக்கட்டடம். அன்பின் சின்னத்துக்கு உருக் கொடுக்க, உலகுக்கெல்லாம் காதலின் மேன்மையைக் காட்டுவதாக அமையப் போகும் கட்டடம். சிற்பிகள் தங்கள் கைத்திறனைக் காட்டி அந்தக் காதலின் உருவத்துக்கு மெருகேற்றும் பணியில் மும்முரமாக நிற்கின்றனர்.

இடையே ஒரு பரபரப்பு. அதோ, அரசர் வந்து விட்டார்.

சிற்பிகள் தங்கள் கை வேலையை ஒரு நிமிடம் நிறுத்திவிட்டுத் தூரத்தே நோக்குகின்றனர். பாதுஷா, ஷாஜஹான் தனித்து வருகிறார்.

''அரசே! வாருங்கள்.'' தலைமைச் சிற்பி பத்தேகான் வரவேற்றான். சிற்பிகளின் கைத்திறனை அரசர் நோக்கிக் கொண்டிருந்தார். பிறகு பத்தேகானை நோக்கி, ''கான்! நான் இப்போது தனித்து, வந்திருப்பது உனக்கு ஆச்சரியமாக இருக்கிறதல்லவா?'' எனக் கேட்டார்.

''ஹுஜூர்....!''

''சொல்லு, ஏன் தயங்கி விட்டாய்?''

''காதலின் கையில் தங்கி விட்டவர்களிடம் ஒவ்வொன்றுக்கும் விளக்கம் கேட்டுக் கொண்டிருக்க முடியாது. இந்த மஹாலை நீங்கள் கற்கட்டடமாக நினைக்கவில்லை என்பது எனக்குத் தெரியும். அன்பின் உறைவிடத்துக்கான நினைவுச் சின்னம் சிறப்பாக அமைய வேண்டும் என்ற கவலை உங்களுக்கு இருக்கத்தானே செய்யும்!''

ஷாஜஹான் மெள்ளப் புன்னகை செய்தார். தம் தாடியை உருவி விட்டுக் கொண்டு பத்தேகானின் முதுகைத் தடவிக் கொடுத்தார். பிறகு கூறினார். 'என்னுடைய உள்ளத்தைப் புரிந்து கொண்டு தான் எடுத்த பணியைப் பூர்த்தி செய்யும் ஒரு கலைஞன் எனக்குக் கிடைத்துவிட்டது என் பாக்கியமே! மனம் திறந்து பேசவே நான் இப்போது உன்னிடம் வந்திருக்கிறேன்.''

''கூறுங்கள், அரசே!''

''நான் கூற வேண்டிய அவசியமே இல்லை, கான். என் உள்ளத்தைப் புரிந்து கொண்டு விட்டவனாக நீ பேசி விட்டாய். இது கற்களின் கட்டடம் இல்லை. காதலின் சின்னம். என் மும்தாஜை நான் எவ்வளவு ஆழமாகக் காதலித்தேன் என்பதை இந்த மஹால் எடுத்துக் காட்டும். இந்த மஹால் பாங்கும் பணிக்கையுமாக உலகத்தையே ஈர்க்கும் சக்தியை எவ்வளவு ஆழமாக அடைகிறதோ அவ்வளவு ஆழமாக என் காதல் உள்ளது என்பதை உலகோர் அறிய வேண்டும். கான்! பிரதிமை பூஜை செய்யும் பழக்கத்தை நாம் நம்பவில்லை. ஆயினும் என் மும்தாஜின் பிரதிமையை நான் உள்ளத்தில் வைத்துப் பூஜிக்கிறேன்; என் காதலின் சின்னத்துக்கு உலகோர் புகழ்மாலையின் பூஜையைச் செய்ய வேண்டும். புரிகிறதா கான், அவ்வளவு உயர்வாக அமைய வேண்டும் இந்த மஹால்.......!''

''புரிகிறது அரசே!''

நடந்துவிட்ட வேலைகளைப் பாதுஷா மீண்டும் ஒருமுறை சுற்றிப் பார்த்துவிட்டு வர விரும்பினார். அப்போது அவருடைய பார்வை தன் வேலையிலேயே கவனமாக இருந்த அருண்மீது சென்றது. பாதுஷா வந்ததையோ, அவர்கள் பேச்சையோ கவனிக்காதவன்போல் அருண் தன் வேலையில் ஈடுபட்டிருந்தான்.

பாதுஷா பத்தேகானை நோக்கிக் கேட்டார். ''கான், இவன் யார்? நான் பலமுறை கவனித்திருக்கிறேன். இவன் தன் வேலையில் எவ்வளவு கவனமாக இருக்கிறான்.''

''இவன் ஹிந்து அரசே! இவன் அருண். இவன் தந்தை தங்கள் தந்தையின் காலத்திலேயே ஆக்ராவுக்கு வந்து விட்டார். தம் கைத்திறனுக்குப் பல நற்சாட்சிப் பத்திரங்கள் பெற்றவர் அவர். இந்த மஹாலை ஆரம்பித்ததும் இவனை இங்கு வேலைக்கு அமர்த்திக் கொண்டு விட்டேன். எவ்வளவு சீக்கிரமாகப் பணிகளைக் கற்று விட்டான்! தங்களைவிட இவனுக்குத்தான் இது சீக்கிரம் பூர்த்தியாவதில் விருப்பம் இருக்கிறது'' என்று விளக்கம் தந்தான் பத்தேகான்.

''இவன் போன்ற பணியாட்கள்தான் எனக்கு மிகவும் அவசியம். எனக்கு என் காதல் கதையை இச்சின்னத்தின் மூலம் சீக்கிரமே வெளிப்படுத்தும் ஆவல் உள்ளது போல், இச் சிற்பிக்கும் அவசியம் இருக்கத்தானே செய்யும்?''

பத்தேகான் பதிலொன்றும் கூறவில்லை. அவனுக்கு அருணின் போக்குத் தெரியும். மனத்தோடு நகைத்துக் கொண்ட அவன் அரசரிடம் ஒன்றும் வெளியிடவில்லை.

பாதுஷா சென்று விட்டார். பத்தேகான் அருணிடம் வந்தான். அருண் இன்னமும் தன் வேலையில் கவனமாக இருந்தான்.

''அருண்!'' கான் கூப்பிட்டான்.

அருண் தலை நிமிர்ந்து நோக்கினான்.

''பாதுஷா வந்தது தெரிந்திருக்குமே!''

''பாருஷா என்றுதான் நினைத்தேன். சம்பாஷணையின் போக்கு அப்படித்தான் இருந்தது!''

''அப்படியானால் நாங்கள் பேசிக் கொண்டதை நீ கேட்டுக் கொண்டுதான் இருந்தாயா? நீ உன் பணியில் கவனமாக இருந்ததாகவல்லவோ நினைத்தேன்?''

''பணியின் கவனத்தில் கண்களும் கைகளும் நிலைத்திருந்தது உண்மைதான். ஆயின் சொற்கள் தானாகக் காதில் விழுந்த போது மனம் அவற்றைத் தெரிந்து கொண்டது.''

''பாருஷா சொன்னதைக் கேட்டாயா? இந்தக் காதல் சின்னத்தின் மூலம் உன் கைத் திறனை வெளிப்படுத்துவே இவ்வளவு கவனமாகச் செய்கிறாயாம்!'' என்று கூறி விட்டுப் பிறகுதான் நகைத்தான்.

அருணும் புன்முறுவல் பூத்தான். கைவேலையை அப்படியே நிறுத்திவிட்டு எதிரே நோக்கினான். உணர்ச்சியில் பிறந்த உருவாக எதிரே தோன்றிய பிம்பத்தில் கண்கள் லயித்தன. அந்தப் பிம்பத்தின் மூலப் பொருள் அவன் அருமைக் காதலி ராதா.

''ராதா! ராதா!'' அருண் கூவிக் கொண்டே தன் இல்லத்தில் நுழைந்தான்.

அழகின் உருவம் ஒன்று அவன் எதிர் வந்து நின்றது. முகமெல்லாம் பூ மலர் விரிப்பு. இதழ்க் கடையில் தேனமுத நகைப்பு. ஆதவனைக் கண்ட கமலமாகக் கன்னங்களும் கண்களும் விரிந்தன. அருண் அவளையே நோக்கிய வண்ணம் நின்று விட்டான்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?'' ராதா கேட்டாள்.

''திடீரென அழகுக் கடை ஒன்று விரிந்து விட்டதே! இதில் எந்தப் பொருளை ஸ்பரிசிக்கலாம் என்ற யோசனை வந்து விட்டது.''

''சொல்ல மாட்டீர்களா பின்னே. அழகுக் கடையை அமைத்தவரே நீங்கள்தானே! அனைத்தும் உங்கள் பொருள்தானே!''

''அர்ப்பணிக்கும் குணம் ஒன்றே பெண்களுக்குச் சிறந்த அழகு ராதா!'' அருண் மெள்ள அவள் அருகில் நெருங்கினான்.

இருவர் கண்களும் வெகுநேரம் உறவாடி நின்றன. சட்டென ஏதோ நினைத்துக் கொண்டவன் போல் அருண் நகர்ந்து ஜன்னலுக்கு வெளியே நோக்கியபடி நின்றான்.

ராதா அவனுக்குப் பின்புறம் வந்து நின்றாள். ''அருண், ஓடத் துடிக்கும் பிரவாகத்தைக் கட்டுப்படுத்தி நிறுத்தி வைப்பது இயற்கைக்கு விரோதமல்லவா?''

அருண் திரும்பி அவளை நோக்கினான். ''முழுவதும் அப்படி ஏற்பதற்கில்லை. நாமாக ஏற்படுத்திக் கொண்டதுதான் என்றாலும் ஒரு கட்டுப்பாட்டுக்குள் இருப்பதுதான் இயற்கைக்கு நாம் உதவுவதாக இருக்கும். சமுத்திரம் தன் கரையை உடைத்துக் கொண்டு விடுவது நல்லதல்ல. மனத்தை அடக்குவது மனிதனுக்கு ஏற்பட்ட இயற்கையைப் பழக்குவதாகும்.''

''நீங்கள் எப்படியெல்லாமோ பேசி வைராக்கியத்துடன் இருக்கப் பார்க்கிறீர்கள். ஆனால் ஒவ்வொரு முறை நீங்கள் மனத் தவிப்பு அடைவதை நான் காண்கிறேன். அப்பொழுதெல்லாம் என் மனம் என்ன பாடுபடுகிறது தெரியுமா?''



அருண் ராதாவை நோக்கிப் புன்னகை புரிந்தான். "ராதா! மனத்தை அடக்குவதில் நான் வெற்றியடைய நீ உதவி புரியவேண்டும். என்னுடையது, எனக்கே எனக்கு என்ற பொருளை வெள்ளமா அடித்துச் சென்று விடும்? இதோ பார் ராதா, என் அப்பா ஏழை. நீயோ பெற்றோர்களை இழந்து என் பெற்றோர்களின் கீழ் வளர்ந்து விட்டாய். அப்போதே என் அப்பா 'இந்தப் பெண் என் ஒரே மகனுக்குத்தான் உரியவள்' என்று முடிவு செய்து விட்டார். அவர் தம் முடிவைச் செயல் முறையில் காட்ட முடியாதபடி நாம் சிறுவர்களாக இருந்துவிட்டோம். அதற்குள் காலன் அவரையும், என் தாயையும் தன்னிடம் அழைத்துக் கொண்டு விட்டான். நீ தனியாக என் கையிலிருந்தும் நான் விலகியே நிற்கிறேன். அது மட்டுமல்ல, பதேகானின் அருகிலிருந்து தொழில் கற்று அவரது பிரதம பணியாளனாகவும் இருக்கிறேன். ஏன் தெரியுமா? நாம் மணம் புரிந்து கொள்ளச் செல்வம் வேண்டும். அச் செல்வத்துக்காகவே தாஜ்மஹாலை நிர்மாணிக்கப் பங்கெடுக்கிறேன். அரசர் வாரி வழங்கப் போகிறார். அக் காதல் மாளிகையிலிருந்து வரும் செல்வம் என் காதல் தேவியை என்னுடையவளாக்கும்.... ராதா.... அப்போது சுவர்க்கம் இதுவே என நாம் இசைப்போம்; என் ராதா எனக்குரியவள்."

அருண் மெள்ள ராதாவைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டான். காதல் கீதம் இருவர் செவியிலும் பாய்ந்தது.

**க**ல்லறை மாளிகையா? அல்லது பளிங்குக் கற்களின் ஒளியா? கண்டோர் மயங்கும் அற்புதமாக மாளிகை நிற்கிறது.

பதேகான் ஒவ்வொரு இடமாக பாதுஷாவுக்குக் காட்டிக் கொண்டே செல்கிறான். சலவைக் கற்களில் எவ்வளவு அழகான சிற்ப வேலை! மன்னன் தன் காதல் தேவியைக் கண்டு விட்டது போல் அவளது தூய நினைவுச் சின்னமாகத் தாஜ்மகாலைச் சுற்றிப் பார்த்துக் கொண்டே வருகிறார்.

நடுவில் ஓர் இடத்தில் நிற்கிறார் பாதுஷா. பதேகான் தன் போக்கில் விளக்கம் கூறிக் கொண்டே போகிறான்.

"பதேகான்!"

"அரசே!"

"ஒவ்வோர் இடத்தின் கைவண்ணத்தையும் நீ அருண் ஒருவனுடைய திறமைக்கே உரியதாகச் சொல்லிக்கொண்டுபோகிறாயே!"

"ஹுஜூர்! புனித குரானின் மீது ஆணையாகக் கூறுகிறேன். இக்கட்டடம் உலகோர் வியக்கும் பாங்குடன் எழும்பியதற்கு முக்கிய காரணம் அருண்தான். நான் சிற்பிகளின் தலைவன். எனினும் நான் காட்டிய கோட்டைப் பாங்குடன் இழைத்தவன் அருண். தன் திறமையையும் அவன் வெகுவாக இதில் திழைவிட விட்டிருக்கிறான். அரசே, நான் உண்மையை ஒப்புக் கொள்கிறேன். என்னைக் காட்டிலும் அருணுக்குத் திறமை அதிகம்."

"அப்படியானால் பரிசு அவனுக்குத்தான் அதிகம் கிடைக்கவேண்டும் என்று சொல்லு!" கேட்டுவிட்டு ஷாஜஹான் சிரித்தார்.

"உங்கள் சொற்கள் செயல் முறையில் நின்றாலும் அதற்காக நான் பொறாமைப்படமாட்டேன். அவனுடைய திறமையின் காரணமும் எனக்குத் தெரியும். அவனுக்கு ஒரு காதலி உண்டு. நீங்கள் இக்கட்டடத்தின் வேலைக்கு அளிக்கப் போகும் சன்மானத்தின் மூலம் ஆடம்பரமாக அப்பெண்ணைத் தன்னுடையவளாக்கிக் கொள்ளப் போகிறான். காதலின் சக்தி அவனைப் பெரிய கலைஞனாக மாற்றி விட்டது!"

ஷாஜஹானின் மனத்தில் திடீரென ஏனோ ஒரு சலனம் ஏற்பட்டது. அப்போதே அவர் தம் அரண்மனைக்குத் திரும்பி விட்டார்.

இரவு முழுதும் அவர் காதில் இந்த வாக்கியம் ஒலித்துக் கொண்டே இருந்தது. 'காதலின் சக்தி அவனைப் பெரிய கலைஞனாக்கி விட்டது.'

"**ரா**தா! ஓ, ராதா!"

ராதா ஓடி வருகிறாள். அரச சபைக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறான் அருண்.

"என்ன அப்படிக் கண்கொட்டாமல் பார்க்கிறாய் ராதா?"

"உங்கள் கைகளைப் பார்க்கிறேன். தாஜ்மகாலை அற்புதமாகச் சமைத்த கைகளாகப் பார்க்கவில்லை. என் கழுத்தில் மாங்கல்யத்தை அணிவித்து என்னை உங்களுடையவளாக ஆக்கிவிடப் போகும் கைகளைப் பார்க்கிறேன். சன்மானம் பெற நீங்கள் அரச சபைக்குப் புறப்பட்டு விட்டீர்களே! நாம் ஐக்கியமாகும் புனித நாள் நெருங்குகிறது."— இப்படிக் கூறிய ராதா அருணின் கைகளை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

"ராதா! உனக்குச் செய்தி தெரியுமா? அரசர் தர்பாரில் சன்மானம் அளிக்கப் போவதில்லையாம். தனித் தனியாகச் சந்தித்துத் தரப் போகிறாராம். அரசரின் காதல் மாளிகையின் சின்னத்தில் என் கைவண்ணத்திற்காகப் பரிசு சிறப்பாகக் கிடைக்கப் போகிறது. முதன் முதலாகத் தங்க நாணில் மாங்கல்யத்தை உன் கழுத்தில் அணிவிக்கப் போகிறேன்!"

அருண் மகிழ்ச்சியோடு கிளம்பி விட்டான்.

"**ஆ!**" என்ற கூக்குரல் பதேகானிடமிருந்து கிளம்பியது. "அரசே, இதென்ன அநியாயம், இதென்ன கொடுமை!"

முதலாகச் சன்மானம் பெற அழைக்கப்பட்ட அருண் துடிதுடித்து நிற்கிறான். காதல் சின்னமான தாஜ்மகாலை உலக அதிசயமாக எழுப்ப உதவி புரிந்த அவன் கைகள் இரண்டும் முழங்கையிலிருந்து பிரிந்து தரையில் கிடந்தன. முழங்கையிலிருந்து இரத்தப் பிரவாகம் தரையில் கொட்டிக் கொண்டிருந்தது.

"அரசே, உங்கள் மனைவியிடம் நீங்கள் காட்டிய அன்பின் நினைவுச் சின்னத்தை எழுப்பிய இந்த இரு கைகளுக்கும் இதுவா பரிசு?" பதேகான் கூக்குரலிட்டுக் கூவினான். "இதுவா உயர் சன்மானம்?"

ஷாஜஹானிடமிருந்து சிரிப்புத்தான் வெளிப்பட்டது. "பதேகான், நீ புரியாமல்

மென்மையான
நறுமணங் கலந்தது!

நீண்ட நேரம்
நின்று
மணம் பரப்பி
இதமான
உணர்ச்சியைத்
தருவது




ஒவ்வொரு
ஊரிலும்
ஏஜெண்டுகள்
தேவை

**SOCIETY GULAB**
**सोसाइटी गुलाब**

வியாபார விசாரணைகளுக்கு :

இ பெங்களூர் அகர்பத்தி
மான்யுபாக்சரர்ஸ்
கோவாப்பரேடிவ் சொஸைட்டி லிட்.
9, சாந்தப்பா லேன், பெங்களூர் - 2

# ஸ்ரீ பாலாஜி
# கல்யாண மண்டபம்

1, சுந்தரம் அய்யர் தெரு
சென்னை -17
(அகஸ்தியர் ஆச்ரம் கோவில் அருகில்)

☼

கல்யாண வரவேற்புகள் மற்றும் இதர விசேஷங்களுக்கும் ஏற்றதாக சகல வசதிகளுடன் விஸ்தாரமான இட வசதி உண்டு

# சர்க்கரை சேராத
இனிய பானங்கள்*!
ஸ்பென்ஸர் கம்பெனியாரின்
# ஆரஞ்ச்
# ஜின்ஜர்
# லெமன்
# கோலா




* முற்றிலும் சாக்கரின் கலவாதது
* அகில இந்திய டையபெடிக் அஸ்ஸோஸியேஷனால் அங்கீகரிக்கப்பட்டது

MOULIS

# அமுல் அளிக்கும் புதுமை!

# அமுல்ஸ்ப்ரே

## புரதச் சத்துச் செறிந்த குழந்தை உணவு




உடல் வளர்ச்சிக்கான புரதம் இதைவிட அதிகமாக அடங்கிய பாலுணவு வேறில்லை!





**கரைய 20 வினாடிகள் கூட ஆகாது . . . ஜீரணிக்க எளிது.**

நாலு மடங்கு எடை ஏறும்படி, முதல் இரு ஆண்டுகளில் உங்கள் குழந்தை அதிவேகமாக வளரும். அதற்கு பெருமளவிலும் ஆதாரம்: புரதசத்து. உடல் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதத்தை உங்கள் குழந்தைக்கு அளிக்கிறது அமுல்ஸ்ப்ரே.

**வைட்டமின்கள், வேறு பல நலன்கள் எல்லாமடங்கியது.**

அவசியமான வைட்டமின்களும் அடங்கப் பெற்றது அமுல்ஸ்ப்ரே. கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச் சத்து, உலோக தாதுக்கள், குழந்தையின் வளர்ச்சிக்குரிய இதர சுட்டப் பொருள்கள் யாவும் உகந்த விகிதங்களிலே பொருந்தப் பெற்றது அமுல்ஸ்ப்ரே. தியாமின், சோடியம் ஐயோடைட், ஃபாலிக் அமிலம் ஆகியவையும் இயல்பான வடிவிலே இடம் பெற்றுள்ளன.

**ஜீரணிக்க எளிது.**

ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் கையாளப்படும் ஸ்ப்ரே-ட்ரை செய்முறை மூலம் ஆக்கம் பெறுகிறது அமுல்ஸ்ப்ரே. உயரிய ஜீரணத் தன்மையை அளிக்கிறது அம்மேலான முறை: பாலின் புரதச் செறிப்பையும் பண்பையும் மேம்படப் பாதுகாக்கிறது.

**அற்புதமாகக் கரையும்:**

விழுது குழைக்கத் தேவையில்லை. முழு அளவு வெந்நீரிலே அமுல்ஸ்ப்ரே சேர்த்து, நன்கு கலக்கினால் 20 வினாடிகள் ஆவதற்குள் தயார். நிப்புள் துளைகளை அடைத்துக் கொள்ளாது.

**உங்கள் குழந்தைக்கு உகந்தது அமுல்ஸ்ப்ரே!**



அமுல்ஸ்ப்ரே 500 கிராம் டப்பாக்களில் வருகிறது. (1 பவுண்டுக்கு 46 கிராம் அதிகம்).

ASP/AS-1/67-TM

ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட்.
கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோவாப்பரேடிவ் மில்க் ப்ரொட்யூசர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.
சென்னை, ஆந்திர மாநிலங்களில் விநியோகிக்கப்படுகிறது.

பேசுகிறாய். அருணுக்கு நான் சன்மானம் அளிக்கத் தவறவில்லை. அவன் இப்போது இங்கிருக்கும் வேளையில் அவன் இல்லத்துக்கு வண்டி வண்டியாகப் பண மூட்டைகள் போய்க் கொண்டிருக்கின்றன. அவன் இனிப் பணத்தில் புரள முடியும். இதைவிட உயரிய சன்மானம் என்ன வேண்டும்?''

''ஹூம்! உயரிய சன்மானம்! அரசே, பாதாளக் கிணற்றில் தள்ளிவிட்டு அவன் மீது பொற்குவியலைக் கொட்டுவது போல் இருக்கிறது உங்கள் செய்கை!'' பதேகான் பயமற்று இரைந்தான்.

''பதேகான், அத்துடன் நிறுத்து. அருணின் காதலே அவனுக்குச் சக்தியை அளித்ததாக நீயே சொன்னாய். இதை நன்றாகப் புரிந்து கொள், பதேகான்! நான் மும்தாஜுக்கு எழுப்பிய இந்தக் காதல் சின்னம் ஒன்றுதான் உலகில் ஒப்பற்றதாக இருக்க வேண்டும். இது போல், அல்லது இதைவிடச் சிறந்ததாக மற்றொன்று அமைந்து விடுவதை நான் விரும்ப மாட்டேன். அதற்கான வாய்ப்புக்களை விட்டு வைக்க நான் தயாராக இல்லை.'' ஷாஜஹான் திடமான குரலில் கூறிவிட்டு நகர்ந்தார்.

பதேகான் ஒருவனைத் தவிர மற்றக் கலைஞர்களுக்கும் அருணுக்குக் கிடைத்தது போன்ற சன்மானம் கிடைத்தது. அருண் இரு கைகளையும் இழந்துவிட்ட கோரத்தோடு வீடு திரும்பவே மனமில்லாமல் நின்றான். காதல் சின்னத்தை எழுப்பியதற்குப் பரிசாகத் தன் காதலியைத் தன்னுடையவளாக்கிக் கொள்ளும் மகிழ்ச்சியிலிருந்து அவன் தள்ளப்பட்டு விட்டான். இந்த இரு கைகளினால் அல்லவோ அவன் மாங்கல்யத்தை அணிவித்து ராதாவைத் தன்னுடையவளாக்கிக் கொள்ளத் திட்டமிட்டிருந்தான். இப்போது எந்தக் கைகள் அந்தச் சங்குக் கழுத்தில் மங்கல நாணை அணிவிக்கும்?

தவி தவித்து நின்ற அருணை வீட்டுக்கு மெள்ள மெள்ள அழைத்துச் சென்றவன் பதேகான். பதேகான் வண்டியிலிருந்து முதலில் இறங்க அவனுக்குப் பின்னடி பதேகான் அல்லவோ அவரை வண்டியிலிருந்து தூக்கி இறக்குகிறார்....... அது அருண்.

'ஹா! அருண்! என்ன கொடுமை இது? எங்கு இந்த விபத்து நேர்ந்தது?' ராதா துடிதுடித்துக் கூவினாள். முழங்கை வரை வெட்டி விடப்பட்டிருந்த அருணின் கையைக் கண்டு பிரளயமே வந்து விட்டதாக அவள் அலறினாள்.

அருண் பேச்சுக் கலையையே மறந்து விட்டவனாகக் கண்ணீர் உகுத்தபடி நின்றான். பதேகான் இன்னும் விடைபெறவில்லை.

''கான் சாகேப், இதென்ன அலங்கோலம்? எங்கள் காதல் இணைந்து உருப்பெறவிருக்கும் நேரத்தில் இதென்ன கொடுமை? யார் இப்படிச் செய்வித்தது? அல்லது தானாக நேர்ந்துவிட்ட விபத்தா? சொல்லுங்கள், கான்! ஏன் மௌனமாக இருக்கிறீர்கள்? அருணுக்கு ஒரு விரோதியும் கிடையாது என்பது எனக்குத் தெரியும். அப்படியிருக்க அவருக்கு இப்படி ஏற்பட்டுவிட்ட கொடுமைக்கு யார் பொறுப்பாளி?''

பதேகானுக்குத் தொண்டை அடைத்தது. நிக்கா சடங்குக்கு அவர்கள் முக்கியத்துவம் கொடுப்பது போல் தாலி முடியும் சடங்குக்கும் மதிப்பு கொடுப்பவன் அவன். ஆதலால் அக்காதல் துடிப்பைச் சகிக்க முடியாமல் திணறினான். பிறகு மெள்ளக் கண்ணீருக்கிடையே நடந்தவற்றைச் சுருக்கமாகக் கூறினான்.

பதேகானின் பேச்சைக் கேட்டுக் கொண்டு நிற்கவில்லை ராதா. அவ்விடத்தை விட்டு வேகமாக வெளியேறினாள். நடையையே மறந்தாள். காற்றோடு பறந்து அரண்மனையை அடைந்தாள். காவற்காரர்களை மறந்து அவள் எப்படியோ ஷாஜஹானின் இருப்பிடத்தை அடைந்து விட்டாள்.

''அரசே!''

புயல் ஓசையாகக் குரல் கேட்டதும் ஷாஜஹான் திடுக்கிட்டுத் திரும்பினார்.

''யாரம்மா நீ?''

''நான் யாரென்று சொல்லட்டுமா? உங்கள் மும்தாஜைப் போலவே நானும் ஒருவனுக்குக் காதலி......''

''ஓ! அருணின் காதலி என்று நினைக்கிறேன். நிறையப் பொற்திரவியங்கள் அனுப்பினேனே, கிடைத்ததல்லவா?''

''ஹூம், பொற்குவியல்! காதலின் தத்துவத்தை அறியாத நீங்கள் காதலின் நினைவுச் சின்னத்தை எழுப்பியது நகைப்புக்குத்தான் இடந் தரும்.''

''என்ன சொல்கிறாய் நீ? காதலின் தத்துவத்தை அறியாமல் காதலிக்காக இவ்வளவு பெரிய சின்னத்தை எழுப்ப எனக்குத் தெரியுமா? அறியாமல் பேசும் பைத்தியக்காரப் பெண்ணே!''

''காதலின் தத்துவம் தெரிந்திருந்தால் பொற்குவியலை எங்கள் வீட்டுக்கு அனுப்பி

---

## கிளிப்பிள்ளை!



முந்தின நாள் இரவு நாடகம் நடந்து முடிந்தது. அதில் முக்கிய பாத்திரத்தில் நடித்த நடிகை மறுநாள் படுக்கையில் சாய்ந்தபடி அன்றைய தினசரிகளில் அந்த நாடகத்தைப் பற்றி வெளியான விமரிசனத்தைப் படித்துக் கொண்டிருந்தாள். அநேகமாக எல்லாத் தினசரிகளிலும் அவளைப் பாராட்டியே எழுதியிருந்தார்கள், ஆனால் ஒன்றில் மட்டும் 'அந்த அம்மாளின் நடிப்பு மகாமோசம்' என்று எழுதியிருந்தது. உடனே நடிகை அந்த நாடகத்தை எழுதிய ஆசிரியருக்குப் போன் செய்து, ''இந்தப் பயல் எழுதியிருப்பதைப் பார்த்தீர்களா?'' என்று ரோஷத்தோடு விசாரித்தாள். அவர், ''அதைச் சட்டை செய்யாதீர்கள். இந்த விமரிசகனுக்குச் சொந்தமாக ஒன்றும் தெரியாது. கிளிப்பிள்ளை மாதிரி ஊரில் உள்ளவர் பேச்சையெல்லாம் கேட்டு அப்படியே எழுதியிருக்கிறான்'' என்று சமாதானப்படுத்தினார்.

ஆதாரம்: ''பாயின்ட் டி வியூ'' தகவல்: ''ரமணன்''

யிருக்கவே மாட்டீர்கள். காதல் என்பது தெய்வீகம். மனத்தோடு கூடியது. பொற்காசு போன்ற ஜடப் பொருள்களுக்குக் காதலின் தன்மை எங்ஙனம் தெரியும்? அரசே, அன்போடு அரவணைக்கும் என் காதலனின் கைகளை வெட்டி விட்டீர்களே! மங்களகரமான தாலி முடிந்து எங்கள் காதலின் ஐக்கியத்தை எதிர்பார்த்த நாளில் என்ன பயங்கரக் கொடுமையைச் செய்துவிட்டீர்கள்......!''

''கொஞ்சம் இரு, பெண்ணே! காதல் என்பது மனத்தோடு உறைவது என்று நீயே கூறிவிட்டுத் தாலி முடிவதை ஏன் முக்கியமாகக் கருதுகிறாய்? உன் காதலனின் உயிரை நான் பறித்து விடவில்லையே!''

''அரசே! போதும், உங்கள் பேச்சு ! நான் போகிறேன். போவதற்குமுன் எரிச்சலுடன் ஒரு வார்த்தை சொல்லாமல் நான் போக முடியாது. உங்கள் காதலைப் பேச எந்தத் தாஜ்மஹால் ஒன்றுதான் உலகில் இருக்க வேண்டுமென நீங்கள் சிற்பிகளின் கைகளைத் துண்டித்தீர்களோ, அந்த தாஜ்மஹால் உலகுக்கு அதிசயமாக இருப்பினும், உங்களுக்கு மட்டும் இன்பம் தரும் காதலை நினைவூட்டாது. அதைப் பார்க்கும் போதெல்லாம் நீங்கள் கண்டிப்பாக மனத் தவிப்பை அடையும்படி நேரிடும்.''

திடீரெனப் புயல் நின்று விட்டது போல் ராதா சென்றதுமே அங்கு அமைதி நிலவியது. ஆனால் புயல் ஏற்படுத்தி விட்டுச் சென்ற பாழ்கள் போல், ஷாஜஹான் மனத்திலும் துன்பமும் துயரமும் போன்ற கொந்தளிப்புகள் இடம் பெற்றன.

**ஔ**ரங்கசீப் தானாகக் கைப்பற்றிய சிம்மாசனத்தில் அமர்ந்ததுமே ஷாஜஹான் ஆக்ரா கோட்டையில் கைதியாகக் கிடக்கிறார்: அருகில் அவருடைய ஒரே ஆதரவான மகள் ஜஹானாரா.

''பேட்டீ! காலம் மாறும் கூற்றைப் பாரேன்! அரசகௌரவத்தோடு தாஜ்மகாலைத் தினமும் சென்று பார்த்துக் கொண்டிருந்தவன் நான். இன்று இந்தக் கோட்டையில் கைதியாக இருந்து இக்கண்ணாடி மூலம் தாஜ்மகாலை அழுதுகொண்டே பார்க்கிறேன்.'' ஷாஜஹான் புலம்பினார். வேதனையும் துயரும் அவரை வெகுவாகக் குலைத்து விட்டன.

அதே நேரத்தில் ஒரு பெண் கோட்டைக்கு வெளியே பாடுவது கேட்டது. ஷாஜஹான் கவனித்துக் கேட்கிறார்:

''ஜஹானாரா! இந்தப் பாட்டைக் கேட்டாயா? காதலர்களின் மனத்தைக் காட்டும் சொற்களாகவல்லவோ பாடுகிறாள். இந்தப் பெண் யாராக இருக்கும் ?''

''அப்பா, இவள் இப்படித் தெருவோடு பாடிக் கொண்டு செல்வதோடு கூலி வேலை செய்து பிழைக்கிறாள். வீட்டில் நிறைந்திருந்த பொற் காசுகளைத் தானம் செய்து விட்டாளாம். ஔரங்கசீப் இவளை இப்படிப் பாட விட்டுவைத்திருப்பது ஆச்சரியம்தான்.''

அரசனின் தேகம் நடுங்கியது. ''ஜஹானாரா! அவள் அந்த அருணின் காதலியாகத் தான் இருக்கும். எனக்கு நான் அனுபவிக்கும் கஷ்டத்தின் காரணம் புரிகிறது. காதல் ஐக்கியமாகும் தருணத்தில், அந்தப் புனிதம் உணராமல் என் காதல் நினைவுச் சின்னம் ஒன்றே உலகில் இருக்க வேண்டிய சுயநலத்தில் இவள் காதலனது இரு கைகளையும் வெட்டிவிட்ட பாவி நான். அவள் கொடுத்த சாபத்தை நான் அனுபவிக்கிறேன். பேட்டீ, அவளைக் கூப்பிடு, நான் அவளிடம் மன்னிப்புக் கேட்கிறேன். சீக்கிரம் கூப்பிடு.''

ஜஹானாரா ராதாவை அழைத்து வந்தாள்.

ஷாஜஹான் ராதாவின் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறார். ''பேட்டீ! என்னை மன்னித்து விடு.... நான் செய்த கொடுமைக்கு நீ கொடுத்த சாபத்தை அநுபவிக்கிறேன். எனக்கும் மும்தாஜுக்குமிடையே ஏற்பட்டிருந்த காதலைக் காட்டும் ஜடப் பொருளான தாஜ்மஹால் உலகோருக்கு வியப்பும் ஆனந்தமும் அளிக்கலாம். ஆனால் எங்கள் மூலம் தோன்றிய உயிர்ப் பொருள்களான என் மைந்தர்களால் நான் தாஜ்மஹாலையும் அநுபவிக்க முடியாத துயரை அடைகிறேன். மூன்று சகோதரர்களையும் கொலை செய்துவிட்டு என்னையும் கைதியாக்கி மாபெரும் துயரம் தரும் ஔரங்கசீப் எங்கள் காதலின் சின்னம் என்று எப்படி நான் கூற முடியும்? ராதா, நீ என்னை மன்னிப்பதாகக் கூறு. அப்போதாவது என் துயர் நீங்குமா எனப் பார்க்கிறேன். சொல்லு ராதா, இதற்கு ஈடாக உங்கள் காதலை உலகுக்குக் காட்ட இதே போல் மஹால் எழுப்ப உதவுகிறேன்.''

ராதா வேதனையோடு சிரிக்கிறாள். ''அரசே! காதலின் தத்துவம் உங்களுக்கு இன்னமும் புரியவில்லை. உங்களைப் போல நாங்கள் உலகுக்குப் பறைசாற்றும் காதலை ஏற்கவில்லை. எங்கள் காதல் எங்கள் இருவருக்கும் மட்டும் அவசியம். உள்ளத்தோடு உள்ளம் இணைந்த அத் தெய்வீகக் காதலை உலகுக்குப் பறைசாற்றும் அற்பப் பொருளாக நாங்கள் மாற்றமாட்டோம். எங்கள் அன்பும் எங்கள் காதலும் எங்களுக்கு மட்டுமே சொந்தம். நீங்கள் அளித்த திரவியம் அனைத்தையும் நாங்கள் தொடவேயில்லை.' எளிய முறையில் எங்கள் அன்பு நெருக்கம் கண்டது. எங்களுக்குப் பிறந்துள்ள மகளே எங்கள் சந்தோஷம் ஒன்றையே பெரிதாகக் கருதுகிறாள். இதைவிட வேறு என்ன இன்பம் வேண்டும்? அரசே! ஜடப் பொருளில்லாமல் உயிர்ப் பொருளில் எங்கள் காதல் சின்னத்தைக் கண்டுவிட்ட எங்களுக்கு உங்கள் சன்மானம் அவசியமில்லை. ஆதலால் என் மன்னிப்பை நான் உங்களுக்கு மனம் திறந்து அளிக்கிறேன். மேலும் உங்களுக்குத் துன்பம் தராமல் ஆண்டவன் விரைவிலேயே உங்களைத் தன்னிடம் அழைத்துக் கொள்ளட்டும்!''

ராதா வந்த வழியே திரும்பிச் சென்றாள். . ஷாஜஹான் அவளைப் பார்த்தபடி இருந்தவர், காதலின் தத்துவத்தை அறிந்தவர் போல, ''ஆ! மும்தாஜ்!'' எனக் கூவியபடி கீழே சாய்ந்தார்.

# சிவனருட் செல்வர்

நன்னலமிருந்த கன்னிகையை ஞான சம்பந்தரின் வலப்புறத்தில் இருத்தினார்கள். மனிதர்களும் இமைத்தலை விடுத்துக் கண் குளிரக் கண்டு வாழ்த்தி வானவர்களாயினார்கள். பவளக்கால் பந்தரில் திருநீலநக்க நாயனார் வேத விதிப்படி வேள்விகள் வளர்த்துச் சடங்குகளைச் செய்தார். திருவினும் மிக்க உருவுடைய தேவியார் திருக்கரத்தைப் பற்றி, சிவமாகவே தீயினைப் பாவித்து சிவாக்கினியைப் பிள்ளையார் வலம் வந்தருளினார். "இனி இவளுடன் சிவன்தாள் சேர்வேன்" என்று திருவுள்ளத்து எண்ணினார். திருத்தொண்டர்கள் யாவரும் சூழச் சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயிலையடைந்தார். பிறவிப் பாசம் தீர, "திருவடி நிழல் சேரும் பருவம் இதுவேயாம்" என்று இனிய தமிழ்ப் பதிகம் ஓதியருளினார்.

தேவ தேவராம் சிவபெருமான் திருவருள் புரிந்து, "ஞானசம்பந்தா! நீயும் நின் மனைவியும், நின் திருமணம் கண்ட புண்ணிய சீலர்கள் யாவரும் நமது சிவஜோதியில் புகுந்து வருக" என்று கூறியருளினார். ஆங்கு ஒரு பெரிய அற்புத ஜோதி தோன்றியது. அதில் ஒரு வாயிலும் தோன்றியது. ஞானசம்பந்தர், "ஞான மெய்ந்நெறி நமச்சிவாயவே" என்று கூறி நமச்சிவாயப் பதிகம் பாடியருளினார்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப் பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே

நெக்குளார்வ மிகப் பெருகிந் நினைந்
தக்குமாலை கொடங்கையில் எண்ணுவார்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்கன் நாமம் நமச்சிவாயவே

இயமன் தூதரும் அஞ்சுவர் இன்சொலால்
நயம்வந் தோத வல்லார்தமை நண்ணினல்
நியமந்தான் நினைவார்க் கினியான் நெற்றி
நயனன் நாமம் நமச்சிவாயவே.

கொல்வா ரேனும் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனும் இயம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையும் நீங்குவர் என்பரால்
நல்லார் நாமம் நமச்சிவாயவே.

பதிகத்தை விண்ணும் மண்ணும் கேட்கப் பதிகம் பாடியருளி, "திருமணத்துக்கு வந்த அனைவரும் பிறவிப் பிணி தீர இச்சோதியில் புகுமின்" என்று அருளிச் செய்தார்.

திருநீலநக்க நாயனார், திருமுருக நாயனார், சிவபாத இருதயர், நம்பாண்டார் நம்பி, திருநீலகண்ட யாழ்ப்பாணர், மற்றுமுள்ள திருத்தொண்டர்கள் மனைவியருடனும் மற்றுமுள்ள சுற்றத்தவருடனும் சிவசோதி



யினுட் புகுந்தார்கள். முத்துச் சிவிகை தாங்கியவர்களும், சின்னம் பிடித்தோர்களும், மங்கலவிளையில் கலந்து கொண்ட மடமங்கையர்களும் சோதியில் புகுந்தார்கள். ''ஆறு வகைச் சமயத்தில் அருந்தவரும், அடியவரும், கூறு மறை முனிவர்களும், கும்பிட வந்து அணைந்தாரும், வேறு திருவருளினால் வீடுபெற வந்தாரும் ஈறில் பெருஞ்சோதியினுள் எல்லோரும் புக்கதற்பின் திருஞானசம்பந்தர் காதலியாரது கரமலரைப் பற்றிக் கொண்டு அருட்சோதியை வலம் வந்து, அதனுட் புகுந்து ஒன்றுபட்டார்.

காதலியைக் கைப்பற்றிக்கொண்டு வலஞ்செய்தருளித்
தீதகற்ற வந்தருளுந் திருஞான சம்பந்தர்
நாதன்எழில் வளர்சோதி நண்ணியதன் உட்புகுவார்
போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி உடனானார்.

ஞானசம்பந்தர் சோதியுட் புகுந்தபின், அத்திருவருட் சோதி மறைந்தது. திருக்கோயில்பழமைப் படியே தோன்றியது. அதனுட் புகும் பேறு பெறாதார் திகைத்து நின்றனர். அதனை நெடுந் தொலைவில் நின்று கண்ட பிரமாதி தேவர்களும், முனிவர்களும் வாயார வாழ்த்தினார்கள்.

## 52.பக்தியில் பிறந்த கதை

இறைவனுக்குச் செய்த வழிபாடு அடியார்க்கு எய்தாது. அடியார்க்குச் செய்த வழிபாடு இறைவனுக்கு எய்தும். தனஞ்செயன் கண்ணபிரானுக்குச் செய்த வழிபாட்டைச் சிவபெருமான் ஏற்றுக்கொண்டார். ஆகவே அடியார் பக்தி மிக மிகச் சிறந்தது. கலிக்காம நாயனார் அடியார் பக்தியில் சிறந்தவர். அடியாரைப் பணிந்து அவர்கள் இட்ட பணிகளைப் புரிந்து மகிழ்வார்.





தங்கள் நாயகர் அடிபணி வாராடி சார்ந்து
பொங்குகாதலின் அவர்பணி போற்றுதல் புரிந்தார்.

சோழ நன்னாட்டில் காவிரி நதியின் வடகரையில் விளங்குவது திருப்பெரு மங்கலக்குடி. இது புள்ளிருக்குவேளூர் என்னும் வைத்தீசுவரன் கோயிலுக்கும் திருப்புன்கூர் என்னும் திருத்தலத்துக்கும் அருகில் திகழ்கின்றது. இத்தலத்தின் பேரிலேயே இது சிறந்த மங்கலத்துக்கு உறைவிடமாகியது எனத் தெரிகிறதன்றோ? நீண்ட கொடிகள் அசையும் மாட மாளிகைகள் நிறைந்த அந்நகரத்தில் எப்போதும் நல்விழாக்கள் நடந்துகொண்டேயிருக்கும். பெண்கள், அரங்கங்களில் நடனம் புரியும் ஒலியும், கீதநாத ஒலியும், உழவர்கள் ஒலியும் கடல் ஒலியை நாணச் செய்யும்.

அத்திருநகரில் வேளாளர் குலத்திலே, ஏயர் குடியிலே கலிக்காமர் என்பவர் அவதரித்தார். வேளாளர் மரபில் ''ஏயர்கோக்குடி'' என்பது ஒரு பிரிவு. இந்தக் குடியினர்கள் சோழர்களிடம் சேனாதிபதியாகப் பரம்பரை பரம்பரையாக இருந்து வந்தார்கள். 'ஏயர் கோன்' என்பது அரசன் சேனைத் தலைவனுக்குத் தரும் சிறந்த பட்டம். கலிக்காமர் இளமையிலிருந்து வளர்மதி புனைந்த அரனடியாரை மிக்க விருப்பத்துடன் பணிந்து போற்றுவார். திருப்புன்கூரிலுள்ள சிவாலயத்துக்கு அளவில்லாத திருப்பணிகள் புரிந்து, இடையறாது சிவபக்தி செய்து கொண்டிருந்தார் அவர்.

திருவாரூரிலே சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானைப் பரவையாரிடம் இரவிலே தூது அனுப்பிய செய்தியைக் கலிக்காம நாயனார் கேள்வியுற்றார். கேட்ட மாத்திரத்தில் உள்ளம் வெம்பினார்; வெகுண்டார்; வெருவினார். ''ஆ! ஆ! இது என்ன புதுமை? ஆண்டவனைப் பெண்பாலிடம் ஒரு வேலைக்காரனைப் போல் தூது அனுப்பியது முறையா? இது தகுமா? இதுவும் ஒரு பண்பாடா? இப்படிச் செய்பவனும் ஓர் அடியவனா?'' என்று எண்ணிக் கொதித்தார். ''பொறுக்க




" இணைபிரியாத தோழிகள் அவங்க இரண்டு பேரும்!"

வொண்ணாத இப்பெரும் பாதகத்தைக் கேட்டும் நான் மாளாமல் உயிரோடிருக்கின்றேனே? பெண் பொருட்டுப் பெருமானைத் தூதனுப்பிய அவனை நான் கண்டால் யாது நிகழுமோ?" என்று பலப் பல எண்ணிச் சீற்றம் மிகுந்து சுந்தரமூர்த்தியினிடம் பகை கொண்டிருந்தார்.

சுந்தரமூர்த்தி நாயனார் கலிக்காமருடைய சினத்தைக் கேள்வியுற்றார். 'ஒரு சிறந்த அடியார் என்மீது சினம் கொண்டிருக்கலாகாதே! அவருடைய திருவுள்ளத்தில் உள்ள சினம் தணிந்து என்னை ஏற்றுக் கொள்ள வழி யாது? விழி மூன்றுடைய விமலரே வழி செய்ய வேண்டும்' என்று கருதினார்.

"கலிக்காமருடைய பிணக்கைத் தேவரீர்தான் தீர்த்தருள வேண்டும்" என்று சுந்தரர் நாள்தோறும் இறைவரிடம் விண்ணப்பம் புரிந்து வந்தார்.

இறைவன் அடியார்களுக்கு அருளும் அருட்டிறம் எத்தனையோ விதம். சூலை நோய்க்கும் திருவருளுக்கும் தொடர்பு உளது போலும்! திருநாவுக்கரசருக்குச் சூலை நோய் தந்தது போலவே, ஏயர்கோமானாருடைய திருமேனி வருந்துமாறு கொடிய சூலை நோயை அருளினார் எம்பெருமான். சூலை வலி, அனலிடைப்பட்ட வேல் குடைவது போல் மேன்மேலும் அடியாரை வேதனை செய்தது. அதனைத் தாங்கமாட்டாத கலிக்காமர் மண்மிசை வீழ்ந்து சிவபெருமானைச் சிந்தித்து வந்திப்பாராயினார்.

"அன்பனே! உன்னை வருத்துஞ் சூலைநோய் வன்றொண்டன் சுந்தரன் வந்து தீர்த்தாலன்றி நீங்காது" என்று ஆலமுண்ட நீலகண்டர் கலிக்காமர் முன் தோன்றி மொழிந்தருளினார்.

"எம்பெருமானே! என் தந்தை, தந்தைக்குத் தந்தை, அவருடைய தந்தை என்று வழி வழியாகத் தேவரீருக்குத் திருத்தொண்டு புரிந்து வருகின்ற குடியில் வந்த அடியேனுக்கு வந்த சூலையை நீர் அண்மையில் வலிந்து அடிமை கொண்ட ஒருவனோ வந்து தீர்ப்பான்?" என்றார் கலிக்காமர்.

எம்பிரான் எந்தை தந்தை
　　தந்தை தம் கூட்டமெல்லாம்
தம்பிரான் நீரேஎன்று வழிவழி
　　சார்ந்து வாழும்

இம்பரின் மிக்க வாழ்க்கை
　　என்னை நின் றருஞ்சூலை
வம்பென ஆண்டு கொண்டான்
　　ஒருவனோ தீர்ப்பான் வந்து.

"பழைய அடியவனாகிய அடியேனுடைய இந்நோயைப் புதிய அடியவனாகிய அவன் வந்து தீர்ப்பதினும், இந்நோய் தீராது நின்று என்னை வருத்துதலே நன்று" என்று உறுதியுடன் கூறினார் நாயனார்.

மணிகண்டப் பெருமான் மறைந்தருளினார்.

மறைந்தருளிய மகாதேவர் வன்றொண்டரிடம் சென்று, "ஆரூரனே! நமது ஏவலாலே கலிக்காமனை வருத்துகின்ற சூலைநோயை நீ சென்று தீர்ப்பாயாக" என்று அருளிச் செய்தார்.

நம்பியாரூரர், "நன்று" என்று மகிழ்ந்து இறைவரை இறைஞ்சினார். அரனார் ஆணையைச் சிரமேல் தாங்கி ஆலால சுந்தரர் கலிக்காமனாரிடம் போவதற்குப் புறப்பட்டார். சூலை நோயைத் தீர்க்கத் தாம் வருகிற செய்தியைக் கலிக்காமருக்கு அறிவிக்கும்படி ஒருவரை அனுப்பினார்.

இறைவருடைய அருளினால் ஏற்கனவே வந்த சூலையினாலும், இறைவர் கூறிய சொற்களினாலும் வருந்திய கலிக்காமர், வன்றொண்டருடைய வரவைக் கேட்டு மேலும் வருந்தினர். 'தூதனுப்

எம்பிரானை ஏவிய ஒருவன் வந்து என் சூலையைத் தீர்க்கும் புன்மை இங்கு எனக்கு எய்தலாமா? அதை நான் பொறுப்பேனா? அவன் இங்கு வந்து எனது சூலைநோயைத் தீர்ப்பதன் முன்னர் என்னைப் பற்றி நின்று வருத்தும் இச்சூலையை இவ்வயிற்றினோடும் கிழிப்பேன்'' என்று உடை வாளை எடுத்து, வயிற்றைக் கிழித்துக் கொண்டார். சூலையும் உயிரும் ஒருங்கே தீர்ந்தன. அத்துணை வீரமும் உறுதியும் அவருடைய அன்பில் மிளிர்கின்றன.

கலிக்காம நாயனாருடைய தேவியார் தாமும் கணவனாருடன் தொடர்ந்து சிவபதம் அடைய எண்ணினார். அப்போது ஒருவர் வந்து, ''அம்மா! நம்பி ஆரூரர் வருகிறார்'' என்று கூறினார். அடியாரை வரவேற்று உபசரிப்பது பெருங்கடமை என உணர்ந்து, ''ஆன்றோர் ஒருவர் வருகின்ற போது அழுவது முறையன்று'' என்று அழுகின்றவர்களை அழாதவாறு தடுத்து, கணவனார் திருமேனியை ஒருபுறம் மறைத்து வைத்தார் அம்மை. தமது பரிசனங்கள் மூலம் திருமாளிகையை அலங்கரிக்கச் செய்தார். பரிசனங்கள் சென்று நம்பியாரூரரை எதிர்கொண்டார்கள். ஆரூரர் அவர்களுடன் நகைமுகங்காட்டி, விருப்பத்துடன் உட்புகுந்து ஆசனம் மீது அமர்ந்து முகமலர்ந்து இருந்தருளினார். அவருடைய திருவடிகளை விளக்கி அருச்சனை புரிந்தார்கள்.

''ஐயன்மீர்! கலிக்காமனார் எங்கே? அவருடைய சூலையைத் தீர்த்து அவருடன் இருப்பதற்கு விரும்பி வந்திருக்கிறேன்'' என்று சுந்தரர் கூறினார்.

''அண்ணலே! கலிக்காமனாருக்குத் தீங்கு ஒன்றுமில்லை. உள்ளே பள்ளி கொண்டிருக்கிறார்'' என்று அம்மையார் உத்தரவுப்படி பரிசனங்கள் கூறினார்கள்.

''அவருக்குத் தீங்கு இல்லையென்றாலும், என் மனம் மருள்கிறது. அவரைக் காண வேண்டும்'' என்று சுந்தரர் அருளிச் செய்தார்.

சுந்தரருடைய சொற்களைக் கேட்ட அவர்கள் வேறு வழியின்றி, கலிக்காமனாரின் உடலத்தைக் காட்டினார்கள். குடர் சரிந்து, குருதி சோரக் குடல் சோர்ந்து அவர் மாண்டு கிடந்ததைக் கண்டார் சுந்தரர். ''ஆ! ஆ! புகுந்தவாறு நன்று. இவருடன் அடியேனும் தொடர்ந்து செல்வேன்'' என்று கூறி, வருந்திய மனத்துடன் உடைவாளைப் பற்றினார்.



கண்ணுதற் பரமன் கருணையினால் கலிக்காமனார் அக்கணமே உயிர் பெற்று எழுந்து, ''கேளிரைக் காணப் பெற்றேன்'' என்று கூறி வாளைப் பற்றிக் கொண்டார். ஆரூரர் மண்மிசை வீழ்ந்து கலிக்காமனாரை வணங்கினார். கலிக்காமனாரும் சுந்தரர் அடிமலர் மிசை வீழ்ந்து வணங்கினார். இருவரும் எழுந்து ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டார்கள். இடையறாத அன்புடன் நட்பு கொண்டு, திருப்புன்கூர் சென்று சிவலோகநாதர் சேவடிகளைப் போற்றினார்கள். ஆரூரர், ''அந்தணாளன்'' என்று தொடங்குகிற திருப்பதிகத்தைப் பாடியருளினார். தம்பிரான் தோழர் சில நாட்கள் திருப்பெருமங்கலக் குடியில் தங்கியிருந்தார். பின்னர் அவர் திருவாரூருக்குப் புறப்பட்டார். கலிக்காமனாரும் அவருடன் சென்று திருவாரூரில் எழுந்தருளியுள்ள தேவாதி தேவனை வணங்கினார். சில பகல் கழிந்தபின் ஆரூரரிடம் விடைபெற்றுத் திருப்பெருமங்கலக்குடி வந்து சேர்ந்தார். பற்பல தொண்டுகள் புரிந்து விடையவன் அடிமலர் சேர்ந்து இன்புற்றார் கலிக்காமர். (தொடரும்)



சென்னை ஸ்ரீ P. M. சுப்ரமணியம் அவர்களின் குமாரத்தி சௌபாக்ய வதி S. ருக்மணிக்கும், சித்தூர் ஸ்ரீ V. S. ஞானேஸ்வரன் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி V. G. பூபதி B. A. அவர்களுக்கும் சென்னையில் சமீ பத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !



# பெண்கள் இருவர்

ரா. வெங்கடசாமி

காலையில் எட்டு நாற்பது வண்டியைப் பிடித்தால் ஆத்தூருக்குப் பத்தே கால் மணிக்குப் போய் விடலாம். அன்று வெள்ளிக்கிழமை. பஸ்ஸில் ஏறி உட்கார்ந்த நான் பேப்பரைப் பிரித்தவாறு, பஸ் புறப்படும் நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அன்றைக்கு என்னவோ பஸ் நிறையவில்லை. அதனால் இடையில் இருந்த ஊர்களுக்கெல்லாம் டிக்கெட் தாராளமாகத் தரப்பட்டது. கும்பல் அதிகமாக இருக்கும்போது, ஆத்தூருக்கு மட்டுமே டிக்கட் கொடுக்கும் கண்டக்டர், இன்று சற்று வருத்தத்தோடுதான் காணப்பட்டான். வருவாய் குறைந்தால், முதலாளிக்கு அவன்தானே பதில் சொல்லியாக வேண்டும்?

டிரைவர் தனது ஆசனத்தில் ஏறி அமர்ந்த பின், கண்டக்டர் பஸ் புறப்படுவதற்கு 'ரைட்' கொடுத்த பின் அவசரம் அவசரமாக ஓடிவந்த ஒரு பெண், ''ஆத்தூருக்கு ஒரு டிக்கட் கிடைக்குமா?'' என்று கேட்டாள்.

''ஏறுங்கள்...'' — கண்டக்டர் காத்துக் கொண்டிருக்கிறானே. மேலும் பணிவாகப் போக வேண்டிய நேரமல்லவா இது? கும்பல் மட்டும் இருந்திருந்தால், கண்டக்டர் பெண்ணிடம் எவ்வளவு இளப்பமாகப் பேசியிருப்பான் என்று எனக்குத் தெரியாதா?

அவளும் வண்டியில் ஏறி எனக்கு எதிராக இருந்த சீட்டில் உட்கார்ந்தாள். அந்த இடத்தில் அவளுக்குப் பக்கத்தில் ஏற்கனவே இரண்டு பெண்கள் அமர்ந்திருந்தார்கள். குரல் காதில் விழுந்ததே தவிர நான் முதலில் அவளைக் கவனிக்கவில்லை. அவள் வண்டியில் அமர்ந்த பின்தான் அவளை நிமிர்ந்து பார்த்தேன். தெரிந்த முகம்!

வண்டி புறப்பட்டு விட்டது.

அவளும் டிக்கட் வாங்கும் மும்முரத்தில் என்னைக் கவனிக்கவில்லை. அழகிய லட்சுமிகரமான முகம். முகத்தில் பூசியிருந்த மஞ்சளும் வைத்திருந்த குங்குமமும் ஒன்றுடன் ஒன்று போட்டி போட்டுக் கொண்டு பிரகாசித்தன. தேவையான நகைகள். அடக்கமான தோற்றத்துக்குத் தகுந்த சேலையும் ரவிக்கையும்! வயது இருந்தால் முப்பத்தைந்துக்குள் இருக்கும். இப்படிப்பட்ட பெண்ணுக்கு என்ன குறை என்று பார்ப்பவர்கள் நினைக்கலாம். ஆனால் தெரிந்தவர்களுக்குத்தான் தெரியும், அவளுக்கு எவ்வளவு பெரிய குறை இருக்கிறதென்கிற விஷயம்!

தெரிந்த முகம் என்றுதானே சொன்னேன்? ஆம்! எனக்கு நன்றாகத் தெரிந்த ஒருவரின் மகள். இவள் பெயர் பங்காரு!

கடந்த பதினைந்து ஆண்டுகளாக அவள் தன் கணவருடன் வாழவில்லை!

இதைவிட ஒரு பெரிய குறை எந்தப் பெண்ணுக்காவது தேவையா? எல்லாம் இருந்தும் கணவன் இல்லையென்றால்?

ஆரம்ப காலத்தில் அவர்கள் குடும்பத்துடன் பழகியவன் என்ற காரணத்தால் அப்போது விவரம் கேட்டுப் பார்த்தேன்.

“குழந்தை இல்லை என்று கணவன் தள்ளி வைத்து விட்டான்” என்றார்கள்.

குழந்தை இல்லை என்பதற்காக மனைவியைத் தள்ளி வைப்பானேன்? இருவரும் சேர்ந்து ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொண்டால் போயிற்று என்று என்னுடன் சேர்ந்து பலர் யோசனை சொன்னார்கள். சம்பந்தப்பட்டவர்களோ அதைக் காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை. இது சகஜம் என்ற தோரணையில் பேசாமல் இருந்தார்கள்.

கணவனுடன் வாழாதவள் ஜீவனாம்சம் கோரி வழக்குப் போட்டு வீண் கலாட்டாவும் செய்யவில்லை. ஏனெனில் பிறந்த இடமும் செல்வாக்கான இடம்தான்! அந்த ஒரு காரணத்தால் அவள் காதுபட யாரும் மலடி, வாழாவெட்டி என்று அவளை ஏசவில்லை! ஏழைகளுக்குத்தானே அந்தச் சுமையும் உடன் சேரும்?

எந்த வழியிலும் தீராத இவர்கள் பிரச்னைக்குக் காரணம் குழந்தையாக இருக்க முடியாது என்றுதான் நான் முடிவு கட்டினேன். தெரிந்தவர்கள் என்ற ஒரே காரணத்துக்காகக் கிளறிக் கேட்காமல் விட்டு விட்டேன்.

ஆரம்பத்தில் இருந்த சுறுசுறுப்பும் பேச்சு வார்த்தைகளில் காட்டிய அக்கறையும் நாளடைவில் தேய்ந்து விட்டன போலத் தெரிந்தது. மறைந்தே விட்டன என்றுகூடச் சொல்லலாம்! இவளுக்குத் தாய் வீடுதான் நிலையான இடம் என்றாகி விட்டது. முடிவு ஏற்பட்டுவிட்ட ஒரு விஷயத்துக்கு யாரும் புது ஆரம்பம் போடாததால் கால ஓட்டத்துக்கு மதிப்பளித்துப் பேசாமல் இருந்து விட்டார்கள். நான்கூட அந்த விஷயங்களை எப்போதோ நடந்து விட்டதாக நினைத்து மறந்தே போய் விட்டேன். பல வருஷங்களாக நான் அவர்கள் வீட்டுப் பக்கம்கூடப் போகவில்லை — அவசியம் ஏற்படாதது ஒன்று. வேலை அதிகம் ஆக. இரண்டு காரணங்கள்!

இன்று அவள் தனியாக ஆத்தூருக்குப் புறப்பட்டிருக்கிறாள். ஆத்தூரில்தானே அவள் கணவர் கப்பையா நாயக்கர் இருக்கிறார்? இவள் அங்கே போவதைப் பார்த்தால்...! அவர்களுக்குள் ஒற்றுமை ஏற்பட்டுவிட்டதா? அப்படி ஏதும் இல்லாவிடில், இவளுக்குக் கணவன் வீட்டில் என்ன வேலை? இல்லை, ஆத்தூரில்தான் என்ன வேலை? போகிறவள் தனியாக ஏன் போக வேண்டும்? கொண்டு போய்விடக்கூட யாரும் ஏன் போகவில்லை? எந்த விதமான காரணமும் இல்லாமல், இவள் ஆத்தூருக்கு நிச்சயம் போகவே மாட்டாள்!

அக்கணத்தில் என் மனம் எல்லாவற்றையுமே அறிந்து கொள்ளத் துடித்தது.

கையிலிருந்த பத்திரிகையைத் தாழ்த்தி அவளைப் பார்த்தேன். அவள் எங்கோ வெளியில் பார்த்துக் கொண்டிருந்தாள். பரபரப்பு அடங்கிய நிலையில், அவளது முகத்தில் இப்போது அளவுக்கு அதிகமான சோகம் குடி கொண்டிருந்தது. வெளிவரப் பயமுறுத்தும் கண்ணீரை அடக்கிக்கொள்ளுவதற்காக அவள் வெளியில் பார்ப்பதைப் போல் நடிக்கிறாள் என்பதை நான் அறியாமல் இல்லை. அவளிடம் பேச்சுக் கொடுத்தால் நிலைமை என்னவென்று தெரிந்து விடும். ஆனால் சூழ்நிலை சரியாக இல்லை. பக்கவாட்டிலும் எதிரிலும் பலர் அமர்ந்திருந்தார்கள். அவர்களைத் தாண்டி, அவளுடன் நான் பேசினாலும் விவரமாகப் பேச முடியாது. அந்தக் காரணத்தினால் பத்திரிகையைப் பழைய நிலைமைக்கு உயர்த்திக் கொண்டேன்.

பஸ் ஓடிக் கொண்டிருந்தது.

## காரிப்பட்டி

சேலத்திலேயே கூட்டம் இல்லாதபோது காரிப்பட்டியிலா கூட்டம் இருக்கப் போகிறது? பங்காருவின் அருகில் இருந்த பெண்கள் அங்கே இறங்கி விட்டதால், அவள் தனியாகத்தான் அமர்ந்திருந்தாள்.

காரிப்பட்டியில் ஒருவர்தான் ஏறினார். அவர் ஆத்தூருக்குத்தான் டிக்கட் வாங்கினார்.

“வாப்பா...வா...ஆத்தூருக்குத்தானே?” என்று முன் சீட்டில் இருந்த ஒருவர் குரல் கொடுக்கவே, காரிப்பட்டியில் ஏறியவர், அறிமுகப் புன்னகையுடன் அவரை நோக்கிப் பேசியபடியே நகர்ந்தார்.

“ஆமா தங்கராசு.... நம்ம கப்பையா சாகக் கிடக்கிறானாம். தபால் வந்தது.”

பஸ் ஓடிய வேகத்தில் அவர்கள் பேசிக் கொண்டது என் காதில் விழவில்லை.

கப்பையா என்றால்?

என் மனம் யூகித்தது. பங்காருவின் கணவன் பேரும் கப்பையாதானே? அதனால்தான் பங்காருவும் ஆத்தூருக்குப் போய்க் கொண்டிருக்கிறாளோ?

உலகத்தில் ஒரே பெயருடன் பலர் இருந்தாலும் அந்தப் பெயர் தங்களுக்குத் தெரிந்தவரின் பெயராக இருக்குமோ என்று எண்ணுவது மனித மனத்தின் இயல்பு! நானும் அப்போது அப்படித்தான் நினைத்தேன்.

பத்திரிகையை மடித்து வைத்தேன்.

பங்காருவின் கண்கள் கலங்கி இருந்தன. அந்தப் பெயரைக் கேள்விப்பட்டதனால் ஏற்பட்ட மாறுதல் என்பதை அறிந்துகொள்ள அதிக சிரமம் இல்லை. இந்தத் தடவை அவள் என்னைப் பார்த்து விட்டாள். இலேசாக. அதே சமயத்தில் மிகவும் சிரமத்துடன், அவள் அறிமுகப் புன்னகையை உதிர்த்தாள்.

“எங்கேயம்மா....ஆத்தூருக்கா?”—

“ஆமாம்!” என்று தலையை ஆட்டினாள்

“கணவன் வீட்டுக்கா?”

அதற்கும் தலை அசைப்பு.

பதில் சொல்ல முடியாத அளவுக்கு அவளது நெஞ்சை ஏதோ அடைத்துக் கொண்டிருக்கிறது என்பது மட்டும் எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. என்னிடம் ஏதோ சொல்ல அவள் துடிக்கிறாள் என்பதையும் அவள் கண்கள் காட்டின.

''என்ன விசேஷம்?'' என்று என்னால் கேட்காமல் இருக்க முடியவில்லை. அதற்கு அவள் பதில் சொல்லுவாள் என்று எதிர்பார்த்த நான், ஏமாந்து விட்டேன். கையில் இருந்த அழுக்குப் பையைத் திறந்து, அதிலிருந்து ஒரு கடிதத்தை என்னிடம் எடுத்து நீட்டினாள். கடிதத்தைப் பிரித்துப் பார்த்தேன். கப்பையா தன் மனைவிக்கு எழுதியிருந்த கடிதம்.

காந்தநகர், ஆத்தூர்
7–12–66

அன்புள்ள பங்காருவுக்கு,

கப்பையா எழுதியது. கடந்த இரண்டு மாத காலமாக நான் உடல் நலமில்லாமல் படுத்துக் கொண்டிருக்கிறேன். இப்போது மிகவும் மோசமாக இருப்பதாக டாக்டர் சொல்லுகிறார். சாகும் முன் உன்னைப் பார்க்க வேண்டும் போல் இருக்கிறது. ஒரு நடை வந்து விட்டுப் போ. உன்னைத் தள்ளி வைத்து விட்டதாக நீ நினைத்துக் கொண்டிருந்தால், அதற்காக என்னை இப்போது மன்னித்து விடு. சாகப் போகிறவனின் கடைசி ஆசை இது. இதை அவசியம் நீ நிறைவேற்றி வைப்பாய் என்று நம்புகிறேன். **கப்பையா.''**

(முதலாளி சொற்படி கணக்குப்பிள்ளை கந்தசாமி எழுதியது.)

எல்லாவற்றையும் மறந்துவிட்டு இதோ புறப்பட்டு விட்டாள். கடிதம் இன்று காலையில்தான் அவளுக்குக் கிடைத்திருக்கிறது. புறப்பட்டு விட்டாள். கடிதத்தை மடித்து, அவளிடம் கொடுத்துக் கொண்டே, ''நீ புறப்பட்டது உங்கள் வீட்டில் யாருக்கும் தெரியாதா?'' என்று கேட்டேன்.

பஸ்ஸில் பலர் பல விஷயமாகப் பேசிக் கொண்டிருந்ததால், என் குரல் அதிகமாக எடுபடவில்லை.

''தெரியும். என்னைத் தடுத்தார்கள். நான்தான் எதையுமே காதில் போட்டுக் கொள்ளாமல் புறப்பட்டு விட்டேன்.''

பதினைந்து வருடங்களாக ஒருத்தியைத் தள்ளி வைத்தபின், அவளைத் திடீரெனப் பார்க்க விரும்பினால், பெற்றோர்கள் அங்கே அனுப்ப எளிதில் ஒப்புக் கொள்ளுவார்களா? அவர்கள் அடைந்திருந்த வேதனை கண் மூடித் திறக்கும் நேரத்தில் மறைந்து விடுமா?

ஆனால் மனைவி?

அவள் கண்களுக்கு எல்லாமே மறைந்து விடும்; கணவன் ஒருவனின் உருவத்தைத் தவிர? அந்தக் கணவன் விரும்பினால் போக வேண்டியதுதானே! அதுவும் சாகப் போகிறவன்!

''நீ எடுத்தது நல்ல முடிவு, பங்காரு! மனித மனம் உள்ளவர்கள் யாரும் இப்படித்தான் செய்வார்கள்'' என்றேன்.

அவள் விம்முவது எனக்கு நன்றாகத் தெரிந்தது. அழுகையைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள்.



''சார், ஆக்ஸிடென்ட் ஆச்சுன்னு போலீஸிலே ரிப்போர்ட் பண்ணணும்னு தெரியாதா உங்களுக்கு?''
''ஆக்ஸிடென்டா? நான் வாங்கும்போதே இந்தக் கார் இப்படித்தானே இருந்தது.''

சற்று அழுது ஓய்ந்தபின் அவளாக விம்முவதைக் குறைத்துக் கொண்டாள். நான் இன்னும் ஏதாவது பேசினால், அவள் மீண்டும் அழ ஆரம்பித்து விட்டால் என்ன செய்வது என்ற எண்ணத்தில் நான் பேசாமல் இருந்தேன்.

அவளாகப் பேசினாள்: ''என் தந்தை என்னை வீட்டுக்குத் திரும்ப வேண்டாம் என்று சொல்லி விட்டார்கள்'' என்றாள் பங்காரு. இப்போதுதான் எனக்குப் பங்காருவின் மனநிலைக்குக் காரணம் புரிந்தது. கணவனைப் பார்க்கப் போகிறவள் அப்படியே போய்விட வேண்டும். இல்லையெனில் இங்கேயே இருந்து கொள்ளலாம். அதாவது தந்தையின் வீட்டில். தந்தையின் ஆத்திரம் குறைந்து விட்டது என்று மகள் எதிர்பார்த்ததும் தவறுதான். கணவன் உயிரோடு இருந்தாலாவது பரவாயில்லை. அங்கேயே தங்கி விடலாம்! சாகப் போகிறவன் தன் வீட்டில் இவளை இப்போது அனுமதித்தாலும், பிறகு தொடர்ந்து இருக்க மற்றவர்கள் அனுமதிப்பார்களா? என்ன இருந்தாலும் பங்காருவின் தந்தை இவ்வளவு கொடுமையாக நடந்து கொள்ள வேண்டியதில்லைதான்.

பங்காருவின் தந்தை மகளையும் பார்க்கவில்லை. மருமகனையும் பார்க்கவில்லை. தன் கௌரவம் ஒன்றைத்தான் பெரிதாக மதித்தார் போலிருக்கிறது. இல்லையென்றால், இந்த முடிவு அவர் எடுக்க வேண்டியதில்லை.

''அப்படியெல்லாம் ஒன்றும் நடந்து விடாது பங்காரு'' என்றுதான், என்னால் அவளுக்கு அப்போது ஆறுதல் சொல்ல முடிந்தது.

பஸ் ஓடிக் கொண்டிருந்தது.

## வாழப்பாடி

**வா**ழப்பாடியில் நிறையப் பேர் இறங்கினார்கள். பஸ் ஏறக்குறைய காலியாகி விட்டது. ஆத்தூர் டிக்கெட்டுகள் மட்டும் வண்டியில் இருந்தன. வாழப்பாடியில் இரண்டொருவர் ஏறினாலும், ஒரு வயதான ஸ்திரீதான் எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தாள். அந்த அம்மாளுக்குத் தலை

# டி. வி. எஸ். பஸ் பாடிகளின் புதிய கவர்ச்சியான முன் தோற்றம்

டி.வி.எஸ். தேவைக்கு உகந்த பஸ் பாடிகளை எந்தவித சேஸிஸ் மீதும்—அசோக் லேலண்டு கோமெட், பெட்போர்டு, டாட்ஜ், பார்கோ டாடா மெர்சிடீஸ் பென்ஸ், வில்லிஸ் ஜீப், ஸ்டாண்டர்டு 20—தயாரிக்கிறார்கள். அவை மிகவும் உறுதியானவை—ஆனால் லேசானவை; எடை குறைவுள்ளவை. அதனால் எண்ணெய் செலவும், டயர் தேய்வும் குறைவு; சிக்கனமானது; கரடு முரடான சாலைகளைச் சமாளிக்கும். பிரயாணிகளுக்கு மிக்க வசதி.

ஒவ்வொரு நாளும் சராசரி மூன்று பஸ் பாடிகள் கட்டுகிறோம். தேவைக்கு உகந்த கம்போசிட் முழு ஸ்டீல் பாடி, சிறிய பஸ், உல்லாஸ பஸ், எக்ஸ்பிரஸ் வான், டெலிவரி வான், பிக்-அப் வான், அம்புலன்ஸ், மூடிய அல்லது திறந்த லாரி, ஸ்டீல் டிரைவர் காபின், டிப்பர் பாடி முதலியன தயாரிக்கிறோம்.




மற்ற விபரங்களுக்கு:

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ்**
**பிரைவேட் லிமிடெட்**, மதுரை
(டி.வி.எஸ். ஸ்தாபனம்)

நரைத்திருந்தது. வயது இருந்தால் அறுபதுக்குப் பக்கத்தில் இருக்கலாம். இருப்பினும் நாட்டுப்புற மண், உடலை அந்த வயதிலும் வலுவாக வைத்திருந்தது. நாகரிகத்தின் முழுச் சாயல் விழா விட்டாலும், உடுத்தியிருந்த புடவையும், பாவனையும், கொஞ்சம் வசதியான, அதே சமயத்தில் பண்புள்ள குடும்பத்தைச் சேர்ந்தவள் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டின. கண்டக்டரிடம், ''இந்த பஸ் ஆத்தூருக்கு எப்போது போவுது? கொஞ்சம் சீக்கிரம் போனாத் தேவலே'' என்று எடுத்த எடுப்பில் அங்கலாய்த்தாள் கிழவி.

''உனக்காக முன்னால் போகாது. போகும் போதுதான் போகும். அவசரமாய்ப் போக டாக்ஸி வைத்துக் கொள்வதுதானே?'' டிக்கெட்டுகள் கிடைக்கவில்லை என்ற ஆத்திரத்தில் கண்டக்டர் கோபமாகப் பேசினான். கிழவி பதில் பேசவில்லை. டிக்கெட்டை வாங்கிக் கொண்டாள்.

''அங்கே ஒரு உசிரு சாகக் கிடக்கிறது தம்பி! அதனாலேதான்...இல்லாட்டிப் போனா எனக்கென்ன அவசரம்?'' கிழவி அவளாகவே சொல்லிக் கொண்டாள்.

அதைக் கேட்டவுடன் சட்டென்று என் மனத்தில் ஓர் எண்ணம் உதித்தது. சாகக் கிடக்கும் உயிர் என்றால் இவளும் சுப்பையாவைப் பார்க்கத்தான் போகிறாளோ ? இருக்கலாம். இருந்தால், அவருக்கு, இவள் என்ன உறவு? உறவென்றால் அருகில் அமர்ந்திருக்கும் பங்காருவை அவள் ஏன் அடையாளம் கண்டு கொள்ளவில்லை ?

வண்டி புறப்பட்டு விட்டது.

கிழவி என் அருகில் இருந்த சீட்டில் அமர்ந்திருந்ததால் பேச்சுக் கொடுப்பது எளிதாக இருந்தது.

''யாருக்கம்மா உடம்பு சுகமில்லே?'' என்று அவளிடம் கேட்டேன்.

''என் மருமவனுக்கப்பா! நான்கூடப் போக மாட்டேன். இருந்தாலும் மனசு கேட்குதா?' 'சஸ்பென்ஸ்' நிறைந்த பதில் சம்பாஷணையைத் தொடர வைத்தது.

''மருமகன் என்கிறீர்கள். நீங்கள் அவசியம் போய்த்தானே ஆகவேண்டும்?''

''ஆமா, அவன் செஞ்ச காரியத்துக்கு.... அவனைப் போய்ப் பாரு! ஏன் தம்பி நீ ஒண்ணு.... சொன்னா வயிறு எரியும். என் பொண்ணு அவனோடு ஒரு வருஷம்கூடச் சரியா சேர்ந்து இருக்கல்லே தம்பி....!''

சலிப்பாக அவள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த நான், இப்போது பங்காருவைக் கவனித்தேன். நாங்கள் பேசுவதை அவளும் கேட்டுக் கொண்டுதான் இருந்தாள். பெண் மனம் இடை வெட்டியது.

''ஏம்மா, தண்ணி வச்சுட்டாரா?'' பங்காரு கேட்டாள். எனக்குத் திருப்தி. ஆத்தூருக்குப் போகும் வரையில் பங்காருவின் கவனம் வேறு பக்கம் திரும்ப இந்தப் பேச்சுக்கள் உதவுமல்லவா ?

பேச்சுக்கள் உதவியா செய்தன?

''இல்லேம்மா, அது பெரிய கதை. என் மவளே அங்கே இருக்கப் பிடிக்காம வந்துட்டா.....''

கேள்வி எழுப்புமுன் கிழவியே தொடர்ந்தாள். இப்படிப்பட்டவர்களுக்கு வெறும் ஆரம்பம் கிடைத்தால் போதும் என்று எனக்குத் தெரியும்.

''என் பொண்ணு ரங்கநாயகி, மாப்பிள்ளையைக் கட்டிக்கிறதுக்கு முந்தியே, அவரு கண்ணாலம் ஆனவருதான். ஆனா அந்தப் பொண்ணுக்குப் புள்ளே இல்லே. ஆனா, அதுக்குத் தன் புருசன் இன்னொரு கண்ணாலம் பண்ணிக்கிறது புடிக்கல்லே. குழந்தையைத் தத்து எடுக்கலாம்னு சொல்லிச்சாம்! மாப்பிள்ளைக்கோ சொந்தப் புள்ளே வேணுங்கிற ஆசை. அதனாலே அவரு தன் பெண்டாட்டி பேச்சைக் கேட்கல்லே ! ஆம்பிளைங்க மனசு வைச்சால்தான் எதையும் செய்துக்கிட முடியுமே? அவரும் இரண்டாந்தாரம் பண்ணிக்கிறதா முடிவு செஞ்சுட்டாரு. இன்னொரு பெண்ணோட அந்த வூட்லே இருக்க முடியாதுன்னு மூத்தா, சொல்லிட்டு அவ ஊருக்குப் போயிட்டா.... இந்த விஷயம் எதுவுமே எங்களுக்குக் கண்ணாலத்துக்கு முந்தி தெரியாது. தெரியவிடல்லே அவங்க! நல்ல இடம்.... நல்ல மனுஷருன்னு சொன்னாங்க. அதனாலேதான் எங்க ஊட்டுக்காரருகூட இந்தச் சம்பந்தத்துக்கு ஒத்துக்கிட்டாரு. இப்போ அவருகூட இல்லே. கண்ணாலம் நடந்து போன பொறவுதான் என் மகள் இத்தையெல்லாம் அவர் கிட்டேயிருந்தே தெரிஞ்சுக்கிட்டா. அப்போ என் மக வயித்திலே குழந்தை. தெரிஞ்சிக்கிட்ட பிறகு என் மக என்ன பண்ணிட்டா, தெரியுங்களா?''

சஸ்பென்ஸ் நீடித்தது. கேள்வியைக் கேட்டு விட்டுத் தன் கண்களில் வழிந்த நீரைத் துடைத்து கொண்டாள் கிழவி.

''மூத்தாளை இங்கே கொண்டாந்து வைச்சால்தான் அந்த வூட்லே இருக்க முடியுமுன்னு சொல்லிட்டா. ஆமாங்க.... ரொம்ப கண்டிப்பாச் சொல்லிட்டா. அந்தப் பொண்ணுதான் இரண்டாந்தாரமே வேண்டாம்னு சொன்னவளாச்சே. இங்கே வருவாளா? என் மக, கண்டிப்பா சொல்லிட்ட உடனே மாப்பிள்ளையும், அவளைச் சமாதானப்படுத்திக் கூட்டியார நேரிலேயே போனாராம்! ஆனா முதல் தாரம் வர முடியாதுன்னு சொல்லிட்டாளாம்! அவ என்ன சொன்னா தெரியுங்களா? சக்களத்தியை அனுப்பிடுங்க, நான் அங்கே வரேன்னாளாம்! கதை எப்படியிருக்குது பாத்தீங்களா ? என் மவ அதுக்கு மேலே பேசாமத்தானே இருக்கணும்? அவ பேசாம இல்லீங்க. மூத்தாள் இல்லாத இடத்திலே நானும் இருக்கல்லேன்னு எங்க வூட்டுக்கு வந்துட்டா. யார் சொல்லியும் கேட்கல்லே ! நானும், அவரும் எவ்வளவோ புத்தி சொல்லிப் பார்த்தோம். எங்க மவ அசைகிற மாதிரியே இல்லே. புருஷனும் சலிக்காம வந்து கூப்பிட்டுப் பாத்தாரு. அவர் மனசு கஷ்டப்பட்டதுதான் மிச்சம். 'இத்தனை நடை 'அங்கே' நடந்திருந்தா அக்கா வந்திருப்பாங்க'ன்னு என் மவ அவர்கிட்டே சொல்லிட்டா. எனக்கும் அது நியாயமாத்தான் பட்டது. ஆனா மாப்பிள்ளை கேட்கல்லியே! அதனாலேதான் எனக்கு அவரு பேரிலே

ஆத்திரம் என் பொண்ணை வாழ வைக்க அவர் எதையும் செஞ்சிதானே ஆகணும்? 'ஒருத்தி நிம்மதியில்லாம இருக்கும்போது நான் மட்டும் புருஷனோட எப்படியம்மா இருக்க முடியு'முன்னு என் மக கேட்டா... அதுக்கு நாங்க என்ன பதில் சொல்ல முடியும்? குழந்தை ஒண்ணைப் பெத்துப் போட்டுட்டு, அவ போக வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்துட்டா. எவ்வளவோ வருஷமாச்சு.'' கிழவி அழுது கொண்டே மெல்லிய குரலில் கதையை முடித்தாள். பல முறை இதே கதையைப் பலரிடம் சொல்லிப் பழக்கப்பட்டதால், அவள் குரலில் தடை ஏதும் இல்லை. பங்காரு அழுது கொண்டிருந்தாள்.

''குழந்தை என்ன ஆயிற்று ?'' நான் கேட்டேன்.

''அவன் என்கிட்டேதான் இருக்கான். பதினஞ்சு வயசாச்சு. அப்போ அப்போ தகப்பனைப் போய்ப் பார்த்துட்டு வருவான்.''

''இப்போது அவனை அழைத்துக் கொண்டு வரவில்லையா ?''

''அவன் பெத்துநாய்க்கன் பாளையத்திலே தான் இருக்கான். தகவல் போயிருக்கும். அவனும் இந்தப் பஸ்லிலேதான் அநேகமா வரணும்'' என்றாள்.

இதற்கு மேல் இன்னும் என்ன விவரம் தேவை ?

''நீ ஏம்மா அழுவறே....? நான்தான் அழப் பொறந்தவ'' என்றாள் கிழவி.

பங்காருவின் அழுகை இன்னும் அதிகமாகியது. அதற்கு மேல் கிழவிக்கு விஷயம் தெரியாமல் இருக்க வேண்டாம் என்று நினைத்த நான், பங்காரு யார் என்பதை விளக்கினேன்.

அதிர்ச்சியினால் தாக்கப்பட்டுத் தன் மகளின் சாவுக்குக் காரணமானவளைத் திட்டித் தீர்ப்பாள் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனால் என்ன ஏமாற்றம்? கிழவி அமைதியாக அவளைப் பார்த்துக் கொண்டே யிருந்தாள். புயலை எதிர்பார்த்த இடத்தில், காற்றின் வாடையே இல்லாமல் போனால்......?

பஸ் ஓடிக் கொண்டிருந்தது.

## பெத்துநாய்க்கன்பாளையம்

கிழவியின் வாக்குப் பொய்க்கவில்லை. பேரன் அந்தப் பஸ்ஸுக்காகத்தான் காத்துக் கொண்டிருந்தான். ''பாட்டி!'' என்று அழைத்துக் கொண்டு உள்ளே வந்தபோது, எனக்கு அவன் யார் என்று புரிந்து விட்டது. பங்காருவும் கண்களைத் துடைத்துக் கொண்டு அவனை ஆசை தீரப் பார்த்தாள். பையன் 'ராஜா'வைப் போல் இருந்தான்.

''என்ன பாட்டி அப்பாவுக்கு?'' என்று அவன் தன் பாட்டியிடம் கேட்டான். பங்காருவை அவன் கவனித்ததாகவே தெரியவில்லை.

''போனுத்தான் தெரியும்.'' அவள் பதில் அவனுக்கு ஏமாற்றத்தைக் கொடுத்துவிட்டது. ''ஊருக்குப் போறதுக்கு முன்னலே ஒரு

### அவன் செய்த பாவம்!




தியோடர் எலியட்ஸ் என்ற கடற்படை வீரன் தான் செய்த ஒரு பெரிய தவற்றுக்குப் பிராயச்சித்தமாக சாமியாராக மாறிவிட்டானும்.

அவன் செய்த பாவம்:

தான் வாங்கிய லாட்டரிச் சீட்டு ஒன்றைத் தன் மாமியாருக்குப் பரிசாகக் கொடுத்தான். அந்த லாட்டரிச் சீட்டு மாமியாருக்கு ஒரு பெருந் தொகையைப் பரிசாக அளித்துவிட்டது.

இது நடந்தது மாஸ்கோவில். —பாபு

---

சம்சாரம் சொல்லணும். உனக்குச் சேலத்திலே ஒரு அம்மா இருக்கான்னு சொல்லியிருக்கேனில்லே ?''

''ஆமா....!''

பங்காருவைக் கிழவி சுட்டிக்காட்டி, ''அவ தான் இவ. இனிமே உன் அம்மா இவதான்'' என்று கூறினாள்.

ஒருவிதமான பாச உணர்ச்சியோ பற்றோ இல்லாமல் கிழவி பங்காருவைச் சுட்டிக் காட்டியது எனக்கு வியப்பாக இருந்தது. பையன் பங்காருவைக் கும்பிடவே அவள் அவனைத் தன்னிடம் இழுத்து உட்கார வைத்துக் கொண்டாள். பஸ் என்றும் பாராமல் !

''குழந்தைதான் வேணும். அவனோட அம்மா வேண்டாமுன்னு அப்போ சொன்னியில்லே... உன் வாக்குப்படியே எல்லாம் நடந்துருச்சி'' என்றாள் கிழவி.

எவ்வளவு வருத்தத்தை அவள் அடக்கிக் கொண்டு இம்மாதிரிப் பேசுகிறாள் என்று என்னால் யூகிக்க முடிந்தது.

''அம்மா!'' என்று கேவியபடியே பங்காரு கிழவியின் கைகளைப் பற்றிக் கொண்டாள். அவளால், கிழவிக்கு என்ன சமாதானம் சொல்லிவிட முடியும்?

பஸ் ஓடிக் கொண்டிருந்தது.

## ஆத்தூர்

அவர்கள் இறங்கி கப்பையா நாயக்கரின் வீட்டுக்குப் போகக் குதிரை வண்டியில் ஏறப் போகும் முன்னே அந்தத் துக்ககரமான செய்தி கிடைத்து விட்டது. அழுகை அங்கேயே ஆரம்பமாகி விட்டது.



- ☐ தொடர் நாவலும் முழு நாவலும்
- ☐ நங்கநல்லூர் கோயில்
- ☐ தடுப்பு மருந்து உண்டோ?

''கல்கி'' வெள்ளிவிழாப் பரிசு நாவல்களைத் தேர்ந்தெடுக்கக் கூட்டப்பட்ட குழுவினர் தங்கள் கடமையைச் செவ்வனே இலக்கிய வளர்ச்சி நாட்டம் ஒன்றே குறிக்கோளாக மற்றப் புறம்பான போக்குக்கு இடம் தராமல், நல்லதொரு நாவலான ''முள்ளும் மலரை'' முதல் பரிசுக்குத் தேர்ந்தெடுத்தமைக்காக அவர்களை எப்படிப் பாராட்டினாலும் தகும்.

வெளிப் பார்வைக்கு முரடாகத் தோற்றம் கொண்டிருந்தாலும், மலர் போன்ற மிருதுவான இதயத்தைக் கொண்டிலங்கும் மங்கா, தியாகச் சிகரமாக, கதை முடிவில் நம் மனத்தில் இடம் பெறுவது மிகப் பொருத்தமான, இயற்கையான ஒரு முடிவே.

''நாவல் நெடுக ஆசிரியர், கதாபாத்திரங்களின் உரையாடல்களை, உயிர்த் துடிப்புடன் வெகு இயற்கையாக உருவாக்குவதில் அரிய வெற்றி பெற்றிருக்கிறார்.

கதை நிகழும் களமாகத் திகழும் காட்டை அதன் மோகன வசீகரத்தை, இயற்கையின் கம்பீரமான வனப்பை, சீறிப் பாயும் அருவியை, அமைதி அரசு ஓச்சும் ஆரண்ய அழகுகளை யெல்லாம் எவ்வளவு அற்புதமாக எழுத்திலே வடித்துக் காட்டிவிட்டார் நாவலாசிரியர்!

எளிமையான வாழ்வில், உண்மையான மனநிறைவு காணும் சராசரி மனிதர்களை, ஆண், பெண்களை, கதாபாத்திரங்களாக்கி, இயற்கைக்குப் புறம்பான நிகழ்ச்சிகள் ஏதுமின்றி, உயிர்த் துடிப்பும், லட்சிய வெற்றியும் கொண்ட உன்னதமான இலக்கியமாக, ஒரு முழு நாவலை மிகவும் வெற்றிகரமாகப் படைத்துள்ளார் கதாசிரியர் ''உமா சந்திரன்''.

திருப்பூர்
10-4-67 — பி. சின்னசாமி பி. ஏ.

புத்தாண்டு மலரில் ஏ. எஸ். ராகவன் எழுதிய 'உதிரிப்பூ' ஒப்பற்ற படைப்பு. பெண்களே புதிரானவர்கள் என்பதை நீரோட்டம் போல விவரித்திருக்கும் 'பாணி' அருமை.

திருச்சி
14-4-67 — சி. நீலமேகம்

உதிரிப் பூவின் நிமித்தம் தொடங்கிய கதை, உதிரிப் பூவான ஆனந்தக் கண்ணீரில் முடிந்தது மிகவும் பாராட்டக்கூடியது. ஆம்! உதிரிப்பூ இல்லாவிட்டால் மாலை ஏது? மகிழ்வு தான் ஏது? கதையின் முடிவு அபாரம்.

கோட்டை மருதூர்
12-4-67 — வி. கணபதி

சென்னை மீனம்பாக்கத்தை அடுத்த நங்கநல்லூர் காலனியில் மகா வரப்பிரசாதியாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வரசித்தி விநாயகர் கோவில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அவர்களின் பரிபூரண அநுக்கிரகத்துடன் மூன்று ஆண்டுகளுக்கும் முன்பு நிர்மாணிக்கப்பட்டது. கோவில் முகப்பில் மகா மண்டபத்துக்கான அடிக்கல்லைச் சென்ற வருஷம் நாட்டினார்கள். ''பெரியவாள்'' தொடங்கிய வேலையைத் தொடர்ந்து மண்டபத்தைக் கட்டும் பணியை மேற்கொள்ளுவதென்றும், அண்மையில் நிகழவிருக்கும் கும்பாபிஷேக மூன்றாவது ஆண்டு பூர்த்தி மஹோத்சவத்தை யொட்டிப் பல பேரறிஞர்களின் அரிய கட்டுரைகள் அடங்கிய விசேஷ மலர் ஒன்று வெளியிடுவதென்றும் கோவில் நிர்வாகத்தைப் பராமரித்து வரும் ஸ்ரீ கணேஷ் மண்டலியினர் முடிவு செய்துள்ளனர். இதற்கெனப் பதினொரு உறுப்பினர்கள் கொண்ட தனிக் குழு ஒன்றும் நிறுவப்பட்டுள்ளது. திருப்பணிக்கு ஏறக் குறைய ரூ. 10,000 செலவாகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இப் புனித கைங்கரியத்தில் ஆஸ்திகப் பெருமக்கள் அனைவரும் ஈடுபட்டுத் தங்களாலியன்ற அளவு ஆதரவும் பேருதவியும் அளிக்க வேண்டும். நிதி அனுப்ப வேண்டிய முகவரி: எம். பி. ஸ்ரீநிவாஸன், (தலைவர், விசேஷ மலர்க் குழு) ''பாரிஜாதம்' 4, 1வது பெருஞ்சாலை, நங்கநல்லூர் காலனி, சென்னை-61.

வாரந்தோறும் 'கல்கி' இதழின் முகப்பும் உள்ளடக்கமும் கண்ணியம் மிகுந்த தமிழ் மரபின் பிரதிபலிப்பாய்த் திகழ்கின்றன. 'கல்கி' சம்பந்தப்பட்ட வரையில் இதில் ஒன்றும் புதிது இல்லாவிட்டாலும், மாறிய இன்றைய விபரீதமான சூழ்நிலையில் இது போன்ற ஏடுகளைக் காண்பது அரிதாகிவிட்டதால், தரம் இழக்காமல் அன்று போன்றே இன்றும் பொலிவுறும் 'கல்கி'யைக் குறிப்பிட்டுப் பாராட்டாமலிருக்க முடியவில்லை.

துல்லிய வெள்ளை வேஷ்டியில் களேபரமாய் மசியைக் கொட்டுவது போல், படாத பாடுபட்டு இறக்குமதி செய்யும் வெள்ளைத் தாளில், பக்கத்துக்குப் பக்கம், படம், எழுத்து இவற்றில் பாலுணர்ச்சியைக் கொட்டி விற்பனை எண்ணிக்கையைப் பெருக்கிக் கொள்ளப் பத்திரிகைகள் பலவும் போட்டி போடும் நிலையில் இந்தக் 'கொள்ளை நோய்' கல்கியைப் பிடிக்காமலிருப்பது எப்படி? ஏதாவது 'தடுப்பு மருந்து' வைத்திருக்கிறீர்களா என்ன?

சென்னை
12-4-67 — பொன்னித் துறைவன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

## புது அழகுடன் விளங்க

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள்

### சருமத்தைப் பட்டுப்போல் மிருதுவாக வைத்துக்கொள்ளுங்கள்




வெண்பனி போன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை உபயோகித்து உங்கள் சருமத்துக்கு புதுப் பொலிவை அளியுங்கள். பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முகத்தில் கரும்புள்ளிகள் தோன்றுவதைத் தடுத்து, எண்ணெய் வழியும் தோற்றத்தை மாற்றி சருமத்தில் வெயிலினாலும் காற்றினாலும் வறட்சியேற்படாமல் பாதுகாப்பளிக்கும். பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை மட்டுமே உபயோகித்தால்கூட முகம் பட்டுப்போல் விளங்கும். அதன் மீது பவுடரும் போட்டுக்கொண்டால் பவுடர் ஒரே சீராகப் படிந்து மணிக்கணக்கில் அப்படியே கலையாமல் இருக்கும்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி




தன்னிகரில்லாச் சிறப்பு! கண்ணைப் பறிக்கும் வெளுப்பு! துப்புரவான தூய்மை! எல்லாம் ஸர்ப் செயல், எல்லைமீறிய வல்லமை, கரைகடந்த நுரைவளம், சலவையே வெகு எளிது. ஆம், சிறுவர் உடை முதல், சட்டை, சேலைவரை எல்லாத் துணிகளையும் கைப்பட வீட்டிலேயே சலவை செய்துகொள்ளச் சாலச் சிறந்தது ஸர்ப்!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

SU. 45-140 TM

இந்துஸ்தான் லீவர் தய